**கவிமணிக்குக் காணிக்கை**
**இந்நூல்**

எண்ணுள் நிறைந்தேன் இதயத்தே வீற்றிருக்கும்
கண்ணுள் மணியாம் கவிமணியின் — நண்ணுபதம்
பேணிக்கை கூப்பிப் பேரிது(உ)வந் திந்நூலைக்
காணிக்கை வைத்தேன் கனிந்து.

சதாசிவம்

# முகவுரை

செந்தமிழ் வழங்கிய சேர நன்னுட்டின் சிறுவரலாருென்று எழுதவேண்டுமென்ற ஆசை சில காலமாக இருந்து வந்தது. அதற்காகக் கற்கவேண்டிய நூல்களைக் கற்றேன்; பார்க்கவேண்டிய இடங்களைப் பார்த்தேன்; காணவேண்டிய பெரியார்களையும் கண்டேன். இங்ஙனம் பைந்தமிழ்ச் சோலையில் உலவி வரும்போது கண்ணுக்குத் தென்பட்டது ஓர் கற்பகத் தரு. ஆம்; அது கற்பகத் தருவேதான்; உலவித் திரியும் தெய்விகத் தரு. தேவலோகத்துத் தருவைப் பற்றிய அனுபவம் எனக்கில்லை. ஆனுல் இந்தக் கற்பகம் சேர்ந்தார்க்கெல்லாம் கணக்கு வழக்கின்றி கல்விப் பொருளைக் கனிந்தளிக்கிறதென்பது என் அனுபவம். பசிவேட்கையுற்று நின்ற நான் பிடியரிசி பெற்றேன். அதுவே என் வேட்கை தணிக்கப் போதியதாயிற்று. மறப்பெனும் கள்வன் கவர்ந்தனபோக எஞ்சியதைச் சமைத்து உங்கள் முன் வைக்கின்றேன். இதில் குற்றம் குறைகள் காணப்பட்டால் முறையாக எடுத்து எனக்கு உணர்த்த வேண்டுவது அறிஞர் கடன். என் கடன், அக்கற்பகத்தை - கருமணியை - **கவிமணி**யை வந்தித்து வாழ்த்திச் சிந்தையில் வைத்துப் பூசித்தலாம்

சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சித்துறைத் தலைவராயிருந்து ஓய்வுபெற்றிருக்கும் ராவ்சாகிப் **S. வையாபுரிப் பிள்ளை** அவர்கள் இதற்கோர் அரிய முன்னுரை உதவினுர்கள். அவர்கள் தமிழாராய்ச்சியையே தம் பொழுதுபோக்காகக் கொண்டவர்கள்; பேரறிவு வாய்க்கப் பெற்றவர்கள். அத்தகைய பிள்ளையவர்களிடமிருந்து முன்னுரை பெற்றதை ஓர் பேருகவே கருதுகின்றேன். அன்னுர்க்கு என் உளங்கனிந்த வணக்கம் உரியதாகும்.

என்னை எழுத்தறிவித்து இந்நிலைக்காளாக்கியவர் பண்டித **தா. சால்தாங்குட்டிப் பிள்ளை**யவர்கள். அவர்கள் பொன்னடிகளையும், தோன்றுத் துணையாயிருந்து உதவியருளும் இறைவன் திருவருளையும் சதா வாழ்த்தி வணங்குகின்றேன்.

லீத் தெரு,
நாகர்கோவில்,
23-3-1949.

சே. சதாசிவம்

மு. வரதராசன்,
தமிழ்ப்பேராசிரியர்.

செல்லம்மாள் தெரு,
சென்னை—10,
15-4-'54.

அன்புடையீர்,

வணக்கம்.

தாங்கள் அனுப்பிய 'சேரநாடும் செந்தமிழும்' என்ற நூலும் கடிதமும் பெற்று மகிழ்ந்தேன்.

இலக்கியப் பயிற்சியும் வரலாற்றுப் பயிற்சியும் சேர்ந்தமைந்த ஆராய்ச்சியறிவு கொண்டு நல்ல நூல் எழுதினீர்கள். தாங்கள் தாய்நாட்டுக்கும் தாய்மொழிக்கும் செய்துள்ள நல்ல தொண்டு என்று இதைப் போற்றுகிறேன்.

இந்த உலகில் உண்மை மதிப்பிழக்கும்போதெல்லாம் உள்ளம் வேதனையுறுகிறது. அரசியல் எழுச்சியும் வீழ்ச்சியும் எப்படியிருந்தாலும் மலையாள நாட்டார் தங்கள் நாட்டு வரலாற்றின் உண்மையையாவது உடன்படக் கூடாதா? தமிழர் அரசியலில் செல்வாக்குப் பெற்று ஒன்றுபட்டுச் செயலாற்றும் இனமாகத் திகழ்ந்தால் அல்லாமல், வரலாற்று உண்மையும் மதிக்கப்படாது போலும்! நூலின் முடிவில் தாங்கள் குறித்துள்ள திருவள்ளுவரின் மணிமொழியை எண்ணிக் கடமையைச் செய்வதே கடமையாகும்.

முன்னுரையில் திருவாளர் பிள்ளை அவர்கள் விரும்பியவாறு இந்நூலை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்தல் இன்றியமையாதது.

தங்கள் அன்புக்கு நன்றி.

அன்புள்ள,

மு. வரதராசன்.

# மூன்ரும் பதிப்பின் முகவுரை.

இவ்வேளிய சிறிய ஏட்டின் மூன்ரும் பதிப்பு இதோ வெளிவருகின்றது. திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகம், அண்ணுமலைப் பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக் கழகம் என்பன முறையே இடைநிலைக் கல்லூரி வகுப்புக்கும், புலவர் வகுப்பு இடைநிலைக் கல்லூரி வகுப்புகளுக்கும், வித்துவான் வகுப்புக்கும் பாட நூலாக வைத்து ஆதரிப்பதுதான் புதுப்புது மெருகோடு இது வெளிப்பட்டு உலவுதற்குக் காரணமாகிறது. இந்நலம் குன்ருதிருக்க இக்கழகங்களுடையவும் தமிழ்ப் பெரு மக்களுடையவும் ஆதரவு இன்று போலவே என்றும் இருக்குமென நம்புகின்றேன்.

இதனைக் காணிக்கையாகப் பெற்றவரும், இதற்கு முன்னுரை வழங்கியவருமான இரு பெரியார்களும் இன்று புகழுடம்பையும் பெற்றுவிட்டார்கள். அவர்களுக்கு என் அஞ்சலி.

நாகர்கோவில்,
24-8-1956.

*ஆசிரியன்*

ט

Rao Sahib

*M. Ragava Iyengar,*

PROFESSOR OF TAMIL.

UNIVERSITY OF TRAVANCORE

TRIVANDRUM

Date: 7—5—1949

தாங்கள் விடுத்த "சேர நாடும் செந்தமிழும்" என்ற நூலின் பிரதி கிடைக்கப் பெற்றேன். நூன் முழுதும் படித்தேன்.

சேர நாட்டுக்கும் தமிழ் மொழிக்கும் உள்ள தொடர் பைச் சிறந்த ஆராய்ச்சி காட்டித் தாங்கள் விளக்கியிருப்பது தமிழ் மக்கள் படித்து உவக்கத்தக்கது. பிரமாணங்கள் வாயி லாகவே தங்கள் கொள்கை யாவும் நிறுவப்பட்டிருத்தலைப் பெரிதும் பாராட்டுகிறேன். உண்மைச் சரித்திரங்களாகக் கொள்ளற்குரியன அத்தகையவே. என் கருத்துக்கள் பல அங்கங்கே எடுத்துக் காட்டப்பட்டவற்றையும் கண்டேன். தங்கள் கொள்கைகள் பெரும்பாலனவற்றை யானும் தழுவிய வனே. இஃது யானெழுதியுள்ள மலைநாடு பற்றிய கட்டுரை கள் பலவற்ருல் தெளிவாகும். இந்நூலுள், தாங்கள் விஷயங் களை வகுத்துக் கூறும் முறையையும் நடையமைதியையும் அறிஞர்கள் அறிந்து கொண்டாடத் தடையில்லை. நம் கவி மணியவர்கட்குத் தங்கள் நூல் உரிமை பெற்றிருப்பது சாலப் பொருந்தும். என் பார்வைக்குப் பிரதியனுப்பி மகிழ்வித்த தங்கள் அன்புடைமையை என்றும் மறவேன்.

இங்ஙனம்,

தங்கள்

மு. இராகவையங்கார் (ஒப்பு)

## 'தமிழ் முரசு'

(ஆசிரியர் - சிவஞானக் கிராமணியார்)

'திருவிதாங்கூர்த் தமிழ நிலம் மலையாளி களுடையதே' என்ற பேராசையோடு ஆதிக்க அமளி கள் நடத்தப்படும் இந்த நேரத்திலே "சேரநாடும் செந்தமிழும்" எனும் புத்தகம் வெளிவந்திருப்பது மிக வும் போற்றத்தக்கதே. இந்த நூல் திருவிதாங்கூர்த் தமிழ் நிலம் தமிழர்களுக்கே உரியதென்பதைப் பழம் பெரும் ஆதாரங்களுடன் விளக்கித் தமிழ் இனத்தவரின் ஆர்வத்தைத் தூண்டுவதற்கு மிகவும் உதவியாகும். இந்நூலில், திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை தமிழர் களுக்கு ஆக்கம்தரும் முறையில் வரைந்துள்ள முன்னு ரையும் சிறப்பாக விளங்குகிறது

நூல் உயர்தரக் காகிதத்தில் அழகாகப் பதிப் பிக்கப்பட்டிருக்கிறது. ஆழ்ந்த ஆராய்ச்சிக் கருத் துக்கள்; எளிய இனிய தமிழ் நடை. புத்தகத்தின் மதிப் பிற்கு விலை மிகவும் மலிவே. தமிழ் நாட்டு மக்களனை வரும் — குறிப்பாக ஒவ்வொரு அரசியல் வாதியும் — இந்த நூலைப் படித்தறிய வேண்டியது அவசியம்.

(1949 ஜூன் வெளியீடு)

HAWARDEN
COIMBATORE
13—12—'49

தங்களுடைய அன்பான கடிதமும் சேரநாடும் செந்தமிழும்' என்னும் புத்தகமும் வந்து சேர்ந்தன. புத்தகத்தை மகிழ்ச்சியுடன் படித்து அனுபவித்தேன். சரித்திரச் சான்றுகளையும், தமிழ் இலக்கியச் சான்றுகளையும் தாங்கள் கையாண்டிருக்கும் விதத்தை நான் மிகவும் பாராட்டுகின்றேன். சேரநாடு பண்டைக்காலத்தில் தமிழ் நாட்டின் ஒரு முக்கிய பகுதி என்னும் தெளிவான சரித்திர உண்மையை இப்போது தமிழ் மக்களுக்குச் சான்றுகளுடன் எடுத்துக் காட்ட வேண்டிய நிலைமை மிகவும் வியக்கத்தக்கது.

இப்படிக்கு
**ரா. க. சண்முகம் செட்டியார்** (ஒப்பு)

# முன்னுரை

மிக நீண்டகாலமாக நெட்டுறக்கங் கொணடு சோம்பிக்கிடக்கும் நாஞ்சில்நாட்டுத் தமிழ் மக்களை இந்நூலாசிரியராகிய நண்பர் **சதாசிவம் பிள்ளை** தட்டி எழுப்புகிறார்.

நாஞ்சில்நாட்டுத் தமிழ் மக்கள் விழித்தெழுந்து தங்கள் நிலைமையை உணர்ந்து, தங்கள் உரிமையைப் பாதுகாக்க வேண்டும் நிலைமை இப்பொழுது ஏற்பட்டு விட்டது. இவர்கள் கணிக்கத் தக்க ஓர் அங்கமாகக் கருதப்பட்டுள்ளார்களோ என்பது சந்தேகமே. திருவிதாங்கூரில் பெரும்பாலோரில் நின்றும் வேறுபட்ட சமுதாய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு பூர்வமொழியாகிய தமிழைப் பேசிச் சிறுபான்மையோராயிருக்கும் இத் தமிழ் மக்கள் அத்தேசத்துப் பூர்வகுடிகள். இவர்கள் விதேசீயர்கள் அல்லர். இவர்களது பண்டைச் சரித்திரம் பற்றி இவ்வாசிரியர் இந்நூலில் மிக ஆழ்ந்து ஆராய்ந்து பல உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளார்.

இவ்வுண்மைகளை மறைத்துவிட வேண்டும் என்ற நோக்கத்துடன் சில மலையாள ஆராய்ச்சியாளர்கள் நூல்கள் எழுதி வருகின்றனர். சமீபத்தில் திருவிதாங்கூர் ‘ஸ்டேட் மானுவேல்’ என்ற நூலைத் திருத்திப் புதுவதாக எழுதிய நண்பர் இவ்வாராய்ச்சியாளருள் ஒருவர். சரித்திர உணர்ச்சிக்கும் சரித்திர நேர்மைக்கும் இவர் முற்றும் புறம்பானவர். தமது நாடு ஒருபொழுதும் சோழபாண்டியர்கள் முதலியோர்களால் வென்று கொள்ளப்பட்டதில்லை என்ற கடைப்பிடியோடு சரித்திரம் வகுக்கத் துணிந்துள்ளார். இந்தக் கொள்கை திருவிதாங்கூர் அரசினர்க்குக் கூடப் பொறுக்க முடியவில்லை. “இப்பதிப்பில் தரப்பட்டுள்ள சரித்திரக் கொள்கைகளுக்குத் தாம் பொறுப்பாளி

கள் அல்லர்'' என அவ்வரசாங்கத்தினர் அறிக்கை செய்துள்ளார்கள். இவர் போன்ற ஆராய்ச்சியாளர்கள் விளைத்து வரும் கேடுதிக்கு அளவே இல்லை. பொய்களை அஸ்திவாரமாகக் கொண்டு எழுதிய இவரது நூல் ஒருபொழுதும் பொதுமக்களால் ஒப்புக்கொள்ளத் தக்கதன்று.

தமிழ் மக்களது வரலாறு பற்றிய அளவிலும், தமிழ் பற்றிய அளவிலும் ஓர் உதாசீனதை பல ஆண்டுகளாகத் திருவிதாங்கூரில் காணப்பட்டுவருவதேயாகும். உதாரணமாக, திருவிதாங்கூர் தொன்மை ஆராய்ச்சி இலாகாவை **(Archaeological Department)** எடுத்துக்கொள்வோம். கல்வெட்டு முதலியவைகளில் நீண்டகாலப் பயிற்சியும், சரித்திர உணர்ச்சியில் மிகுந்த ஆர்வமும், தமிழ் வடமொழி இவற்றில் நல்ல பயிற்சியுமுடைய பேரறிஞர்கள் பலர் இந்த இலாகாவில் தலைமை பூண்டு ஆராய்ச்சியை நேர்மையாக நிகழ்த்தி வந்திருக்கின்றனர். இவர்களுள் கடைசியாக வந்தவர் திரு. ஏ. எஸ். இராமநாத ஐயர். இவருக்குப்பின் இந்த இலாகா பெயரளவில் உயிர் வாழ்ந்து, பயனுள்ள வேலை யாதும் செய்யாமலிருக்கிறது. எத்தனையோ கல்வெட்டுக்கள் அங்கங்கே புதைந்து கிடக்கின்றன. எத்தனையோ கல்வெட்டுக்கள் சரித்திர விளக்கத்துடன் வெளிப்படுத்த வேண்டியனவாயுள்ளன. கல்வெட்டுக்களேயன்றி, திருவிதாங்கூர்த் தேச சரித்திரத்தை உணர்த்தும் எத்தனையோ சான்றுகள் சுவடிகளிலும், ஓலைப் பிரமாணங்களிலும் தேடுவாரற்றுச் சிதர்ந்து கிடக்கின்றன. இவ்வாறுள்ளவை பல இந்நூலில் அங்கங்கே குறிக்கப்பட்டிருப்பதைக்காணலாம். இக்கல்வெட்டுக்கள் முதலியவை மிகப் பூர்வகாலந் தொட்டுச் சமீப காலம் வரை தமிழ்மொழி அரசாங்க மொழியாயிருந்ததென்பதையும், தமிழ் மக்கள் இத்தேசத்து உத்தமாங்கமாக விளங்கி வந்தன

ரென்பதையும் நன்கு காட்ட வல்லனவாம். இவற்றை யெல்லாம் வெளிக்கொணர வேண்டுவது இந்த இலாகா வின் கடமையாகும். இக்கடமையை வற்புறுத்தி அரசிய லாளருக்குத் தெரிவித்துத் தகுதியுடையாரை நியமனஞ் செய்விக்க வேண்டுவது நாஞ்சில் நாட்டுத் தமிழ் மக்களைச் சார்ந்தது.

திருவிதாங்கூர் முழுவதும் கி. பி. 14-ம் நூற்ருண்டு வரைச் செந்தமிழ் நாடாக இருந்தது. செந்தமிழின் சிதைவு மொழியே மலையாள மொழியாகக் கிளைத்துத் தனிப்பட்ட நெறியில் வளர்ந்தோங்குவதாயிற்று. இக்கிளை மொழியுங்கூட (**Dialect**) தமிழ் எனவே முற்காலத்தில் வழங்கப்பட்டது. இராம சரிதத்திலும் கண்ணச்சப் பணிக்கர் எழுதிய பிரமாண்ட புராணத்திலும் இங்ஙனம் கூறப்பட்டுள்ளது. இராம சரிதத்தைத் **'தமிழ்க்கவி'** என்றே அதன் ஆசிரியர் கூறுகின்ருர். தமிழ்நெறிப் படியே எதுகை, மோனைகள் அமைந்த விருத்தங்களை இந் நூல்கள் ஆண்டுள்ளன. மலையாள மொழி பிரசாரத்தில் வந்த பிற்பாடும்கூடத் தமிழிலேயே அரசியற் கணக்கு முதலியனவும் அரண்மனைப் பிரமாணங்கள் முதலியன வும் எழுதப்பட்டு வந்தன.

சேர அரசர்கள் செந்தமிழ்ப் புரவலர்களாய் விளங் கிப் புகழ் பெற்றனர். சேரன் செங்குட்டுவன் முதலிய வர்கள் செந்தமிழ் மன்னர்கள். தொல்காப்பியர் பிறப் பகம் இச்சேர நாடேயாகும். பதிற்றுப்பத்து, ஐங்குறு நூறு, சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பாமாலை, முத லிய நூல்கள் சேர நாட்டினரால் இயற்றப்பட்டன. சைவ நாயன்மாருள் சேரமான்பெருமாள்நாயனரும், வைஷ்ணவ ஆழ்வார்களுள் குலசேகராழ்வாரும் சேர வமிசத்தினரே.

மலையாளத்தைத் தாய் மொழியாகவுடைய அரசர்கள் நாட்டை ஆளத் தொடங்கிய பிற்பாடும்கூட இவர்கள் தமிழ் நாட்டு அரசினரோடு பலவகையாகவுந் தொடர்பு கொண்டிருந்தார்கள். இப்பொழுது திருவிதாங்கூரைச் சேர்ந்தது என்று கருதப்படும் கன்னியாகுமரி முதலிய பிரதேசங்கள் சிலவும் 18-ம் நூற்றுண்டின் இடைப்பகுதி வரைத் தமிழ் நாட்டரசர்களுக்கு உரியவையாயிருந்தன. இங்ஙனமாகவுள்ள சரித்திரத்தை நாஞ்சில் நாட்டு மக்கள் நன்கு உணர்ந்தாலன்றி, ஆற்றலோடு வாதித்துத் தங்கள் உரிமையைப் பெறுதல் இயலாது. **இந்நூல் ஆங்கிலத்திலும் மலையாளத்திலும் மொழி பெயர்க்கப்பட்டு வெளிப்படுமாயின் மிக்க பயன் தரும்.**

நண்பர் **சதாசிவம் பிள்ளை** அசைக்க முடியாத சிறந்த சான்றுகள் காட்டி இவ்வரிய நூலை எழுதியிருக்கின்றுர். செவ்விய தமிழ் நடையில் ஆராய்ச்சி வன்மையோடு எழுதப்பெற்ற **'சேரநாடும் செந்தமிழும்'** என்ற இந்நூல் பொதுப்படத் தமிழ் மக்களுக்கும் சிறப்பாக நாஞ்சில் நாட்டுத் தமிழ் மக்களுக்கும் ஓர் அரிய விருந்து என்று ஐயமின்றிக் கூறலாம்.

சென்னை,<br>
20-3-'49.

**எஸ். வையாபுரிப்பிள்ளை.**

# உள்ளுறை

---

**விளக்கம்.**

**T. A. S.....Travancore Archaeological Series.**
**S. I. I.....South Indian Inscriptions.**

**குறிப்பு:-** சில சாசனங்களில் கிரந்தலிபியும், நாகரலிபியும் வந்துள்ளன. அந்த லிபிகள் இல்லாமையால் உச்சரிப்பு மாறுமலிருக்க அவற்றிற்குப் பதில் மலையாள லிபி கொடுக்கப்பட்டுள்ளது.

௨

# சேரநாடும் செந்தமிழும்

ஓர் அழகிய பூஞ்சோலை. கண்ணுக்கினிய காட்சி; நாவுக்கினிய கனிகள்; முகர்தற்கினிய மலர்கள்; செவியார அமுத மழை பொழியும் யாழிசை வண்டினங்கள், குயில்கள்; அலைக்கரத்தின் அணைப்பிலிருந்து நழுவித் தவழ்ந்து வரும் தென்றல் காற்று; மலையின் மடியிலிருந்து மரம் செடி கொடிகளின் நறுமணங்களை அள்ளி வாரிக்கொண்டு இடைக்கிடையே வீசும் நன்காற்று என்ற இவற்ருல் ஐம்புலனையும் இன்ப வெள்ளத்தில் ஆழ்த்த வல்ல அச்சோலை வானவர் உலகம் தானே? யாதோ?

ஆனல் ஓர் வானவன் அதை வாழ்விடமாக்கொண்டிருந்தான் என்பது மட்டும் உண்மை. அவன் தம்பியர் இருவரும் வெவ்வேறு சோலைகளில் தங்கியிருந்தனர். மூவரும் மிக்க ஒற்றுமையுடையவர். ஒரே வகையான சிந்தனை; ஒரே வகையான பேச்சு; ஒரே வகையான செயல்; மாறுபாடில்லாத குணம். இவை அவர்கள் ஒருவர் என்றே கண்டவர்களைக் கருதும்படிச் செய்தன.

ஒருநாள் மூத்தவன் சோலைக்கு மொய்குழலாள் ஒருத்தி வந்தாள். பார்த்தவரை மயக்கும் பார்வையும், பகட்டான தோற்றமும், எடுப்பான நடையும், மிடுக்கான பேச்சும், இளமையின் தளதளப்பும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற அம் மங்கையைப் பார்த்தான் வானவன். அவ்வளவுதான். தன் குல நலத்தையும் மறந்தான். அவள் வசப்பட்டான்; அவளோடு ஐக்கியமானான். அன்று முதல் அத்தெய்வத் திருச்சோலை தனக்குரிய மேன்மையை இழந்தது; பொலிவு குன்றியது.

தம்பியர் இருவரும் இதனை உணர்ந்தனர். ''அண்ணா! வானவனான நீ மானுட மங்கையை மருவுவது நீதியா? உன்னால் நம்குலத்தின் பெருமையும் பழைமையும் பாழாயினவே! இப்பொழிலின் பொலிவும் அழிந்தொழிந்ததே! வேண்டாம். நீ தேவன் என்பதை உணர், என்றும் குன்றாத இளமை நலமுடைய தெய்வ கன்னிகையை மணந்து இன்புற்றிரு'' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். உற்றாரும் சொல்லினர். என்ன பயன்?

அவன் தன் முன் நிலைமையை உணர்ந்தால் தானே. தான் ஓர் மனிதன் என்ற உணர்ச்சிதான் அவன் மனத்தை ஆட்கொண்டிருந்தது. அதனை மாற்றுவது எளிதாயிருக்கவில்லை. ஆனால் அவன் ஓர் தேவன் என்பதோ தெள்ளத் தெளிந்த உண்மை. என் செய்வார் சுற்றத்தார்; ஒரே திகைப்புத்தான்.

................**இது கதை.**

ஆனுல் தெய்வத் தென்றமிழ்ச் சேரநாடு ஒரு மலே யாள நாடாக மாறியது கதையல்ல; உண்மை நிகழ்ச்சி. இன்றே அதனை ஆதாரங் காட்டி மெய்ப்பித்தால்தான் உணர முடியும் என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. இது வருந்தத் தக்கதல்லவா? இன்று நாட்டின் வண்ணமே மாறிவிட்டது. மக்களின் எண்ணமும் மாறிப் போயிற்று. 'சேர நாடு ஓர் செந்தமிழ் நாடு' என்று நாம் சொல்கின்ற போது, "ஆம்: இதில் ஐயப்பாடு என்ன ஐயா இருக்கிறது? இதற்கு ஆதாரமும் வேண்டுமா? சூரியன் கீழ்த்திசையில் உதிக்கிருன் என்பதை மெய்ப்பிக்கப் புகுவாருமுண்டா?" என்று ஆத்திரத்தோடு கேட்கிருன் தமிழன். அதே சம யத்தில் "இதென்ன படுமோசம்! குடையைக் கொண்டு குவலயத்தை மறைக்கும் கொள்கையாக இருக்கின்றதே இது! செந்தமிழாவது சேரநாடாவது! அது எங்கோ உள்ள விவகாரம்" என்று சொல்கின்றவர்கள் இல்லாம லில்லே. இவர்கள் குரலேத் தமிழன் கேட்காததுபோல் இருந்துவிட முடியாது. அது அவன் காதுகளில் வந்து வந்து மோதுகின்றது; ஆரவாரிக்கின்றது.

காலதேவன் மிகப் பொல்லாதவன். அவன் பழைமை களை மாய்ப்பான்; புதுமைகளைத் தோற்றுவிப்பான். உண் மையை மறக்கப் பண்ணுவான்; பொய்மையைப் புனையச் சொல்லுவான். அவன் போக்குக்கு இடங்கொடுத்துவிட்ட வர்களை எங்கோ கொண்டு சேர்த்து விடுவான். அவனு டைய திருவிளையாடல்கள் மிகஅற்புதமானவை. ஆதலால் அவன் ஆற்றலினூடே எதிர்த்துப்பாயவல்லவர்களுக்குத் தான் பண்டை நிலைமைகளை உணரமுடியும். அல்லாதவர் கள் உண்மையைக் கண்டுகொள்ளமாட்டார்கள். ஆகவே ஒவ்வொருவரும், சிறப்பாக-நாடு, மொழி என்பவற்றின்

இயல்புகளைநாடி அறியமுயல்பவர் எவரும் காலதேவனின் ஆற்றலைக் கடந்துமுன்னும் பின்னும் ஆராய்ந்துபார்க்கக் கடமைப்படுகின்றார்கள். இந்நாட்டிற் போல அவன் தன் கூத்தாட்டத்தை வேறெங்கும் நடத்தினதில்லை யென்று தான் சொல்ல வேண்டும். ஒரு காலத்தில் தமிழ்ப் பசுமையை எங்கும் பரப்பிய அவனே நாளடைவில் அதனை மாய்த்தான்; சிறுகச் சிறுக மாய்த்தான். வடக்கு நின்றும் ஒதுக்கிக் கொண்டே வந்து இன்று தென்னெல்லையில் மட்டும் சிறிது இடத்தில் விட்டு வைத்திருக்கின்றான்.

சேரநாட்டின் தென் பகுதியான திருவிதாங்கூர் சில நூற்றாண்டுகளுக்கு முன் வரையில் ஒரு செந்தமிழ் நாடாகத்தான் இருந்தது. இன்றோ தம் பண்டைய மொழி மரபில் நின்றொழுகுகின்றவர்கள் அந் நாட்டிலும் தென் பகுதியில்தான் இருக்கின்றார்கள். அவர் வாழும் பகுதி, ஏனையபகுதியைவிட அளவில்சுருங்கிவிட்டமையால்இவர்களைத் தமிழர்களாகவே ஏனையோர் மதிப்பதில்லை. இன்னோர் தமிழ் நாட்டில் நின்று குடியேறியவர்கள், அல்லது தற்போது தமிழ் பேசுகின்ற வேற்று மொழியாளர் என்று பிறரால் கருதப்படுகின்றார்கள். காலதேவனின் திருக்கூத்தால் நேர்ந்தவிபரீதம் இது.உண்மைஎவ்வளவுநேர்மாறாகி விட்டது பாருங்கள். ஆகவே மெய்ந்நிலை விளக்கப்பட வேண்டுவது மிகவும் இன்றியமையாதது. யாமறிந்தவரையில் அப்பணியைச் செய்யப் புகுவோம். வடபாற் பகுதிகள் பெரும்பாலும் தமிழொழிந்த பிறமொழிகளுக்கு இடமாகி விட்டமையால், அவை பற்றிச் சொல்வதில் பெரும் பயனொன்றுமில்லை. ஆயினும் பொதுத் தன்மைகள் சிலவற்றை மட்டும் கூறிவிட்டுத் தென்பாற் பகுதிகளையே சிறப்பாக எடுத்து விவரிப்போம்.

5

## சேர நாடு.

முற்காலத்தில் தமிழ் நாடானது சேரநாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என மூன்று பிரிவுகளை உடையதாயிருந்த தென்பதைப் பள்ளிப் பிள்ளைகளும் அறிவர். இந்நாடுகள் வரையறுக்கப்பட்ட திட்டமான எல்லைகளைக்கொண்டிருக்காமல் காலந்தோறும் அளவில் மாறுபட்டுக்கொண்டிருந்தன. தென்னிந்தியாவில் காவிரி சூழ்ந்த நாட்டைச் சோழர்களும், மேல் கடற்கரையைச் சேர்ந்த இடங்களைச் சேரர்களும், வையை பொருநையாறுகளைக் கொண்டபகுதியைப் பாண்டியர்களும் ஆண்டு வந்தனர் எனப்பொதுப்பட அறிந்து கொள்ளலாம்.

ஆனால் சங்க நாளிலே சேர நாட்டின் கிழக்கெல்லை, கோயம்புத்தூர் ஜில்லாவின் கீழ்பாலுள்ள திருச்சிராப்பள்ளி ஜில்லாவரை வியாபித்திருந்ததாகத் தெரிகிறது. திருச்சிராப்பள்ளியினின்று ஏறக்குறைய ஐம்பது கல் தொலைவிலிருக்கும் **கருவூர்**, அன்றைய சேரர் தலைநகரங்களுள் ஒன்றாகவிருந்தது. இதற்கு **வஞ்சி** என்றோர் பெயருமுண்டு. இது பொருநையாற்றின் கரையிலிருப்பதாகப் புலவர்கள் பாடியுள்ளனர்.

**'தண்பொருநைப் புனல்பாயும்**
**விண்பொருபுகழ் விறல்வஞ்சி'**[1] -எனவும்,
**'திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்**
**தெண்ணீ ருயர்கரைக் குவைஇய**
**தண்ணான் பொருநை மணலினும் பலவே'**[2] -எனவும்
வருபவை காண்க.

1. புறம்-11; 5-6 2 அகம்-93

சோணாட்டின் தலைநகரான உறையூருக்கும் இக் கருவூருக்கும் அதிக தொலைவில்லை. இப்படி இவை அடுத்தடுத்து இருந்தமையால் சேர சோழ வேந்தர்க்குள் அடிக்கடிப் போர்கள் உண்டாவது வழக்கம். ஆகவே சேர சோழ வேந்தருள் ஒருவனை, அவன் பிற வேந்தனை வெல்லும் ஆற்றலுடையவன் என்று சிறப்பித்துப் பாடுவது வழக்கமாகி விட்டது புலவர்களுக்கு. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடப்போந்த கோவூர் கிழார்,

> **"வஞ்சி முற்றம் வயக்கள னாக**
> **அஞ்சா மறவர் ஆட்போர் பழித்துக்**
> **கொண்டனை பெரும குடபுலத் ததரி"**[1]
>
> —என்று குறிப்பிடுகின்றார்.

அவனை மாறோக்கத்து நப்பசலையார்,

> **"வாடா வஞ்சி வாட்டுநின்**
> **பீடுகெழு நோன்றாள் பாடுங் காலே"**[2]
>
> —எனப் பாடுகின்றார்.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடுகின்றபோது அவன்,

**'கடும்பின் அடுகல நிறையாக நெடுங்கொடிப் பூவா வஞ்சியும் தருகுவன்'**[3] என்று கூறி அவன் ஆற்றலைச் சிறப்பிக்கின்றார். இவற்றோடு பின்வரும் ஒரு செய்தியும் அறியத்தக்கது.

ஒரு நாள் சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி என்பான் பட்டத்து யானைமீதேறித் தன்னாட்டெல்லையில் வந்துகொண்டிருந்தான். களிறு திடீரென்று மதம் பட்டு

---

**1 புறம்-373; 24-26.  2 புறம்-39:17-18.  3 புறம் 32:1-2.**

விட்டது. பாகரும், வாள் வீரரும் எவ்வளவோ தடுத்தும் நிற்கவில்லை. மீகாமனில்லா நாவாய்போலக் கண்ட கண்டவாறு செல்லத் தலைப்பட்டது அக்களிறு. இறுதியில் கருவூருக்குள்ளும் புகுந்துவிட்டது. அப்போது சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை தன் நண்பரும் புலவருமான ஏணிச்சேரி முடமோசியாருடன் **வேண்மாடம்** என்னும் பெயருடைய மாளிகையின் உப்பரிகையிலிருக்கின்றான். இருக்கின்றவன் கண்ணில் இக்காட்சி பட்டது. உடனே அவன் மனத்தில் தோன்றியது வேறொன்றுமில்லை. 'வீரர்கள் புடைசூழப் பட்டத்து யானை மீதிவர்ந்து வரும் இவன் நமக்குப் பகையாய்ப் போர் புரிய வருகின்றவனுதல் வேண்டும்' என்ற எண்ணமே எழுந்தது. சினம் போங்கிற்று. நிகழ்ச்சிகளை உய்த்துணர்ந்தார் அருகிலிருந்த புலவர். உடனே, உண்மை நிலை கூறி அவன் சீற்றத்தை மாற்றித் தேற்றுகின்றார்.—இவ் வரலாற்றைப் பதின்மூன்றும் புறப்பாட்டால் அறிகின்றோம்.

இவையெல்லாம் சேர சோழர்களுக்குள் பெரும்பாலும் பகைமையிருந்தது என்பதை மட்டுமல்ல, இருவர் நகரங்களும் ஒன்றுக்கொன்று அண்மையிலிருந்தன என்பதையும் நமக்குத் தெள்ளத் தெளியக் காட்டுகின்றன. ஆகவே அந்நாளைய சேரன் தலைநகர் திருச்சிராப்பள்ளிக் கருவூரே என்பதும் அதற்கப்பாலும் சேரநாடு பரந்திருந்ததென்பதும் நன்கு அறியப்படும். இனி, சேரன் செங்குட்டுவனது தலைநகரும் இக் கருவூரேயோ அன்றி மேல்கடற்கரையிலுள்ள கருவூர், வஞ்சி (கொடுங்கோளூர்) என்பவற்றுள் ஒன்றோ என்பது கருத்து வேறுபாடுகளுக்கு இடமாகவேயுள்ளது. அது பற்றி இங்குக் குறிப்பிடவில்லை. நிற்க.

நாட்டின் அமைப்பு நாளுக்கு நாள் மாறுபட்டுக் கொண்டேயிருந்தது. மாறுபட்டது என்னும்போது சுருங்கிக் கொண்டுதான் இருந்ததே ஒழிய, விரிந்தது என்று சொல்வதற்கில்லை. ஒரு காலத்தில் அது பூழி நாடு, குடநாடு, குட்டநாடு, வேணுடு, கற்காநாடு என்னும் சிறுச்சிறு பகுதிகளை உள்ளடக்கினதாக இருந்தது. இவற்றுள்-பூழிநாடு என்பது வட மலபார். குடநாடு-தென் மலபார். குட்டநாடு என்பது கொச்சியும் அதன் தெற்கும் கூடிய பாகம். வேணுடு என்பது திருவிதாங்கூரின் தென்பகுதி. கற்காநாடு - பாலைக்காட்டுப் பகுதி.[1] இப்படிக் கூறிய நாட்டமைப்பு இடைக்காலத்துச் சேரநாட்டின் பரப்பைக் குறிப்பிடுவதா யிருக்கலாம்.

இன்னொரு காலத்தில் அதன் அமைப்பு வேறு வகையாக இருந்திருக்கிறது. அதனைக் கீழ்வரும் பாடல் காட்டும்.

**'வடக்குத் தலம்பழனி வாழ்கீழ் செங்கோடு**
**குடக்குத் திசைகோழிக் கோடாம் - கடற்கரையின்**
**ஓரமது தெற்காகும் ஓரெண் பதின்காதம்**
**சேரநாட் டெல்லையெனச் செப்பு'**

இப்பாட்டில் பாடபேதமும் உண்டு. இஃது எக்காலத்து எல்லையைக் குறிப்பிடுவது எனத் தெரியவில்லை. என்னவாயினும் இந்நாடு அந்நாள்முதல் இந்நாள்வரை பலப்பல விதமாக மாறுபட்டுக்கொண்டே வந்து இன்று ஒரு சிறு அளவினதாக எஞ்சி நிற்பது உண்மை. ஏனைய இரு பேரரசும் நாடும் மாய்ந்து மடிந்திடவும் இச் சேரகுல தீபம் மட்டும் வன்பெரும் சூறைகளாலும் அணையாமல்

---

1. சோழன் கரிகாற்பெருவளத்தான், பக். 30.

மங்கா ஒளி தந்துகொண்டிருப்பதை நினைக்கப் பெரிய தோர் வியப்பும் மதிப்பும் ஏற்படுகின்றனவல்லவா?

## சேரர் முதன்மை.

தமிழ் வேந்தர் மூவருள்ளும் சேரன் தலையாயவன் என்று கருதுவதற்கான காரணங்கள் பல உள்ளன. முதலாவது, மூவேந்தரையும் முறைப்படுத்திக் கூறும்போது சேரன்தான் முதலில் வைத்து எண்ணப்படுகின்றான். சேர சோழ பாண்டியர் என்ற வரிசை முறை காண்க. இது உலக வழக்கில் மட்டுமன்றிச் செய்யுள் வழக்கிலும் காணப்படுவ தொன்றாகும். புறநானூறு தொகுத்த புலவரும் மூவேந்தருள் சேரரைப் பற்றிய பாடல்களை முதலிலும், ஏனைய இருவர் பாடல்களைப் பின்னரும் வைத்து முறைப்படுத்தி யிருக்கின்றார். சிறுபாணாற்றுப்படையுள் மூவேந்தரையும் கூறப் புகுமிடத்தில் குட்டுவன் (சேரன்), செழியன், செம்பியன் எனச் சேரனை முன்னிறுத்தித் தான் வரிசைப்படுத்துகின்றார் புலவர்.[A]

**"போந்தை வேம்பே ஆரென வரூஉம்**
**மாபெருந் தானையர்"[V]** என இச் சேரர் மாலையினையே முதற்கண் ஓதுகின்றார் தொல்காப்பியனாரும். பிந்திய நூலாசிரியர்களான ஐயனாரிதனார், வைத்தியநாத நாவலர் போன்றவர்களும் முறையே 'சீர்சால் போந்தை வேம்போ டாரே'[T]—என்றும், 'ஏந்துபுகழ்ப் போந்தை வேம்பே ஆரென வரூஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும்'[S] என்றும் கூறியிருப்பவையும் ஆராயத்தக்கன.

---

**A அடி - 49, 65, 82. V தொல்காப்பியம். பொருளதி. புறத். 5.**
**T புறப்பொருள் வெண்பாமாலை; பொதுவியல் சூத். 10.**
**S இலக்கண விளக்கம்; புறத்திணை சூத். 619.**

மேற்கூறியவற்றுள் சேரர், பாண்டியர், சோழர் என்னும் முறை வைப்புக் காணப்படினும் ஆசிரியர்களெல்லோரும் ஒரே தன்மையாய்ச் சேரரை முதற்கண் வைத்துக் கூறுவதற்குக் காரணமிருக்க வேண்டுமல்லவா?

சேர வேந்தர்களுக்கு இம்முதன்மை அவர்களின் பிரதாபத்தால் கிடைக்கப்பெற்றதாயிருக்குமா? அப்படியானுல் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், உதியன் சேரலாதன், செங்குட்டுவன் போன்றவர்கள் இப்பெருமைக்குக் காரணிகர் என்று கொள்ளவேண்டும். சேரர்களின் பழைமை காரணமாகவும் இம்முதன்மை அவர்களுக்குக் கிடைத்திருக்கலாம். இமயத்தையே எல்லையாகக் கொண்டு ஆண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்,பாரதப் போரில் இரு பெரும் படைகளுக்கும் பெருஞ்சோறு அளித்த பெருஞ் சோற்று உதியன் சேரலாதன் என்னும் சேர அரசர்களைப் போன்ற பழைமையுடைய சோழ பாண்டியர்களைக் காண்டல் அரிது. சேரர் சரிதம் மிகத்தோன்று தொட்டே தோன்றி விட்டது. அவர்களுக்கு வானவர் என்று ஓர் பெயர் இருப்பதாகவும் அறிகிறோம். அப்பெயர் ஏற்பட்டதற்குரிய காரணம் இன்னதென்று திட்டமாய்த் தெரியவில்லை.

சேரர் முதன்மைக்குப் பிரதாபமும் அல்ல, பழைமையும் அல்ல காரணம்: அகரவரிசைப்படி !அடுக்கினதினுல் கிடைத்த முதன்மையே அவர்களுடையது என்று கூறுவோர் இருக்கலாம். அப்படியானுல் மூவேந்தர்களையேயன்றி அகுதை, அதிகன், ஆய், எவ்வி போன்ற குறு நில மன்னர்களையும் வள்ளல்களையும் பற்றிய பாடல்களின் தொகையான புறநானூற்றுள் சேரனைப் பற்றிய பாடல் முதற்கண் வைக்கப்பட்டதற்கு அவர் யாது காரணம் கூறுவரோ அறியேன்.

இரண்டாவது, பெருநிலக் கிழமை படைத்தவர் சேரர். சோழ நாடு இருபத்து நான்கு காதமும், பாண்டி நாடு ஐம்பத்தாறு காதமும் அளவு கொண்டதாயிருக்க, சேரநாடு அவ்விரு நாடுகளின் அளவும் சேர்ந்த-அஃதாவது எண்பது காதம் கொண்ட நிலப்பரப்புடையது.[V] அதுவும் நானில வளமும் நன்கமையப்பெற்றது. சேரர் முதன்மைக்கு இதுவும் ஓர் காரணமாயிருக்கவேண்டும்.

## தமிழன்னையின் தவப்புதல்வர் சேரர்.

இடைப்பட்ட நாடுகளை யெல்லாம் வென்று இமயம் வரை சென்று அதில் தம் விற்பொறியைப் பொறித்துத் திரும்பிய வீர மன்னர்கள் சேரர்கள். இப்படிப்பட்டவர்களும் தமிழ்ப் பாட்டென்றால்—தமிழ்ப் புலவரென்றால் நாடும் பொருளும் அளித்துப் புலவர்களுக்கு எளியவர்களாகி விடுவது இயல்பு. தன்னைப் பாடி வந்த ஒரு புலவருக்கு ஐந்நூறு ஊர்களைக் கொடுத்தான் ஒரு வேந்தன். நாற்பது நூறாயிரம் பொன்னும் ஆட்சியிற் பாகமும் கொடுத்தான் இன்னொரு வேந்தன். வேறோர் அரசன் பெரு நிலப்பகுதியின் வருவாய் முழுமையும் கொடுத்ததன்றித் தன் மகனையும் கொடுத்தான். தன்னைச் சிறப்பித்துப் பாடிய ஓர்பெண் புலவருக்கு,நகைசெய்வதற்கென்று ஒன்பது காப்[S] பொன்னும், பரிசிலாக நூறாயிரம் பொற்காசும் ஓர் அரசன் கொடுத்தான். அவன் வழிவந்த ஒரு மன்னன், புலவருக்கு நூறாயிரம் பொற்காசு கொடுத்ததன்றித் தன் நாட்டு மலையொன்றின் மீது ஏறிநின்று கண் கண்ட இடமெல்லாம் காட்டி உரிமைப்படுத்திக் கொடுத்

---

V 'சேர வேந்தர் செய்யுட் கோவை' முகவுரை.

S கா என்பது அக்காலத்திலுள்ள ஓர் நிறையளவை.

தான். இன்னொரு சேரன், தன்னைப் பாடிய புலவரை நோக்கி 'இந்நாடும் இவ்வரசும் உம்முடையவை; யாங்கள் உமக்கடியோம்' என்று கூறித் தன் மனைவியோடு அரண் மனையை விட்டுப் புறத்திறங்கி நின்றான்.

இவை அந்நாள் சேர வேந்தர்கள் தமிழன்னை மீது வைத்திருந்த ஆர்வத்தால்—பக்தியால் செய்த செயல்கள்; கனிந்தளித்த கொடைகள். குன்றேறிக் கண்கண்ட இட மெல்லாம் களிப்புடன் காட்டிக்கொடுத்த மன்னவன்நாடு, அவன் தமிழார்வம் போலவே மிகப் பரந்துபட்டதாயிருக்க வேண்டுமல்லவா? சேரர்களின் கொடைத் திறனைப்பற்றிக் கவிமணியவர்கள் பாடியுள்ள செந்தமிழ்ப் பாடல் ஒன்று இங்கே சிந்திதற்குரியது. அது வருமாறு:-

**'ஆண்டபெரு நாடும் அரசும் அரும்புலவர்க்**
**கீண்டு பரிசில் எனவளித்துப்-பூண்டசுவைச்**
**செந்தமிழைக் கேட்டுவக்கும் சேரகுலம் இந்நிலத்துச்**
**சந்ததமும் வாழ்க தழைத்து.'**

இக் கொடைவேந்தர்களின் புகழும் ஆற்றலும் பதிற் றுப்பத்து என்னும் தொகைநூலுள் நன்கு அறியக் கிடக் கின்றன. அதன் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாயிருக்க வேண்டும்.

## தொல்காப்பியத்தோடொத்த பழைமை.

இன்றுள்ள நூல்களுள் மிகப் பழைமை வாய்ந்தாய் அறியப்படுவது தொல்காப்பியம். அது கி. மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முந்தியதென்று அறிஞர் கூறுவர். அதன் ஆசிரியர் தொல்காப்பியர், அதனை நிலம்தரு திருவின்

பாண்டியன் சபையில் அரங்கேற்றினார். அப்போதுச்சபைத் தலைமை பூண்டிருந்த பேரறிஞர் அதங்கோட்டாசான் எனப்படுவர். அவர் அறமே கூறுகின்ற நாவினையும், நான் மறை உணர்வினையும் உடையவரென்று பாயிரம்பகர்கின் றது. அவருக்குக் குற்றம்தீர உணர்த்திய பின்னர்தான் தொல்காப்பியம், அறிவுடையோரால் நூலென ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**'நிலம்தரு திருவிற் பாண்டியன் அவையத்து**
**அறங்கரை நாவின் நான்மறை முற்றிய**
**அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து'**

என்பன தொல்காப்பியப் பாயிர அடிகள்.

இவ்வாசான் சேரநாட்டைச் சேர்ந்தவராயிருக்க வேண்டுமென்று கொள்வதற்கான ஆதாரங்கள் இருக்கின் றன. **அதங்கோடு** என்னும் பெயருள்ள ஊரொன்று சேர நாட்டுப் பகுதியில் இன்றும் இருக்கின்றது. திருவிதாங் கூரின்-அல்ல-திருவிதாங்கோட்டின் தென் பகுதியிலுள்ள விளவங்கோட்டுத் தாலுகாவின் ஊர்களுள் அதங்கோடு ஒன்று. இந்நாட்டின் நடுப்பகுதி வட பகுதிகளிலுள்ள வீடுகள், சோழ பாண்டிய நாடுகளிலுள்ளவற்றைப்போல ஒன்றோடொன்று நெருங்கி ஊர்களாக இருக்காமல் இங் கொன்றும் அங்கொன்றுமாகக் காணப்படும். ஆதலால் அவற்றின் கூட்டங்களைத் தேசம் என்றும், கரை என்றும், முறி என்றும் பாகுபடுத்திக் கூறுவர். இத்தகைய தேசங்க ளுள் ஒன்று அதங்கோடு. இஃது இப்பொழுது நாகரிகம் குறைந்த ஏழை மக்கள் வாழும் பகுதியாக இருக்கின்றது.

அதங்கோடு திருவிதாங்கூரைச் சார்ந்ததாகத்தான் இருக்கவேண்டுமோ என்று கேட்கத் தோன்றும். கோடு

என்று முடியும் இடப்பெயர்களை இங்கேதான் ஏராளமாகக் கேட்க முடியும். முதலாவது, நாட்டின் பெயரே **திருவிதாங்கோடு**. இரண்டாவது, தாலுகாவின் பெயர் **விளவங்கோடு**. இனி, அதிலுள்ள கோடு என்று முடியும் இடங்களைச் சொல்லுகிறேன் கேளுங்கள்:-

அண்டுகோடு, இடைக்கோடு, கடமைக்கோடு, கண்ணக்கோடு, காங்கோடு, கோல்லங்கோடு, சிறுகோடு, சூரிகோடு, சேனங்கோடு, தேவிகோடு, தொழிக்கோடு, பாகோடு, பிராக்கோடு, மத்திகோடு, மருதங்கோடு, மாங்கோடு, மாலைக்கோடு, முழுக்கோடு, மேலிக்கோடு, விளாக்கோடு. இனி இத்தாலுகாவையடுத்த கல்குளம் தாலுகாவிலுள்ள கோடுகள்;-

ஆலங்கோடு, ஏற்றக்கோடு, ஒலக்கோடு, கக்கோடு, கட்டி மாங்கோடு, கரிப்புக்கோடு, கொத்திகோடு, சாக்கியான்கோடு, சித்திரங்கோடு, திருக்கண்ணங்கோடு, திருவிடைக்கோடு, திருவிதாங்கோடு, நட்டாங்கோடு, பரக்கோடு, பலாக்கோடு, பன்றிகோடு, போக்கோடு, மள்ளங்கோடு, மேக்கோடு, மேலாங்கோடு, வெள்ளிகோடு— போதுமா? ஒரு கோடு தேடப்போய் எத்தனை கோடுகள் அகப்படுகின்றன பாருங்கள். இவற்றுள் ஒன்றாக அதங்கோடும் இருத்தல் கூடுமல்லவா?

ஆசான் என்ற பெயரும் இந்நாட்டில்தான்மிகுதியாக வழங்குகின்றது. இன்றும் இப்பகுதியிலுள்ளவர்களிற் பெரும்பாலாரும் வைத்தியம், சோதிடம், மந்திரம், அடிமுறை.(சிலம்பமடித்தல்) முதலியவற்றில் தேர்ந்தவர்களாயிருக்கின்றார்கள். அன்னோர் ஆசான் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றனர். இப்படிப்பட்ட ஆசான்களை மேற்கூறிய ஊர்களிலும் பக்கங்களிலும் ஏராளமாகக்

காணமுடியும். ஆகவே, இந்தப் பரம்பரையின் முன்னோருள் ஒருவர் மறையுணர்வும், அறவுரையும் வாய்ந்தவராய்ச் செந்தமிழ்ப் புலமை சான்றிருந்தனர் என்று கொள்வதால் படும் இழுக்கு ஒன்றுமில்லை. இஃது ஏற்றுக் கொள்ளப்படுமானால் தொல்காப்பியம் இயற்றினார்க்கும் தலைமை தாங்க வல்ல ஆற்றலும், அகத்தியனார்க்கு மாணவராக வல்ல பேறும் பெற்ற இன்றமிழ்ப் புலவரை உலகுக்கு ஈன்றளித்த பெருமை சேரநன்னாட்டைச் சேர்கின்றது. மட்டுமல்ல; எத்தனையோ பல தமிழ் நூல்களைத் தோற்றுவித்தவர்களும், அவை தோன்றக் காரணமாயிருந்தவர்களும் சேர அரசர்களாவர்.

## நூல்களும் அரசர்களும்.

க. **பதிற்றுப் பத்து-** தலைக்குப் பத்து வீதமாகப் பத்துச் சேரவேந்தர்கள் மீது பாடப்பட்ட நூறு பாடல்களின் தொகை இது. ஒவ்வோர் அரசரும் தம்மீது பாடிய பாடல்களைப் பெருந்தொகைகளைப் பரிசிலாகக் கொடுத்துப் பெற்றார்கள் என்பது முன்னர்ச் சொல்லப்பட்டது. சேர வேந்தர்களின் தமிழார்வமும், ஆற்றலும், புகழும் இப் பாடல்களால் நன்கறிந்து கொள்ளலாம். இதன் முதல் பத்தும், பத்தாம் பத்தும் இப்போது கிடைக்கவில்லை.

உ. **ஐங்குறு நூறு-** இஃது ஓர் அகப்பொருள் நூல். ஐந்து புலவர்களால் பாடப்பட்ட ஐந்நூறு பாடல்களைக் கொண்டது. பலபடியாக விரவிக்கடந்த பாடல்களைக் கூடலூர் கிழார் என்னும் புலவர் பிரானைக்கொண்டு அடிவரையறை பற்றியும், திணைபற்றியும் தெரிந்தாய்ந்து தொகுப்பித்தவன் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர வேந்தனாவன்.

இத்தொகை நூலுள் நெய்தற்றிணை பாடியவர் 'அம்மூவனார்' என்னும் சேரமரபினர் என்பர்.

௩. **கலித்தொகை-** இதன் முதற்கண் இருப்பது பாலைத்திணை. அது முப்பத்தாறு கலிப்பாக்கள் கொண்டது. அவற்றைப் பாடியவர் 'பெருங்கடுங்கோ' என்னும் சேர அரசர். இவர் பாலைத்திணையைச் சுவைபடப் பாடுவதில் வல்லவர். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு முதலான தொகை நூல்களுள்ளும் இவர் பாடல்கள் இருக்கின்றன. அனைத்தும் பாலைப்பொருள் பற்றியவையே. இவர் இக்காரணத்தால் 'பாலை பாடிய பெருங்கடுங்கோ' என்று சிறப்பிக்கப் பெற்றார். பாடினவரும் பாடப்பட்டவருமான சேரவேந்தர் இவர் ஒருவர்தாம்.

௪. **சிலப்பதிகாரம்-** இதன் ஆசிரியர், செங்குட்டுவ வேந்தனது தம்பியான இளங்கோவடிகள் என்பதை யாவரும் அறிவர். செங்குட்டுவன் தனிப்பெரு வீரன். தமிழமுதம் பருகியவன். கூலவாணிகன் சாத்தனார், பரணர் போன்ற தமிழ்ப்பெரும் புலவர்களோடு உறவு பூண்டவன். தமிழர் மானங்காத்த தகைமையாளன்.

ஒருசமயம் ஆரிய அரசர்களான கனகனும் விசயனும் பல மன்னர்கள் கூடிய கூட்டத்தில் வைத்துத் தமிழர்களை இகழ்ந்து பேசினர். இச்செய்தி சேரன் செவிக்கு எட்டிற்று. அது போது மொழிதானே என்று அவன் அமைந்திருக்கவில்லை.

**'இமையத் தாபதர் எமக்கீண் டுணர்த்திய**
**அமையா வாழ்க்கை அரைசர் வாய்மொழி**
**நம்பால் ஒழிகுவ தாயின் ஆங்கஃது**
**எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சியும் தருஉம்'**[1]

---

1. சிலப்: 26. 9-12.

என்று எண்ணினன். சீற்றம் மிக்கு எழுந்தது. ஆனல் பாண்டியன் இது கேட்டுப் பதைத்தெழவில்லை. சோழன் கேட்டுத் துடித்தெழவில்லை. சேரனே சீறிச் சென்றன். வடநாடு செல்லும்போது வழியில் கையுறைப் பொருள்களுடன் வந்து கண்ட சஞ்சயனிடம் அவன் சொல்வதைக் கேளுங்கள்-

**'காவா நாவிற் கனகனும் விசயனும்**
**விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி**
**அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கெனக்**
**கூற்றங் கொண்டிச் சேனை செல்வது'[1]**

என்று கூறுகின்றன். அவர் நாடு சென்று தங்கிப் போர் செய்தான். அன்றே,

**'வாய்வாள் ஆண்மையின் வண்டமிழ் இகழ்ந்த**
**காய்வேல் தடக்கைக் கனகனும் விசயனும்**
**ஐம்பத் திருவர் கடுந்தே ராளரொடு**
**செங்குட் டுவன்றன் சினவலைப்'[2]**

பட்டார்கள். படவும் அவரை அடித்தலம் வீழ்த்தி, முடித் தலம் நெரியக் கல்லை ஏற்றி அலற வைத்து அழைத்து வந்தான் வேந்தன். இந்நிகழ்ச்சி ஏனை இரு வேந்தர்களை விடவும் இவன் தமிழின்மீது வைத்திருந்த ஆர்வத்தை மலையிலக்கெனக் காட்டுவதல்லவா?

இவன் வரலாற்றுப் பகுதியையும், சிறந்த நீதிகள் அடங்கப்பெற்ற கோவலன் கண்ணகி வரலாற்றையும் எடுத்துச் சுவைபட விரித்துரைத்து நிற்கின்றது சிலப்பதிகாரம். அச்செந்தமிழ்ப் பனுவலை உலகுக்கு ஈந்த ஒப்பற்ற குலம் இச்சேரகுலம். ஆம்;

---

1. சிலப்: 26: 159-62. 2. ஷை: ஷை: 221-24.

**'பாவடிகள் தேன்வடியப் பாடும் புலமையிளங்
கோவடிகள் போந்த குலம்'[1]** -இது அல்லவா?

மேற்கூறிய நூல்களெல்லாம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டுக்கு முற்பட்டவை. அக்காலத்தைச் சங்க காலம் என்பார்கள். சங்க காலத்திலிருந்து பாடல் பெற்ற சேர வேந்தர் பத்தோன்பதின்மர் என்றும், சேர வேந்தர் கிளையினர் எழுவரென்றும், தமிழ்ப் புலமை சான்று பாடிய சேரவேந்தர் எண்மர் என்றும் தெரியவருகின்றன[2]. இனி அதற்குப் பிற்பட்ட நூல்களைப் பற்றியும், சில பெரியார்களைப் பற்றியும் கூறுவாம்.

**ரு. புறப்பொருள் வெண்பாமாலை-** இஃது அகத்தியனுர் மாணுக்கர் பன்னிருவராலும் இயற்றப்பட்ட பன்னிரு படலம் என்றதன் வழிநூலாகச் செய்யப்பட்டது. இதனைப் பாடியவர் சேர பரம்பரையைச் சேர்ந்த ஐயனரிதனுர் என்னும் தமிழ் வேந்தராவர். இவர் காலம் கி. பி. ஏழாம் நூற்றுண்டு என்பர்.

**சு. சேரமான்பெருமாள் நாயனுர்-** இவர் மகோதை என்னும் பெயருடைய கொடுங்கோளூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சேரகுலத்தவர். அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர். அஃறிணை உயிர்கள் கூறுகின்றவற்றையும் இறைவனருளால் அறியும் அறிவு பெற்றமையால் கழறிற்றறிவார் என்ற சிறப்புப் பெயர் பூண்டவர். மதுரையில் மன்னிய சோமசுந்தரக் கடவுளிடமிருந்து திருமுகப்பாசுரம் பெற்ற பேறுடையவர். அப்பெருமானுல்

---

1. மலரும் மாலையும்.
2. ராவ்சாகிப் மு. இராகவையங்கார் அவர்கள் தொகுத்த 'சேரவேந்தர் செய்யுட் கோவை' என்னும் தொகை நூலைப் பார்க்க.

**'தன்போல் என்பால் அன்பன்; தன்பால்**
**காண்பது கருதிப் போந்தனன்;**
**மாண்பொருள் கொடுத்து விரவிடுப் பதுவே'**

என்று கூறிச் சிறப்பிக்கப் பெற்றவர். இப்பாசுரமும் செந்தமிழில் எழுதப்பட்டதன்றி வேறெந்த மொழியிலும் எழுதப்பட்டதல்ல என்பது கருதத்தக்கது.

நாயனர் பாசுரம் பெற்றது மட்டுமல்ல; அவரே பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கைலாய ஞானவுலா என்னும் சிறந்த பிரபந்தங்களைப் பைந்தமிழில் பாடியுமுள்ளார். இவர் ஆண்ட நாடு ஓர் இன்றமிழ்நாடு என்பதை எடுத்துச் சொல்லவா வேண்டும்? இவர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு.

எ. **குலசேகராழ்வார்**- இவர் வைணவ ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவர். சேரநாட்டைச் சேர்ந்த திருவஞ்சைக்களம் என்னும் சீரிய நகரினை அரசிருக்கையாகக் கொண்டு ஆண்ட பெரியார். 'பெருமாள் திருமொழி' என்ற திவ்வியப் பிரபந்தம் பாடியவர். 'முகுந்தமாலை' இவர் பாடியதென்று சிலரும், அன்றென்று சிலரும் கூறுவர்; ஆதலால் அதனை விட்டு விடுவோம். பெருமாள் திருமொழியை மறுப்பதற்கில்லை. இவர் சோழநாடு பாண்டிய நாடுகளிலுள்ள சிலச் சில பகுதிகளையும் கைக்கொண்டு ஆண்டதாகத் தெரிகிறது. இவரே தம்மைக் 'கொல்லி காவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்' என்று கூறியிருப்பது கொண்டு இஃது அறியப்படும். இவர் காலம் கி. பி. ஒன்பது பத்து நூற்றாண்டுகளை ஒட்டி இருக்கவேண்டும்.

இதுவரை நூல்களாலும் அரசர்களாலும் இந்நாட்டுக்கிருந்த தமிழ்த் தொடர்பைச் சொன்னோம். அதன் மூலம் கி. பி. 10 அல்லது 11-ஆம் நூற்றாண்டிலும் தமிழ் மன்னராலேயே இந்நாடு ஆளப்பட்டது என்பதை அறிய முடிந்தது. இனி, மூவேந்தர்களும் தமக்குள் உறவின் முறையை உடையவர்களாயிருந்தார்கள் என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள் தருவோம்.

## மூவேந்தர்க்குள்ளும் கொள்வினை கொடுப்புவினை.

மணவினை என்பது ஒத்த குலத்திலே செய்யப்படுவது ஆகும். குலஒப்புமை மட்டும் இருந்தாற் போதாது; மொழி, சமயம் என்பவைகளிலும் ஒருமைப்பாடு இருக்க வேண்டும். மதத்தால் வேறுபட்ட இருவர் தமக்குள் மணவினை செய்து கொள்கின்றார்களானாலும் மணத்துக்குப் பிறகு அவர்கள் ஒரே சமயத்தவராகிவிடுவதைப் பார்க்கின்றோம். அது எளிதில் நடக்கக்கூடியதும் நடந்து வருவதும் ஆகும். ஆனால் மொழி வேற்றுமையுடையவர்கள் மணம் முடிப்பதோ, முடித்தபின் ஒருவர் பேச்சு வழக்குக்கேற்றவாறு இன்னொருவர் மாறிக்கொள்வதோ மிக அருமை. ஒருக்கால் செய்து கொண்டாலும் அம் மணவாழ்க்கை தம் விலங்கு இச்சையை நிறைவேற்றிக் கொள்ளப் பயன்படுவதாயிருக்குமே ஒழிய காதலின்பம் துய்க்கப் பயன்படுவதில்லை. ஆதலால் தாய் மொழியில் ஒருமைப்பாடு உடையவர்களிடத்தில் மணவினை நடைபெறுவதைத்தான் சாதாரண நிகழ்ச்சியாகப் பார்க்கிறோம். இது பொது மக்களிடம் ஒரு நியதியாகவே அமைந்து கிடக்கின்றது.

பொதுமக்கள் காரியமே இப்படியென்றால் அரசர்களைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை. அவர்கள் எவ்வ

ளவோ கட்டுப்பாடு உடையவர்கள். குலநலம் குன்றிய இடத்தினின்று பெண் எடுப்பதோ, மொழி சமய வேற்றுமையுடைய பெண்களைப் பட்டத்தரசிகளாக்கிக் கொள்வதோ நடக்கக்கூடியவையல்ல. ஆகவே, ஓரரசன் இன்னொரரசனிடம் பெண்கொண்டானென்றால் இருவரும் குலத்தாலும் மொழியாலும் சமயத்தாலும் ஒற்றுமைப்பட்டவர்கள் என்பதைத் திண்ணமாக உணர்ந்து கொள்ளலாம். இந்நியதிப்படிப் பார்த்தால் சேர வம்சம் இந்த மூன்று வகைகளிலும் சோழ பாண்டிய வம்சங்களின் மாறுபட்டதல்ல என்பது அறியப்படும். தோன்றுதொட்டே மூவேந்தருக்குள்ளும் கொள்வினை கொடுப்புவினை யிருந்திருக்கிற தென்பதைப் பழைய இலக்கியங்களும், வரலாற்று முறைமையும் நமக்கு நன்கு எடுத்துக் காட்டும்.

க. சேர குலமாகிய வானத்தில் செங்கதிரோன் என்ன விளங்கிய செங்குட்டுவ வேந்தனது தாயார் ஒரு சோழ மன்னன் மகளாவார் என்பதைப் பதிற்றுப் பத்தும் சிலப்பதிகாரமும் பறையறைந்து தெரிவிக்கின்றன. சிலப்பதிகாரம் வாழ்த்துக் காதையின் முன்னுள்ள உரைப்பாட்டு மடையில் இளங்கோவடிகள் செங்குட்டுவன் தாய் 'திகழொளி ஞாயிற்றுச் சோழன் மகள்' என்று மட்டும் சொல்லிப் பெயரைக் குறிப்பிடாது போயினும், சிலப்பதிகார உரையாசிரியரான அடியார்க்கு நல்லார், அவள் பெயர் **நற்சோணை** என்பதைப் பதிக உரையில் வெளிப்படுத்துகின்றார்.

'திகழொளி ஞாயிற்று ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் றன்மகள் **நற்சோணை**யீன்ற மக்கள்' -என்பது அத்தொடர்.

ஆனால் பதிற்றுப்பத்தில் செங்குட்டுவன் புகழைக் கிளக்கும் ஐந்தாம் பத்தின் பதிகத்தில் வரும் அடிகள் நம்மை மயங்கச் செய்வனவாக இருக்கின்றன. அவை செங்குட்டுவனை,

**'வடவர் உட்கும் வான்தோய் வெல்கொடிக்**
**குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்**
**சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்'** —என்று

குறிப்பிடுகின்றன. இத்தொடரால் செங்குட்டுவன் நெடுஞ் சேரலாதனுக்கு வாரிசு என்பது ஒருவாறு அறியப்படும். ஆனால் மணக்கிள்ளி என்பவன் யாவன்? அவனுக்கும் குட்டுவனுக்கும் உள்ள உறவுமுறை என்ன? என்னும் கேள்விகளை இது எழுப்புவதாக இருக்கின்றது. இதனை வைத்துக்கொண்டு பலரும் பலவாறாக ஊகிக்கத் தொடங்குகின்றார்கள். திரு. சோமசுந்தரபாரதி அவர்கள், சோழன் மணக்கிள்ளி எனனும் பெயரின் பின்னே மனைவிப் பொருளையுணர்த்தும் 'தேவி' போன்றதொரு சொல் விடு பட்டிருக்க வேண்டுமென்றும், நெடுஞ்சேரலாதனின் உடன்பிறந்தாள் ஒருத்தி சோழன் மணக்கிள்ளியை மணந்து பெற்ற பிள்ளையே குட்டுவனுவானென்றும், இவன் தன் மாமனான நெடுஞ்சேரலாதனுக்கு அடுத்த வாரிசாக அமைந்தானென்றும், இந்த வாரிசு முறை தோன்றுதொட்டே சேரநாடு மருமக்கட்டாய முறையுடை யது என்பதைக் காட்டுகிறதென்றும் கூறுகின்றார் தாம் எழுதிய 'சேரர் தாயமுறை' என்னும் உரை நடையில்.

இக் கொள்கை தமிழ் வேந்தர் வம்சக்கிரமத்தில் பெரியதோர் புரட்சியை வெளிப்படுத்துவதாக உள்ளது. ஆகவே பெரியோர் பலரும் இதனை ஏற்கத் தயங்குகின்ற

னர். அன்றியும் இதனை ஒப்புக்கோள்வதால் இளங்கோ வின் கூற்றையும், அடியார்க்கு நல்லார் கூற்றையும் புறக்கணிக்க வேண்டியதாகவும் வந்து சேர்கின்றது. ஆகவே, அவற்றுக்கும் பெரியார் துணிவுகளுக்கும் முரண் படாத முறையில் நின்று சிந்தித்தால் பதிற்றுப்பத்துப் பதிகம் கீழ்வருமாறு இருந்திருக்கக்கூடுமோ என்று ஊகிக் கலாம். அஃதாவது:—

'சோழன் மணக்கிள்ளி **மகளீன்ற** மகன்'—என்றிருக்க வேண்டிய பதிகத்தொடரில் '**மகள்**' என்னும் சொல் விடு பட்டிருக்கிறதோ என்று கருதத் தோன்றுகிறது. இக் கருத்து ஏற்றுக்கொள்ளப்படுமாளுல் 'சோழன் மகள் ஈன்ற மைந்தன்' என்று கூறிய இளங்கோவடிகள் கூற் றுக்கும், 'சோழன் றன்மகள் நற்சோணை ஈன்ற மக்கள்' என்று கூறிய அடியார்க்கு நல்லார் கூற்றுக்கும், ஏனைய பெரியோர் கொள்கைகளுக்கும் முரண்பாடு ஏற்படாமல் இருக்கும். இதனுல் சேங்குட்டுவனது தாய்வழிப் பாட் டன் சோழன் மணக்கிள்ளி என்பது அறியப்படும்.

அன்றியும் அவன் தாய்மாமன் காரியாற்றுத் துஞ் சிய நெடுங்கிள்ளி என்பதும், மைத்துனன் பெருநற்கிள்ளி என்பதும் இங்கே அறியத் தக்கன. சேங்குட்டுவன் வட வாரியப் போர் முடித்துக் கங்கைக் கரையில இருந்த போது அங்கு வந்த மாடலனிடம் 'தென்னவன் இறந்த பின் அவன் நாட்டின் நிலை யாதாயிருக்கிற' தென்று கேட்க, அதற்கவன்

**'...................................................நின்**
**மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தார்**
**ஒத்த பண்பினர் ஒன்பது மன்னவர்**

..........................................

**ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்தவன்**
**பொன்புனை திகிரி ஒருவழிப் படுத்தோய்'[1]** —என்று முன்னிலைப்படுத்தி, மேல் விடையிறுக்கின்றான். இதில் மைத்துனவளவன் என்றது பெருநற்கிள்ளியையாகும்.

மேலே கூறிய இவற்றால் **சேரன், சோழனிடம்** பெண் கொண்ட செய்தி அறியப்படுகின்றது.

உ. கி. பி. 825-ஐ ஒட்டி இருந்த சேரமான்பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளை நினைத்துத் திருவாரூருக்குச் சென்றார். சிலநாள் இருவரும் அங்குத்தானே தங்கிப் பின் தல யாத்திரை செய்யப் புறப்பட்டனர். பலப் பல இடங்களுக்கும் சென்று பாம்பணிவேணிப்பிரானை வணங்கிவிட்டு மதுரைக்கு வந்தார்கள். தம்பிரான் தோழரும், அவர் தோழருமாகத் தம் நகர் நோக்கி வருவதையறிந்த பாண்டியன் ஆனந்தம் பொங்க அன்பு மீதூர எதிர்சென்றழைத்து உபசரித்தான். உபசரிப்பை ஏற்ற இருவரும் கூடல் நாயகனைத் தொழக் கோவிலுக்குச் சென்றனர். அப்போது இருவர் மட்டுமல்ல சென்றது; இவர்களுடன் இன்னொருவனும் சென்றதாகப் பெரிய புராணம் கூறுகின்றது.

**'தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே**
**தொன்மதுரை நகரின்கண் இனிதிருந்த சோழனார்**
**அன்னவர்கள் உடன்கூட அணையஅவ ருங்கூடி**
**மன்னுதிரு ஆலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார்'[2]**

பாண்டியன் மகளை மணந்து அவன் அரண்மனையில் தங்கி

---

1. **சிலப்பதிகாரம்: 27: நீர்ப்படைக்காதை 117-23.**
2. **பெரிய புராணம்; சேரமான் பெருமாணயனார்: 92.**

யிருந்த சோழனேடுங்கூட மூவருமாகக் கோவிலுக்குப் போனார்கள் என்பது பாடலின் கருத்து. ஆகவே **சோழ பாண்டியர்**களுக்குள் கொள்வினை கொடுப்புவினை இருந்தது என்பதை இதனால் நாம் அறிகின்றோம்.

௩. அன்றியும், கி. பி. 862-ல் பட்டம் பெற்ற இரண்டாம் வரகுண பாண்டியனுடைய தாயார் ஒரு சோழன் மகளாவார் என்பது திருச்சிராப்பள்ளிச் சாசனத்தில் வரும் 'சோம சூரியாந்வய துவய குல திலகாலங் காரரான பாண்டியாதி ராஜர் வரகுண தேவர்' என்னும் தொடரால் அறியப்படுகின்றது. ஆதலால் இதனாலும் **சோழ பாண்டியர்**களுக்குள் இருந்த உறவு முறையைத் தெரிந்து கொள்ளலாம்.

௪. ஆதித்த சோழனுடைய மகனாகிய **பராந்தக சோழன்** என்பவன் கி. பி. 907-முதல் 946-வரை ஆண்டவன்[1]. இவனுடைய பட்டத்தரசி ஒரு கேரள வேந்தன் மகளாவாள் என்பதை அறிஞர் கோபிநாதராயர் அவர்கள் ஆராய்ந்து எழுதிய சோழவம்ச சரித்திரச் சுருக்கத்திலிருந்து அறிகிறோம். கேரளம் என்ற பெயரைக் கேட்ட உடனே சிலர், இதற்கும் சேரநாட்டுக்கும் என்ன சம்பந்தம்? என்று சந்தேகிக்கக்கூடும். ஆம்; இதைப்பற்றிச் சற்றுச் சிந்திக்கத்தான் வேண்டும். இதற்கு இப்பெயர் எப்படி வந்தது? இது தமிழ் நாட்டோடு கலவாத ஒரு தனித் தேசமா என்பவை ஆராயத்தக்கன.

வடமொழியிலுள்ள ஆதிகாவியமான வான்மீகி ராமாயணத்தில் சுக்ரீவன் சீதாபிராட்டியைத் தேடி வருமாறு வானர வீரர்களை வழிப்படுத்துமிடத்தில் சோழ பாண்டிய

1. 'Tamil Studies' P. 357.

கேரள நாடுகளைக் குறிப்பிட்டு அவற்றைக் கடந்து செல்லுமாறு கூறுவதாக அதன் ஆசிரியர் கூறுகின்றார். இங்கே வான்மீகியார் கேரளம் என்றது நம் சேரநாட்டையன்றி வேறெதனையுமல்ல. எப்படித் தெரிகிறதென்றால் அதன் கண் முசிறிப் பட்டினம் இருப்பதையும் அங்கே கூறுகின்றார். ஆகவே 'சேரலம்' என்னும் பெயரைத்தான் அவர் 'கேரளம்' எனக் கூறினார் என்பது தெளிவு. இற்றைக்குச் சற்றேறக்குறைய 2200 ஆண்டுகளுக்கு முன் எழுந்த அசோகச் சக்கரவர்த்தியின் கல்வெட்டில் சேர வேந்தர்களைக் கேரள புத்திரர் என்று கூறியிருப்பதும் கவனிக்கத் தக்கது.

வடமொழி வாணர்களால் கேரளம் என்று வழங்கப்பட்ட பெயர், பிற்காலத்தில் வடமொழித் தொடர்பைப் பெரிதும் ஏற்று நின்ற மலையாளத்தாரால் வெகுவாக வழங்கப்பட்டு வந்தது. நாளடைவில் அவர்கள் அதன் உண்மைப் பொருளை மறந்தவர்களாய் இப்போது அதற்குப் புதுப் பொருள் கற்பிக்கத் தொடங்கி விட்டனர். கேரம் என்றால் தென்னை யென்றும், அளம் என்றால் அது பயிராகுமிடமென்றும், தென்னை ஏராளமாகப் பயிராகுமிடமாதலால் இதற்குக் கேரளம் என்னும் பெயர் காரணக் குறியாக ஏற்பட்டதென்றும் கூறுகின்றார்கள்.

இதுவே இதற்குத் தோன்று தொட்டு ஏற்பட்ட பெயரென்றால் வடமொழி வாணர்களின் வாடை வீசுவதற்கு முன் இத் தனித்தமிழ் நாட்டுக்கு ஒரு பெயர் இருந்ததில்லை என்றல்லவா ஏற்படும்? இருந்ததென்று சொன்னால் அஃது என்ன பெயர் என்னும் கேள்வி எழாதா? அதற்கு யாது விடை கூறுவரோ அறியேம்.

ஆகவே, கேரளம் என்பது சேரலம் என்ற பெயரின் திரிபே யென்றும், இரு பெயர்களும் ஒரு பொருளேயே உணர்த்துகின்றன என்றும் திண்ணமாகத் தெரிந்து கொள்ளவேண்டும். கி. பி. 6 அல்லது 7 ஆம் நூற்றுண் டில் தோன்றிய 'ஆதி திவாகரம்' என்ற நிகண்டும் சேரன் பெயர்களை அடுக்குமிடத்து,

**'பூழியன் உதியன் கொங்கன் பொறையன்**
**வானவன் குட்டுவன் வான வரம்பன்**
**வில்லவன் குடநாடன் வஞ்சி வேந்தன்**
**கொல்லிச் சிலம்பன் கோதை கேரளன்**
**போந்தின் கண்ணிக் கோஆன் பொருனைத்துறைவன்**
**சேரலன் மலையமான் கோச்சேரன் பெயரே'**

எனக் கூறுவது காண்க. பிற்கால வழக்கு முற்கால உண்மையை மாய்த்துவிடும்போல் இருப்பதால் இத் துணையும் கூறப்பட்டன.

ரு. கி. பி. 971 க்குச் சில ஆண்டுகளுக்குப் பின் **இரண்டாம் பராந்தகன்** சோழச் சக்கரவர்த்தியானன். இவனுக்குச் **சுந்தரசோழன்** என்றோர் பெயருண்டு. இவன் மனைவியும் ஒரு கேரளராஜன் மகளேயாவாள். அவளுக்கு வழங்கி வந்த பெயர் **வானவன்மாதேவி** என்பது. தன் கண வன் இறந்தபோது இவள் உடன் கட்டையேறி உயிர் நீத்தாள். தஞ்சைக் கோவிலில் இவர் படிமங்களை அமைத்துப் பூசை முதலியன செய்துவர இவர்கள் மக ளான குந்தவை ஏற்பாடு செய்தாள். இவற்றை அக்காலச் சாசனங்கள் நமக்கு அறிவிக்கின்றன.

சா. கி. பி. 1164 முதல் 1167 வரை வேணுட்டை ஆண்டு வந்தவன் **ஸ்ரீ கேரளவர்மன் II** எனப்படுபவன்.

இவன் காலத்தில் பாண்டிய மன்னனாக விளங்கியவன் **மாறவர்மன் ஸ்ரீவல்லபன்** ஆவான். இவன் வள்ளியூரைத் தலை நகராகக் கொண்டு [S]கீழ் வேம்பனாடு, மேல் வேம்பனாடு என்பவைகளைக் கி. பி. 1190ஐ ஒட்டி ஆண்டு வந்தான். இம்மாறன், ஸ்ரீ வீரகேரள வர்மன் தம்பியும் 1173ல் அரசு கட்டிலேறியவனுமான ஸ்ரீ வீர உதயமார்த்தாண்டன் என்னும் சேர வேந்தனது மகளை மணஞ்செய்தான். ஸ்ரீவல்லபனுக்குத் திரிபுவனச் சக்கரவர்த்தி என்ற ஓர் சிறப்புப் பெயருண்டு. ஆதலால் சேரன் மகளும் [S]**திரிபுவனதேவி** என்ற பட்டப் பெயரைப் பெற்றாள்.

இவளது திருமணத்தின்போது வீரகேரளவர்மன், வள்ளியூர்ப் பக்கத்திலுள்ள வீரகேரளமங்கலம் என்ற ஊரை இவளுக்குச் சீதனமாகக் கொடுத்தானென்றும், ஒழுகினசேரியை அடுத்த புரவரி சதுர்வேதி மங்கலத்துக் கோவில் அதிகாரிகளும், ஸ்ரீவைணவர்களும் புரவரி ஆழ்வார் கோவிலுக்கு இறையிலியாக நிலம் விட்டுத்தர வேண்டுமென்று கேட்டபோது அவன் கொடுக்கக் கருதிய நிலம் தன் மனைவிக்குச் சீதனமாகக் கிடைக்கப்பெற்ற வஸ்துவைச் சேர்ந்ததாயிருந்தமையால் மனைவியின் உடன்பாடு பெற்று மனைவி சார்பிலும் பத்துவயதான தன் மைந்தன் சார்பிலும் நின்று தானப் பிரமாணம் செய்து கொடுத்தானென்றும் தெரிகின்றன.[1] சீதனத்தைப்பற்றிய செய்தி பலவிதமான அபிப்பிராய பேதங்களுக்கு இடமாயுள்ளது. அது பற்றிக் கூறுவதற்குரிய இடம் இதுவல்லவாதலால் இங்கே சொல்லப்படவில்லை. சேரன் மகளைப் பாண்டியன் மணந்த செய்தியை மட்டும் ஏற்று அமைவோம்.

---

**S. பிற்சேர்க்கையிற் காண்க.**

1. **State Manual by Nagamaiya Vol. I Page 253.**

பிற்கூறப்பட்ட மூன்று எடுத்துக் காட்டுகளும் **சேர குலத்தில் பாண்டியர்கள்** பெண் கொண்டதனை உணர்த்து கின்றன. இனி வருவது **பாண்டியன் மகளைச் சேர வேந்தன்** கொண்டதனைத் தெரிவிக்கும்.

ஏ. கி. பி. 1266ல் பிறந்த இரவிவர்மன் என்பவன் வேணாட்டரசனுகக் கொல்லத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். இவன் தந்தையின் பெயர் ஜயஸிம்ஹன் என்பது. இரவிவர்மனது மனைவி ஓர் பாண்டிய வேந்தன் மகளாவாள். அவளைத் தனது 33-ஆம் வயதில் இவன் மணம் செய்துகொண்டான். இாவிவர்மன் பிற் காலத்தில் வீரபாண்டியன் என்ற பாண்டிய மன்னனையும் சோழ வேந்தனையும் வென்ருனென்றும், தனது 46-ஆம் வயதில் அஃதாவது 1312-ல் காஞ்சிமா நகருக்கு அடுத்துள்ள வேகவதி யென்னும் ஆற்றின் கரையில் வைத்துச் சோழ பாண்டியச் சக்கரவர்த்தியாக முடிசூடிக் கொண்டானென்றும் காஞ்சிபுரம் சாசனத்தால் தெரிகின்றன.[1]

மேலே கூறிய எடுத்துக்காட்டுக்களால் சேர சோழ பாண்டிய வேந்தர்கள் கி. பி. 13-ஆம் நூற்றுண்டு வரையும் கொள்வினை கொடுப்புவினை உடைய ஒத்த குலத்தவராய் ஒரு மொழியினராய் இருந்தார்கள் என்பதைத் தெள்ளத் தெளியத் தெரிகின்ரேம்.

## வேணுடு.

இனி, சேர நாட்டின் ஒரு பகுதியான வேணுட்டைப் பற்றிச் சில சொல்ல வேண்டும். இன்று நாம் அறிகின்ற வடிவத்தோடு திருவிதாங்கூர் முன்னர் என்றும் இருந்ததில்லை. மார்த்தாண்டவர்ம மன்னருக்குப் பின்னர் தான்

---

1 Epigraphia Indica Vol IV Page 145. No. 17.

ஒருவாறு இந்த வடிவத்தை அது பெற்றது என்னலாம். அதற்கு முன் அது பலப்பல பிரிவுகளைக் கொண்டதா யிருந்தது. [S]புறத்தாய நாடு அல்லது முறத்தா நாடு, நாஞ்சில் நாடு, குறுநாடு, படப்பா நாடு, தெங்க நாடு, முடால நாடு, வள்ளுவ நாடு முதலியவை அதன் பிரிவுகளுள் சில. இங்கெல்லாம் தனித்தனி அரசர்கள் இருந்தார்கள் என்பதில்லையாயினும் திருவிதாங்கோடு என்னும் பெயருள்ள நாடு ஒன்று இவற்றுள் ஒன்ருகவோ இவற்றின் சேர்க்கையாகவோ இருந்ததில்லை என்பது தெளிவு. யாதேனும் ஓரிடத்தைக் குறிப்பிடுகின்றபோது 'நாஞ்சில் நாட்டு அதிகனூர்', 'புறத்தாய நாட்டுக் கன்னியாகுமரி' 'குறுநாட்டு ஆளூர்' என்றின்னவாறு சொல்கின்ருற் போல 'திருவிதாங்கோட்டு இன்னவூர்' என்று பண்டைக்காலச் சாசனங்களில் எங்கும் வந்ததாக இல்லை. அன்றி 'இராஜராஜப் பாண்டி நாட்டு உத்தம சோழவளநாட்டுப் புறத்தாய நாட்டுக் கன்னியாகுமரி' என வந்தாற்போல, திருவிதாங்கோட்டைப் பெருநாடாக வைத்துச் சொன்னதாகவும் காணப்படவில்லை. காரணம், இன்றைய திருவிதாங்கூரின் அமைப்பும் அதற்கு அப்பெயரும் மிகப் பிந்தி ஏற்பட்டவை என்பதுதான்.

இன்றைய திருவிதாங்கூரின் தென் பகுதி அந்நாளில் 'வேணுடு' என்று அழைக்கப்பட்டு வந்ததாக அறிகிருேம். வேணுடு என்பதற்கு 'வேள்' மரபினரின் நாடு என்பது

---

S. புறத்தாயநாடு என்பது கன்னியாகுமரியும் அதைச் சூழ்ந்த இடமும். நாஞ்சில்நாடு என்பது ஏறக்குறைய தோவாளை அகஸ்தீசுவரம் தாலுகாக்களடங்கிய நிலப்பகுதி. குறுநாடு என்பது ஆளூர், வீராணிப் பக்கங்கள். பத்மநாபபுரமும் சுற்றுப் பக்கங்களும் படப்பா நாடு எனப்படும். தேங்காய்பட்டணம் பக்கங்கள் தெங்க நாடு பசுங்குளம். முடாலம் முதலான இடங்களைக் கொண்டது முடாலநாடு. முட்டம் முதலான இடங்கள் சூழ்ந்தது வள்ளுவ நாடு.

பொருள். இவ்வேளிர்கள் சேரவேந்தர்களின் ஒருகிளையின ராவர். இவர்கள் பண்டைய நாளில் தமிழ்நாட்டின் பல இடங்களிலும் சிறந்திருந்ததாகத் தெரிகிறது. கடையேழு வள்ளல்களின் வரிசையிற்பட்டவராய ஆய், பாரி, பேகன் என்போரும் இவ்வேள் குலத்தைச் சார்ந்தோரேயாவர். இக்குலத் தலைவருள் ஒருவனாகிய வேள்-ஆவி என்பவன் போதினி மலைக்குத் தலைவனாயிருந்தானென்று [1]அகநானூறு முதலியவற்றால் அறிகின்றோம். இந்நாளில் பழனி என்று வழங்கப்பட்டு வரும் மலையும் ஊருமே போதினி என்று கூறப்பட்டன. பழனிக்கு ஆவிநன்குடி என்ற பெயரிருப்பதும் இங்கே கருதத் தக்கது.

வேளாவிக்கோ மாளிகை என்ற ஒன்று வஞ்சிமா நகரில் இருந்ததாகச் [2]சிலப்பதிகாரம் சொல்லும். இவன் பெயரால் சேரநன்னாட்டில் மாளிகை ஒன்று அமைந்திருந்தமை கொண்டு இவ் வேள்குலத் தலைவனுக்குச் சேர நாட்டோடு இருந்த தொடர்பு சிறிது அறியப்படும். ஆம்; பதிற்றுப்பத்து என்னும் நூல் இவன் தொடர்பை இன்னும் வலுப்படுத்திக் காட்டுகின்றது. பதிற்றுப்பத்தின் நாலாம் பத்துப் பதிகத்திலும், எட்டாம் பத்துப் பதிகத்திலும் முறையே

**'ஆராத் திருவின் சேர லாதற்கு**
**வேளாவிக் கோமான்**
**பதுமன் தேவி ஈன்றமகன்**

**.........................................**

**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்'**—என்றும்,

---

**1. அகம் 1; 61.** **2. சிலப்பதிகாரம்-காதை 28; வரி 196-8.**

'பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு
வேளாவிக் கோமான் பதுமன்தேவி ஈன்றமகன்

..........................................................

பெருஞ் சேரல் இரும்பொறை' —என்றும்

கூறப்பட்டிருப்பதிலிருந்து வேள்-ஆவிக்கோமான் பதும னுடைய மகளிர் இருவர் நெடுஞ்சேரலாதன், செல்வக் கடுங்கோ வாழியாதன் என்ற சேர அரசர்களுக்கு வாழ்க் கைப்பட்டனரேன்றும், அவர் வயிற்றில் நெடுஞ்சேரலாத னுக்குக் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் (இவன் ஆறும் பத்துக்குத் தலைவன்) என்ற இருமக்களும், செல்வக்கடுங்கோவுக்குத் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்ற மகனும் பிறந்தனரேனத் தெரிகிறதேன்றும் ராவ்சாகிப் மு. இராக வையங்கார் அவர்கள் கூறுகின்றார்கள்.[1] ஆகவே, வேளிர் குலத்தலைவனாய இப் பதுமன் சேர வேந்தர்க்கு மகட் கோடை நேரும் தகவுடையனாய்ச் சிறந்திருந்தமை இத னால் அறியப்படும்.

இக் குலத்தலைவருள் வேள்-ஆய் என்பான் கரவாது ஈயும் வள்ளற்றன்மை யுடையனாய் வாழ்ந்திருந்த செய்தி யைப் புறநானூறு முதலிய நூற்கள் நமக்குப் புகலுகின் றன.கோடைமடம் படுதலல்லது படைமடம் படா ஆயின் பெருமைகளைச் சிறப்பித்து உறையூர் ஏணிச்சேரி முட மோசியார் பாடிய பல பாக்கள் புறநானூற்றுள் இருக்கின் றன. அவையனைத்தும் படித்துப் படித்து இன்புறத் தக்கவை.அவற்றால் அவன் குணமாண்புகள் அறியப்படு வதோடு ஆயின் தலைநகர் 'ஆய்குடி'என்பதும்,அவன் மலை

1. வேளிர்வரலாறு: பக்: 33-34.

'பொதியில்' என்பதும், அவை தெற்கின் கண் இருக்கின்றன என்பதும் அறியப்படும்.

**[1]"வடதிசை யதுவே வான்தோய் இமயம்**
**தென்திசை ஆ அய் குடியின் ருயின்**
**பிறழ்வது மன்னேஇம் மலர்தலை யுலகே'**

**[2]'கழல்தொடி ஆ அய் மழைதவழ் பொதியில்'** -என்னும் புறநானூற்றடிகள் பிற்கூறப்பட்டவற்றை விளக்குபவை. இக்காலத்தில் 'ஆய்குடி' என்னூர் ஊர் செங்கோட்டையின் வடகிழக்காய்ச் சில கல் தொலைவில் இருப்பது பலருக்கும் தெரிந்த ஒன்று. இதுவே வேள்-ஆயின் ஊராய் இருக்கலாமோ என்னும் எண்ணம் எழுதல் இயல்பு. இது பற்றிய ஆராய்ச்சி ஈண்டைக்கு வேண்டா.

ஆனல் திருவிதாங்கூரின் தென்பாற் பகுதிகள் இவ் வேள்-ஆயினுடையவோ, ஆயின் மரபினருடையவோ ஆட்சியின்கீழ் இருந்து வந்ததாகச் சில ஆதாரங்கள் கொண்டு அறிய முடிகின்றது. ஏறக்குறைய 1780 ஆண்டுகளுக்கு முன் தென்னிந்தியாவில் சுற்றித் திரிந்து நாட்டின் இயல்புகளையும் ஆட்சி முறைகளையும் பற்றிக் குறிப்புகள் எழுதிய யவன ஆசிரியரான தாலமி (**Ptolomy**) என்பார் ஆயின் நாட்டைப் பற்றிக் கூறும்போது அதில் ஐந்து துறைமுகங்கள் இருந்ததையும் 'கோட்டியாரா' (**Kottiara**) என்னும் இடம் இருந்ததையும் குறிப்பிடுகின்ருர். இவ்விடத்தைப்பற்றி டாக்டர்: கால்ட்வெல் தமது ஒப்பிலக்கணத்தில் கூறுவது வருமாறு:-" இது பறளியா அல்லது ஆய்நாட்டில் உள்ள ஓரிடத்தின் பெயராகும். தாலமி என்பார் இதைக் **Kottiara Metropolis** என்ருர்.

---

**1. புறம் : 132 2. புறம் : 128**

பிளினி (Pliny) இதைக்' கோட்டாரா' (Kottara) என்கின்றார். இவற்றால் பெரியவாணிபச் சிறப்புப் பெற்றுள்ள இன்றைய கோட்டாறே இவர்களால் குறிப்பிடப்பட்டது என்பதற்கு ஐயமில்லை'' என்பதாம்.

ஆய்நாட்டில் கோட்டியாரா அல்லது கோட்டாரா என்ற ஓரிடம் இருப்பதாக முறையே தாலமியும் பிளினியும் சொல்கின்றார்கள். ஆனால் அவர்கள் ஆய்நாடு எதுவென்றும் எங்கிருக்கிறதென்றும் தெளிவாகச் சொல்லவில்லை. டாக்டர்: கால்ட்வெல் துரைமகனே அதுதான் பறளியா நாடு என்கின்றார். இனி அது எங்கிருக்கின்றது என்பது அடுத்த கேள்வி. இக்கேள்விக்கு விடையிறுத்தல் எளிது. [1]பறளியாறு பாயப்பெற்ற நாடு பறளி நாடு. அது தான் நாஞ்சில் நாடு உள்ளிட்ட தென் திருவிதாங்கூர்ப் பகுதி. ஆம்; பறளியாறு பாய்கின்ற தென்திருவிதாங்கூர் தான் பறளி நாடு அல்லது வேணாடு என்று திருவிதாங்கூர்ச் சாசன ஆராய்ச்சி இலாகாத் தலைவரான திரு. கோபிநாதராயரவர்கள் முடிவுகட்டிச் செல்கின்றார்கள்.[2] நிற்க.

1. பறளி என்பது பஃறுளி என்பதன் சிதைவு. இது இன்றைய பழையாற்றைக் குறிப்பிடுவதாம். இதுபற்றிய விவரங்களை 'நாஞ்சில் நாடு' என்னும் தலைப்பில் ஆறு என வருவதில் பார்க்க.

2. Dr. Caldwell in his Comparative Grammar of Dravidian Languages states that the Greek Geographers who visited South India in the early centuries of the Christian era have described many places of which Kottara is one. About this he writes "This is the name of a place in the country of the 'Aii' or 'paralia' (identical with South Travancore), which is called 'Kottara Metropolis, 'by Ptolemy, "Kottara' by Pliny. Undoubtedly the town referred to is Kottaru, or, as it is ordinarily spelt by the Europeans, Kotaur, the principal town in South Travancore and now as in the time of the Greeks distinguished for its Commerce." But then Caldwell has not said anything about the Aii or Paralia The first

இவ் ஆய்மரபினராய வேளிர்கள் கி. பி. பதினைந்தாம் நூற்றுண்டிலுங்கூட இங்கே ஆட்சி புரிந்து வந்ததாக அறியப்படுகின்றுர்கள். வேள்விக்குடிச் சாசனம் கி. பி. எட்டாம் நூற்றுண்டில் எழுந்ததாகும். அதில் கீழ்வரும் தொடர்கள் இருப்பதைப் பார்க்கலாம்.

"ஆய் வேளை அகப்பட ஏயென்ணுமை எறிந்த
ழித்துச், **செங்கொடிஉம் புதான் கோட்டுஞ்**
செருவென்றவர் சினந் தவிர்த்துக் கோங்கலருந்
நறும் பொழில்வாய்க் குஇலோடு மஇலகவு
மங்கலபுரமென்னும்.................."

இதில் கூறப்பட்டிருக்கும் செங்கோடி என்பது திருவாட்டாற்றின் அண்மையிலுள்ள **'செங்கோடி.'** என்னும் ஊர். புதான்கோடு என்றது திருவிதாங்கோட்டினையா யிருக்கவேண்டும். இவ்விரண்டு ஊர்களும் கல்குளம் தாலுகாவில் உள்ளன. இவை பற்றிய விவரங்கள் 'திருவிதாங்கூர்' என்னும் தலைப்பின் கீழ்க் கூறப்படும். ஆய்வேளின் தொடர்பு கல்குளம் தாலுகாவுக்கு இருந்தது என்பதற்கு இச்செப்பேட்டுத் தொடர்கள் சான்றுக நிற்கின்றன என்பது மட்டுமே இங்கு அறியவேண்டுவது.

கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டில் ஆய்மரபைச்சேர்ந்த கோக்கருநந்தடக்கன் என்ற மன்னனும், அவனைத் தொடர்ந்து விக்கிரமாதித்திய வரகுணன் என்பவனும் முன்சிறைப் பக்கத்தில் ஆட்சி செலுத்தியிருக்கிறுர்கள்

---

**name evidently refers to the chieftains of the Ay family, while the second name is that of a river, the PARALIYARU; by 'the country of Paralia' we must understand the country watered the river Parali; this is no other than the South Travancore. This is also the same country as the Venadu mentioned in inscriptions. (T. A. S. Vol; I P. 188)**

என்பது அவர்கள் கொடுத்த சாசனங்களால் தெரிய வருகின்றது. இதுபற்றி 'முன்சிறை' யென்னும் தலைப்பில் எழுதப்பட்டிருப்பதைப் பார்க்க. இவ்வூரும் தென்திருவிதாங்கூரில் உள்ளதே. இவற்றால் இவ் ஆய்மரபினர்கள் தென்திருவிதாங்கூரை மிகப் பழங்கால முதலே ஆண்டு வந்தார்கள் என்பது நன்கு அறியப்படும். அறிஞர் கோபிநாதராயரவர்களின் ஆராய்ச்சி முடிபும் இங்குக் கவனிக்கத்தக்கது. அவர், இவ் ஆய்மரபினரின் நாடு தென்திருவிதாங்கூரே எனவும், இவரது ஆய்குடி **கோட்டாறு** என்ற பழம் பெருமை வாய்ந்த ஊராகவே இருக்கவேண்டுமெனவும், **சாசனங்களில் வேணாடு என வழங்கப்படுவது இவ்வாய்நாடே** எனவும், கி. பி. எட்டாம் நூற்றாண்டில் விளங்கிய ஜடிலவர்மன்-பராந்தகன் என்ற பாண்டியனைப் பற்றிய சாசனங்களில் இவ்வாய்மரபினர், மலைநாட்டு **ஆய்வேள்** என்றும், **வேள்மன்னர்** என்றும் வழங்கப்பட்டுள்ளனர் எனவும் கூறுகின்றார்.[1]

இங்ஙனமாகவும், திருவிதாங்கூர் ஸ்டேட் மானுவல் எழுதிய திருவாளர் **T. K.** வேலுப்பிள்ளை யவர்கள், ஆய் நாடு வேறு; வேணாடு வேறு என்றும், ஆய் நாடானது வேணாட்டை யடுத்துக் குமரியினின்று வடதிசை நோக்கி நெடுந்தூரம் மலையோரமாகச் செல்வதென்றும், விழிஞம் கோட்டாறு இப்பொழுதுள்ள தென் திருவிதாங்கூரில் பெரும் பகுதிகள் என்பவை ஆய்நாட்டில் சேர்ந்திருந்தன என்றும் கூறுகிறார்கள். வேணாட்டரசர்களைச் சோழபாண்டிய வேந்தர்கள் என்றுமே வென்றதில்லை யென்பது அவர் கொள்கை. வேணாட்டரசர்க்கும் பாண்டிய மன்னர்க்கும் போர் நடந்தன வென்றால் அவை தம் அண்டையி

---

**1. வேளிர் வரலாறு: 32, 33**

லுள்ள ஆய்மன்னருக்குத் துணையாகச் சென்று இவர் நிகழ்த்திய போராகவே இருக்கும் என்கின்றார் திரு. பிள்ளை அவர்கள்.[1]

இவர் கோள்கைகள் சிறிது பகுத்தறிவுடையவர்களுக்கும் ஏற்கும் தரமுடையனவாக இல்லை. முதலாவது இவர் கூறுகின்ற ஆய்நாட்டின் அமைதியைப் பார்ப்போம். மலைத்தொடரைக் கிழக்கெல்லையாகக் கொண்டு குமரியும் கோட்டாறும் விழிஞமும் தன்னகத்தே அடக்கி வடக்கு நோக்கிச் செல்கின்றது ஆய்நாடு என்பது இவர் கூற்று. இனி இவர் கூறாத ஒன்றினையும் நாம் இங்கே தழுவிக் கொள்ளவேண்டும். அதைப் பிள்ளையவர்கள் வேண்டுமென்றோ தெரியாமலோ விட்டிருக்கிறார்கள். எடுத்துக் காட்டினால் அவரும் எவரும் மறுக்கமாட்டார்கள். அது தான் நாம் முன்னே காட்டிய வேள்விக்குடிச் செப்பேட்டில் வரும் தொடர்; 'செங்கோடி' 'முதாங்கோடு' என்னும் ஊர்கள். இவ்வூர்கள் ஆயினுடையவை என்பதற்குச் சந்தேகமில்லை. இவ்வளவையும் வைத்துக் கொண்டு திருவிதாங்கூரின் கிடப்பைப் பற்றிச் சிந்திப்பவர்களுக்கு இவற்றினிடையே ஒரு தொடர்ச்சியான பகுதி கொண்ட வேற்று நாடு இருந்திருக்க முடியுமா என்பது விளங்கும்.

விளக்கமாகச் சொன்னால் தென்னெல்லையில் கடற்கரையிலுள்ள குமரி, உள்நாட்டிலுள்ள கோட்டாறு, அதினின்று வடமேற்கே சுமார் 12 கல் தொலைவில் இருக்கும் திருவிதாங்கோடு (முதாங்கோடு), அதினின்று வடகிழக்கே சுமார் 10 கல் தொலைவிலிருக்கும் செங்கோடி, அதினின்று வடமேற்கே சுமார் 20 கல் தொலைவில் கடற்கரையிலிருக்கும் விழிஞம் என்ற இவை தழுவி, திரு. பிள்ளையவர்கள் கூறுகின்ற மலைத்தொடராகிய கிழக்கெல்

1. Travancore State Manual by T. K. Velu Pillay Vol. II. PP 50,95.

லையையும் கொண்டு இருந்த ஒரு நாட்டினிடையிலே இன்னொரு நாடு இருந்தது என்று சொல்வது உழக்குக்குள் உழக்கிருந்தது என்று சொல்வதைவிட ஆச்சரியமல்லவா? வடக்கெல்லையைப்பற்றித் திரு. பிள்ளையவர்கள் குறிப்பிட வில்லை. ஆகவே நாமும் விட்டுவிடுவோம். ஆனால் திருவனந்தபுரத்தினின்று கொட்டாரக்கரைக்குச் செல்லும் வழியில் கிளிமானூருக்கு வடக்கே, கொட்டாரக்கரையினின்று 11 கல்லுக்குத் தென்பால், பழைமை யெல்லாம் மாண்டு மடிந்து மண்ணாகிக் கொண்டு வருகிற இந்தக் காலத்திலும் **ஆய்ஊர்** என்ற பெயருடைய ஊரொன்றிருக்கிறதென்பது அறிஞர்களின் சிந்தனைக்கு உரியது. நிற்க.

அறிஞர்களான கோபிநாதராயரவர்கள், மு. இராகவையங்காரவர்கள் முதலியோர் ஆய்நாடும் வேணாடும் ஒன்றென்றே பல இடங்களிலும் கூறியிருக்க, இவர் மட்டும் இரண்டும் வேறென்று சொல்வதற்குக் காரணமென்ன? சோழியன் குடுமி சும்மா ஆடுமா? ஆய்நாட்டைப் பாண்டியர் வென்றதற்கான ஆதாரங்கள் இருக்கின்றன. ஆய்நாடும் வேணாடும் ஒன்றென்றால் வேணாடு தோற்கடிக்கப்பட்டது என்னும் உண்மையை ஒப்புக் கொள்ள நேரும். இதற்காகவே மலைநாடு என்றோ மலைமண்டலமென்றோ உள்ள பெயர்களும் இதற்கு இருந்ததில்லை; அப்பெயர் வடபாலுள்ள பகுதிகளுக்கு வாய்த்ததாகும் என்றுகூடச் சொல்கின்றார். உண்மையை மறைத்தாலும் பாதகமில்லை; சரித்திரம் என்னும் பேரால் தம் நாட்டுக்கு உயர்வைத் தேடிக் கொடுக்க வேண்டும் என்பதே திரு. பிள்ளையவர்களின் நோக்கம்போலும்.

சரித்திரம் எழுதப் புகுவார்க்கு ஆழ்ந்த அறிவும் விரிந்த சிந்தையும் உண்மை காணவேண்டுமென்னும்

அவாவும் இருத்தல்வேண்டும். தாமறிந்த உண்மையை எவர்க்கும் அஞ்சாமல் நேர்மையாகவும் சகிப்புத்தன்மை யுடனும் கூறவல்ல ஆற்றல் வேண்டும். தன் சாதி, தன் மதம், தன் நாடு என்ற குறுகிய மனப்பான்மை அவர்களிடம் இருத்தலாகாது. எந்த ஒரு போலிக் கொள்கையை யேனும் முன் நிறுத்திக்கொண்டு அவர்கள் சரிதம் எழுதத் தொடங்குதலும் தவறு. ஆழ்ந்த இலக்கியப் பயிற்சியும் அவர்களுக்கு இன்றியமையாதது. இவையெல்லாம் இல்லையேல் அவர் எழுதும் வரலாறுகள் செல்லாக் காசினும் கேடுகெட்டவையாகவே கருதப்படும்.

இனி ஒவ்வொன்றுகப் பார்ப்போம். 'வேணுடு' என்பது வேள் மரபினர் ஆண்டமையால் ஏற்பட்ட பெயர் என்பதும் அது குலப் பொதுப்பெயர் என்பதும் முன்னரே சொல்லப்பட்டன. ஆனால் திரு. பிள்ளையவர்கள் தமிழிலக்கியங்களிலே முங்கித் திளைத்தவர் போன்று வேணுட்டுக்கு மூலம் காண்கின்றுர். அது வானவன் நாடு என்பதன் திரிபாம்[1]. வானவன் + நாடு = வானவனுடு என்றுவதைத் தவிர 'வேணுடு' எனத் திரிவதற்கு என்ன ஆதாரமிருக்கிற தென்று தெரியவில்லை. போகட்டும்: சேர நாட்டை வானவனுடு என்று குறிப்பிட்டுள்ள இலக்கிய மேற்கோள் கள் எங்கேனுமுண்டா?[2] இத்திரிபு, மொழி நூல் முறைக்குப் பொருந்துமா? என்பவற்றைத் திரு. பிள்ளை ஆராயவில்லை. வேள் என்னும் பெயருடன் சார்த்தி வேள் ஆய், வேள் நன்னன், வேள் எவ்வி, வேள் பாரி,

---

1. **The term Venad is derived from Vanavanad, the country of Vanavan. Vanavan means the Chera King in ancient Tamil Literature P. 42. (Foot note)**
2. **வானவன்நாடு இது என்பதைக் காட்டும் சாசனத்தைப் பிற்சேர்க்கையிற் காண்க.**

வேள் ஆவி, வேள் எழினி ஆதன், இருங்கோ வேள் என அமைந்த பெயர்கள் இலக்கியங்களில் பயின்றுவந்திருப்ப தற்கு யாது சமாதானங் கூறுவர்? இவரை மட்டும் ஏன் சொல்ல வேண்டும்? இன்று பாடசாலைகளில்தான் வேணாடு என்பதற்கு என்ன பொருள் கற்பிக்கின்றார்கள் ஆசிரியர்கள்? 'வேய் (மூங்கில்) மிகுதியாய் வளர்வதால் இதற்கு 'வேணாடு' என்று பெயர், என்பதுதான் அவர்கள் இளம் குழவிகளுக்குச் சொல்லிக் கொடுக்கின்ற பொருள். இதனை விட அறியாமை உண்டா? இதற்கு யாரை நோவது? வேளும் ஆயும் வேறல்ல; ஆய்க்கு அமைந்த குலப்பெயரே வேள்; என்பதைப் பின் வரும் இலக்கியங்கள் தெள்ளத் தெளிய நமக்குக் காட்டுகின்றன.

[1] **'மாரி யன்ன வண்மைத்**
**தேர்வேள் ஆயைக் காணிய சென்மே'**

[2] **'கறையடி யானை இரியல் போக்கும்**
**மலைகெழு நாடன் மாவேள் ஆஅய்'**

இக்குலத்தில் இவன் சிறந்து விளங்கினமையால் இவன் பின்னையோரும் தம் குல முதல்வனை ஆயின் பெயரைத் தம் பெயருடன் சார்த்திப் புனைந்திருத்தல் கூடும்.

[3] **'நுண்கோல் அகவுநர் வேண்டின் வெண்கோட்டு**
**அண்ணல் யானை யீயும் வண்மகிழ்**
**வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்'** -என்றும்,

[4] **'அஞ்சல் என்ற ஆஅய் எயினன்'** -என்றும் வருவனவற்றால் இதனை அறியலாம்.

---

1. **புறம் 133. 6-7** 2. **புறம். 135: 12-13.**
3. **அகம் 208. 3-5.** 4. **அகம். 396.**

"ஆயின்நாடு தென்திருவிதாங்கூர்ப் பகுதி என்பது, தாலமி (**Ptolemy**) என்ற யவன ஆசிரியரின் குறிப்பால் அறியப்படுவதாம். ஆய் மரபினர் கி. பி. 8-ஆம் நூற்றாண்டின் பின்பும் இப்பகுதியை ஆண்டு வந்தனர். இவ்வேள் குலத்தாரது ஆட்சிக்கு உரிமையானமைபற்றி **'வேள்நாடு'** என்ற பெயர் தென்திருவிதாங்கூர்ப் பகுதிக்கு வழங்கியதாகக் கருதல் பொருந்தும். இப்பகுதி, கேரள நாட்டரசரது ஆட்சிக்குட்பட்டுப் பல நூற்றாண்டுகள் ஆயின[1]" என ராவ் சாகிப் மு. இராகவய்யங்காரவர்கள் கூறுவதும் கவனிக்கத் தக்கது.

அடுத்தபடியாக மலைநாடு அல்லது மலை மண்டலம் என்னும் பெயர் இந்நாட்டுக்கு இருந்ததா என்பதைப் பார்ப்போம். கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்த சேக்கிழார் பெருமான் இந்த ஐயத்தை நன்கு தீர்த்து வைக்கின்றார்.

> **'விரைசெய் நறும்பூந் தொடையிதழி**
> **வேணி யார்தம் கழல்பரவிப்**
> **பரசு பெறுமா தவமுனிவன்**
> **பரசு ராமன் பெறுநாடு**
> **திரைசெய் கடலின் பெருவளனும்**
> **திருந்து நிலனின் செழுவளனும்**
> **வரையின் வளனும் உடன்பெருகி**
> **மல்கும் நாடு மலைநாடு'[2]**
>
> ..............................
>
> **சேரர் திருநாட் டூர்களின்முன்**
> **சிறந்த மூதூர் செங்குன்றூர்,[3]**

---

1. சேரவேந்தர் செய்யுட்கோவை; முன்னுரை: வேள் ஆய் அண்டிரன்.
2. பெரியபுராணம: விறல்மிண்டர்: 1.
3. ஷ ஷ 2.

இவற்றால் அறியப்படுவதென்ன? செங்குன்றூர் மலை நாடாகிய சேரநாட்டிலிருக்கிற தென்பதல்லவா?

"இராஜாதித்த தேவர் பெரும்படை நாயகர் மலை நாட்டு நந்திக்கரைப்புத்தூர் வெள்ளன் குமரன்[1]"

எனக் கல்வெட்டில் வருவதனையும் காண்க.

இனி, மலை மண்டலமென்னும் வழக்கு இந்நாட்டுக்கு உண்மையையும் காட்டுவோம்.

"கீளப் பேரூர் சிறிவீரர் இரவிவற்ம சிறவா மூத்தவராய நாம் மலை மண்டலத்து கண்ணனுரு பூவங்க விளாகத்து கோயிக்கல் இரிக்கும் காரியத்துக்கை கண்ணன் விக்கிரமன்றெ தறவாட்டில்க்கு..............

மலைமண்டலத்து வேலவூர் தேசத்து காரியத் துறை கண்ணன் விக்கிறமன்..............

"மலைமண்டலத்து செங்கழுனிர் வளநாட்டில் நயினார் முத்தளக் குறிச்சியான ஸ்ரீ வீரகேரள புரத்து கோவிலில்..............."[2]

'மலைமண்டலத்து திருவிதாங்கோட்டு இரவி வன்மராய குலசேகரப்பெருமாள் பெருந் தெரு வில்ச் செட்டு வேலாயுதப்பெருமாள்"[3]

"நாஞ்சிநாட்டு பூதைப்பாண்டியில் நயினார் பூதைப்பாண்டீச் சுவரமுடைய நயினார் சிபண்டாரக் காரியஞ் செய்வார்களோம் மலைமண்டலத்து முடால நாட்டுப் பெருமாங்குழித் தேசத்து"[4]

---

1. T. A. S. Vol; I. P. 291. நந்திக்கரை - திருநந்திக்கரை.
2. T A. S. Vol; IV. P. 154 வரி 2, 9. P: 156 வரி 19 இவ்வூர்கள் கல்குளம் தாலுகாவில் உள்ளன.
3. T. A. S Vol; V. P. 116. 4 T. A. S. Vol; VII; P. 82.

இவற்றால் வேணாடும் ஆய்நாடும் வேறல்ல வென்பதும், இதற்கு மலைநாடு, மலைமண்டலம் என்னும் பெயர்களிருந்தன வென்பதும், ஒவ்வொரு காலங்களில் வேணாட்டாரும் பாண்டியரும் தமக்குள் போர் தொடுத்துக் கொண்டனரேனும் மிக்க சமீபகாலம்வரை இவர்கள் மொழியால் வேறுபட்டிருக்கவில்லை என்பதும் அறியத் தக்கனவாம். நிற்க.

இம்மரபினர், தம் வண்மையால் தமிழ்ப் புலவர்களை அணைத்துத் தமிழ் வளர்த்ததுமட்டுமல்ல; தாமும் தமிழ்ப் புலமை சான்றவர்களாயும், சமயப் பேரறிவு படைத்தவர்களாயும் இருந்திருக்கிறார்கள். திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்களான சேந்தனார், திருமாளிகைத் தேவர், கண்டராதித்தர் என்போர் வரிசையில் வேணாட்டடிகள் என்பார் ஒருவரும் காணப்படுகின்றார். இவர், இந்த வேணாட்டரசர் குலத்தைச் சார்ந்தவரேன்றே பலரும் கருதுகின்றனர். இயற்பெயர் அறியப்படாமல் குலப்பெயரால் அழைக்கப் படுகின்ற இவர், திருவிசைப்பா ஆசிரியர்களின் காலமான பத்து அல்லது பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் ஆகல் வேண்டும். இவர் பாடல்கள், திருமுறை, வகுப்புள் ஒன்பதாம் திருமுறையில் சேர்க்கப்பட்டிருப்பது யாவரும் அறிந்த ஒன்று.

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த வேணாட்டரசர் 'அகில கலா வல்லவன் சேரமான் பெருமாள் வஞ்சிமார்த்தாண்டன்' எனப்படுபவர். இவரும் தமிழ்ப் புலமை சான்றவராய்ச் சிறந்து விளங்கினர் எனத்

தெரிகிறது. இவரைப்பற்றி ராவ்சாகிப் மு. இராகவையங்காரவர்கள் கூறுவனவற்றை அப்படியே தருகின்றேம்:-

[1]"சோணுட்டு மூவலூர்ச் சிவாலயத்தின் கோபுர வாயிலிலே சிலாலிகிதமான பாடல்கள் சில உள்ளன. அவை ஒன்றனுள்[2]:-

'அகில கலா வல்லவன் சேரமான் பெருமாள் வஞ்சி மார்த்தாண்டன் திருப்பா மூத்த திருவடி சொல்லிவரக் காட்டின பாகுடக்கவி' என்ற குறிப்புடன் அடியிற்கண்ட செய்யுட்கள் சிறிது சிதைந்து காணப்படுகின்றன. அவை வருமாறு:-

**தேமா வயங்கு செய்யா...மபாற்கடற் சேதிபர்கோன்**
**மாமால் புதுவைச் சடையன் [வனென்?] மங்கை யுங்கே**
**ஆமா மனையந்த வாயிழை செந்த....தாசையெல்லாம்**
**போமாறு கண்டுவிட் டாளென்று கூறுமப் பூங்கொடிக்கே.**

**காவிரியைக் சோணுட்டைக் காராளர் தம்மரபை**
**நாவலரைக் காவலரை நல்லோரைப்-பூவலயம்**
**உள்ளத் தகும்புதுவை யூரைச் சிறப்பித்தான்**
**பிள்ளைப் பெருமாள் பிறந்து"**

இதனுல் வஞ்சிமார்த்தாண்டன் என்பார் கலைகள் பலவற்றினும் வல்லவராகவும் தமிழ்ப் புலமையாளராகவும் விளங்கிய சேரவேந்தர் என்பது தெரியலாம். இவ்வேந்தரைத் 'திருப்பாமூத்த திருவடி' என்று கூறுவதால் திருப்பாப்பூர்க் குடியைச் சார்ந்த வேணுட்டரசராகவும்,[3] வஞ்சி

---

1. சாஸனத் தமிழ்க்கவி சரிதம்; பக். 136-137
2. செந்தமிழ், தொகுதி 4, பக். 251.
3. திருப்பா என்பது திருப்பாப்பூர் என்பதன் மரூஉவாம். 'திருப்பாப்பூர் மூத்தவர்' (540 of 1926). 'சிறைவாய் மூத்தவர்' (517 of 1917) என இவர் வழியரசர்களும் இங்ஙனமே குடிப்பெயராற் கூறப்படுவர். இக்காலத்துத் திருவனந்தபுரமன்னரும் இத் திருப்பாப்பூர் வம்சத்தவரே என்பது அறியத் தக்கது.

என நகரும் சேரமான் பெருமாள் என மரபும் கூறப்படுத லின் பழைய சேர வமிசத்தின் கிளையினராகவும் விளங்கிய வர் இவர் என்பது அறியப்படும். இவ் வேந்தரது சாசனம், தென்பாண்டிநாட்டுச் சேரமாதேவிப் பக்கத்தே கொல்லம் 624 (கி. பி. 1448)ல் அமைந்துள்ளது. இதனுல் 15-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் இவ் வேணுட்டரசர் என்பது தெளிவாவதாம். இத்தகையோர், சேதிபர் குலத்தோன்றலும் புதுவைச் சடையன் என்பார் மகனுமான பிள்ளைப் பெருமாள் என்ற தலைவனைப் புகழ்ந்து கூறியவை மேற்கூறிய பாடல்கள்."

[1]"இதனுல், தென்னுட்டரர்சியலில் விஜயநகர அரசர் காலத்தே பெருந் தலைமையும் அதிகாரமும் வகித்திருந்த வன் பிள்ளைப் பெருமாள் என்பது பெறப்படுதலின், அத் தகையோனது பேருதவி யொன்றை வேண்டி அவற் குப் பாகுடக்கவி எழுதி விடுக்கலாயினர் இச்சேரமான் பெருமாள் என்க.

[பாகுடக்கவி—கையுறையாகச் சமர்ப்பிக்கும் பாடல்; பாகுடம்-கையுறை]

இவ்வேணுட்டரசர் வழியில், 100 ஆண்டுகட்குப் பின்பு கி. பி. 1541-ல் 'சகல கலை மார்த்தாண்டவர்மன் சிறைவாய் மூத்த திருவடி' எனப்பட்ட அரசரொருவர் ஆட்சி புரிந்தாரென்பது சுசீந்திர சாசன மொன்ருல் தெரிய வருகின்றது.[2] இவர் காலத்தவராகப் பிள்ளைப் பெருமாளைக்கொண்டு அறிஞர் சிலர் எழுதினரேனும், அஃது அத்தலைவற்குப் புதுக்கோட்டைச் சாசனங் கூறும்

1. செந்தமிழ், தொகுதி 4: பக்: 139.
2. T. A. S. Vol. 1. P. 56

காலத்துடன் இயையாமையின், சேரமாதேவிக கல்லெழுத்திற் கண்ட மார்த்தாண்டவர்மரே மூவலூர்ச் சாசனப் பாடல்களின் ஆசிரியர் என்பது தேற்றமாம்.

இம் மலைநாட்டரசர் போலவே, இவர் வழியினரான பிற்காலத்து வேந்தர்களும் தமிழில் அறிவும் அபிமானமும் படைத்திருந்தனர். இலக்கண விளக்க ஆசிரியரான வைத்தியநாத தேசிகர், ஆதி சாவணப்பெருமாள் கவிராயர் முதலியோர் இவ்வரசர்களால் வரிசை முதலியன பெற்றுச் சிறப்புற்றமை அறியத் தக்கது''[1] என்பதாம்.

அன்றியும் அகிலகலா வல்லவன் சேரமான்பெருமாள் வஞ்சிமார்த்தாண்டன் என்ற இம் மன்னவன் திருக்குறுங்குடி நம்பியைப் போற்றி வழிபட்டு வந்தமையும் தருமங்கள் விட்டமையும் அறியப்படுகின்றன. அக்கோவிலில் தொங்கும் மணியொன்றில் கீழ்வரும் பாடல் பொறிக்கப்பட்டுள்ளது.

**'செயதுங்க நாட்டுச் சிறவாய்மன் னுதித்தன் தென்வஞ்சியான்**
**வியலொன் றகில கலையாளன் கன்னி விசாகம் வந்தோன்**
**நயமொன்று கொல்ல மறுநூற்று நாற்பத்து நாலினண்பால்**
**அயனும் பணிய மணியளித் தானம்பிக் கன்புகொண்டே.'**

என்பது அது.

இதுகாறுங் கூறியவற்றால்-சேரநாட்டின் தென்பகுதி வேணாடு என வழங்கப்பட்டு வந்ததென்பதும், கடைச்

---

**1. பெருந்தொகை 1713, 1788. இவ்விரு பாடல்களும் முறையே வைத்தியநாத தேசிகர் மலைநாட்டரசரைப் பாடியபோது அவ்வரசனது சபையோர் வியந்து கூறியது' என்றும், அட்டாவதானி-ஆதிசரவணப் பெருமாள் கவிராயரைத் திருவனந்தபுர வேந்தர் 'எந்தவூர்' என்று வினவியபோது பாடியது' என்றும் உள்ள தலைப்பின் கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளன.**

சங்க நாளில் புலவர் பாடும் புகழ்படைத்த வள்ளியோனு கிய ஆயையும், கி. பி. பத்து அல்லது பதினோராம் நூற் ருண்டில் பத்திச்சுவை சொட்டத் திருவிசைப்பாப் பாடிய சைவ சமயப் பெரியாராகிய வேணுட்டடிகளேயும், அதன் பின் பதினைந்தாம் நூற்ருண்டில் தமிழ்ப் புலமை சான்ற சேரமான் பெருமாள் வஞ்சி மார்த்தாண்டன் என்பாரை யும் இவ்வேணுடு தோற்றுவித்துள்ளது என்பதும், இக் காலத்துக்குப் பின்னருங்கூட மலைநாட்டரசர்கள் தமிழறி வும் தமிழபிமானமும் மிக்கவர்களாயிருந்தார்களென்ப தும் பிறவும் நன்கு விளக்கமுறுகின்றன.

பிற்காலத்தில் வேணுட்டரசர் குலம் பல பிரிவுகளா கப் பிரிந்தது. கீழ்ப்பேரூர் இல்லம், திருப்பாப்பூர் சொரூ பம் என்பவை அவைகளிற் சில. இப்பிரிவுகளைச் சேர்ந்த அரசர்களும் வேணுட்டரசர் என்றே கல்வெட்டுக்களிற் குறிப்பிடப்படுகின்ருர்கள். திருப்பாப்பூர் சொரூபமும்- திருப்பாப்பூர், ஜயதுங்கநாடு முதலிய கிளைகளாகப் பிரிந் தது. இவைகள் யாவும் பிற்காலத்தில் ஒன்ருய்ச் சேர்ந்த குடும்பம்தான் இப்போது ஆட்சியிலிருக்கும் திருவிதாங் கூர் மன்னர் குலம்.

## திருவிதாங்கூர்

இதற்குத் திருவிதாங்கூர் என்ற பெயர் ஏற்பட்ட விதத்தை நினைக்கும்போது சென்னையிலுள்ள 'ஹாமில் டன் பிரிட்ஜ்' அம்பட்டன் பிரிட்ஜாகி, பின் அது 'பார் பேள்ஸ் பிரிட்ஜ்' ஆன வேடிக்கைதான் நினைவுக்கு வரு கின்றது. முன் நாளில் தேன் திருவிதாங்கூரைச் சார்ந்த பத்மநாபபுரமும் அதனை அடுத்துள்ள திருவிதாங்கோடும் தலைநகரங்களா யிருந்திருக்கின்றன. திருவிதாங்கோட்டு

அரசர் வடபாலுள்ள ஜயசிங்க நாடு, காயங்குளம், தெக்கங்கூர், வடக்கங்கூர் முதலான இடங்களைப் பிடித்தடக்கின போது அவை திருவிதாங்கோட்டைச் சேர்ந்தவையாகக் கருதப்பட்டன. ஆகவே, நாடு முழுமைக்கும் **திருவிதாங்கோடு** என்ற பெயர் ஏற்பட்டது.

பின், ஆங்கிலேயரின் தயவால் பல ஊர்ப் பெயர்களும் தடித்து வீங்கி, சிறுத்துப் பெருத்து, தேய்ந்து மாய்ந்து, கனத்துக் கரகரத்துத் திரிந்தனவே; ஆரைவாய் மொழி-ஆரும்போளி என்றும், [1] அறமுனி என்றும், கன்னியாகுமரி-கேப்காமோரின் என்றும், கொல்லம்-கொய்லோன் என்றும், திருவனந்தபுரம்-ட்ரிவான்ட்ரம் என்றும் மற்றும் ஆயினவல்லவா? அந்தக் கூட்டத்தில் திருவிதாங்கோட்டுக்கும் ஒரு பாக்கியம் கிடைத்தது. அது 'ட்ராவன் கோர்' ஆயிற்று. பிறகு அதனை நம்மவர்கள், தங்கள் சுதந்திரத்தை விடாமலும் வெள்ளையர் மதிப்புக்குப் பங்கம் வராமலும் ஆளுக்குப் பாதியான உரிமையோடு தாய் மொழியில் 'திருவிதாங்கூர்' என்று பெயர்த்தெழுதத் தொடங்கினர்கள். இதுதான் இன்றைய **திருவிதாங்கூர்.**

திருவிதாங்கோடு என்ற பெயரும் எப்படி வந்தது என்பது ஆராயத் தகுந்தது. பழைய கல்வெட்டுக்களில் 'முதாங்கோடு' என்ற பெயர் காணப்படுகிறது. வேள்விக்குடிச் செப்பேட்டில்:-

**'செங்கொடியும் புதான்கோட்டும் செருவென்றவர் சினந்தவிர்த்து'** என வந்துள்ளதாக முன்னே காட்டினேம். இதில் குறுப்பிடப்பட்டுள்ள செங்கோடி என்பதற்குப் பலவிதமாகப் பொருள் கொள்வர். செங்கோடி என்னும் பெயரே செப்பேட்டில் செங்கொடி என்று வந்ததாகக்

---

1. **மைல்கற்களில் இவ்வாறு எழுதப்பட்டிருந்தது.**

கருதவேண்டும். ‘[1]செங்கோடி மன்றம்’ எனக் கல்வெட்டுகளிலும் வந்ததுண்டு. இப்பெயருள்ள ஊரொன்று திருவாட்டாற்றின் பக்கத்தில் இன்றும் இருக்கக் காணலாம். வேள்விக்குடிச் செப்பேடு போன்றவற்றில் ‘புதாங்கோடு’ என்று காணப்படுகின்ற பெயர், கல்வெட்டுகளில் ‘முதாங்கோடு, எனவந்துள்ளது. புதாங்கோடு, முதாங்கோடு என்ற இரு பெயர்களும் ஒன்றையே குறிப்பிடுவனவாக இருக்க வேண்டும். ஏனென்றால் வட்டெழுத்தில் ‘பு’வுக்கும், ‘மு’வுக்கும் வரிவடிவில் அதிக வேறுபாடு இல்லை.

(பு) (மு)

இவற்றுள் ஒன்றை இன்னொன்றாக வாசிக்கும் தவறு உண்டாவது இயற்கை. ஆகவே, **திருமுதாங்கோடு** என்பது தான் உண்மைப் பெயர் வடிவமாயிருக்கும். அது நாளடைவில் திருவிதாங்கோடு எனத் திரிந்திருக்கலாம்.

திருவிதாங்கோட்டுக் கோவிலில் ஸம்ஸ்கிருத சுலோகமொன்று காணப்படுகிறது. அதில் அங்குள்ள கடவுளை **‘വട ക്രോഡ ദേവ’** (வடக்ரோடதேவ) எனக் கூறியிருக்கிறது. இத்தொடருக்கு ‘ஆலமரத்தின் போந்திலிருக்கிற கடவுள்’ **(The god who is in the hollow of a banyan tree)** என்பது பொருள் என்று இக்கல்வெட்டைப் பதிப்பித்த ஆசிரியர் கொள்கின்றார்.[2] அப்படியானால் **முதாலங்கோடு** என்னும் பெயர் நாளடைவில் திரிந்து **முதாங்கோடு** ஆயிற்றோ என ஊகிக்க இடமிருக்கிறது. அஃது அடைமொழி யேற்றுத் **திருமுதாங்கோடு** என

1. T. A. S. Vol; VII; PP; 118, 130.
2. T. A. S. Vol; VI; PP; 79, 80.

வழங்கிப் பின் **திருவிதாங்கோடு** எனத் திரிந்திருத்தலும் கூடியதே.

சிலர், ஸ்ரீவாழுங்கோடு என்னும் பெயர் திருவிதாங் கோடு ஆயிற்று என்பர். ஸ்ரீவாழுங்கோடு என்றோ, திரு வாழுங்கோடு என்றோ உள்ள பெயர்கள் பண்டை நாளி லுள்ள கல்வெட்டுக்களிலோ ஓலைப் பிரமாணங்களிலோ காணக்கிடையா. ஆகவே அவை சிந்தனைக்கு உரியவை யல்ல என்று விடுக்க.

## ஊர்களால் அறியப்படுபவை

இனி, திருவிதாங்கூரிலுள்ள சில ஊர்களின் தொடர் பால் அறியக் கிடப்பவைகொண்டு இந்நாடு ஓர் தமிழ்நாடு என்பதை விளக்கப் புகுவோம். இங்கே காட்டப்படுகின்ற ஆதாரங்கள்—கல்வேட்டுக்கள், செப்பேடுகள், ஓலைச்சுவ டிகள் என்பவையாகும். இவற்றைப்பற்றி நாம் ஒரு காரி யம் தெரிந்துகொள்ள வேண்டும். அஃதாவது, ஒருவர் தாம் கொடுக்கும் மானியம் அல்லது நித்திய நிதானம் என் பவற்றைக் கல், செம்பு என்பவற்றில் பொறித்து வைக் கின்றாரென்றால் அது பொது மக்கள் அறிவதற்கன்றி வேறெதற்குமல்ல. ஆதலால் பொதுவாக அது அந் நாட் டில் வழங்கும் மொழியிலேதான் எழுதப்படும். இதுதான் மரபு. ஆகவே ஒரு நாட்டில் காணப்படும் சாசனங்கள் கொண்டு அந்நாட்டு மொழியைத் துணிந்து கொள்ளலா மென்பது பெறப்படுகிறதல்லவா?

இம்முறைப்படிப் பார்த்தால் இந்நாடு ஓர் இன்றமிழ் நாடு என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை. இந்நாட்டிலுள்ள சாசனங்களேல்லாம் தமிழில் அமைந்தவையாகவே இருக்

கின்றன. எழுத்துக்க ளெல்லாம் அக்கால வரிவடிவமான வட்டெழுத்து. மலையாண்மை, கோலெழுத்து என்பவற்றில் பொறிக்கப்பட்ட சில சாசனங்களும் உண்டு. அவ்விரண்டும் வட்டெழுத்தின் வகைகளே யன்றி வேறல்ல. மொழி நடை தூய தமிழ். பலப்பல இடங்களினின்றும் நூற்றுக் கணக்காக இவை வெளியாக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் சில இடங்களை மட்டும் இங்கே குறிப்பிடுகின்றோம்.

க. **விழிஞம்**- இது திருவனந்தபுரத்துக்குத் தெற்கே பத்துக்கல் தொலைவில் இருக்கிறது. இது ஆதி நாளில் மரக்கலங்கள் வந்து தங்கும் துறைமுகமாயிருந்தது. இங்கே சோழ பாண்டிய வேந்தர்கள் பலமுறை படையெடுத்து வந்து இதனைக் கைப்பற்றியிருக்கிறார்கள். கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் ஆண்ட பாண்டியன் நெடுமாறன் போர் செய்து இதனைக் கைக்கொண்ட செய்தி அவன் மீது பாடப்பட்ட கோவையினால் அறியக் கிடக்கின்றது,

**'வேறும் எனநின் றிகல்மலைந்தார் விழிஞத்து விண்போய்**
**ஏறும் திறங்கொண்ட கோன்'[1]**

**'விண்டே யெதிர்ந்ததெவ் வேந்தர்பட விழிஞத்து வென்ற**
**ஒண்டேர் உசிதனெங் கோன்'[2]**

**'விண்டார் படவிழி ஞக்கடற் கோடியுள் வேல்வலங்கைக்**
**கொண்டான் குடைமன்னன்'[3]**

கி. பி. பதினோராம் நூற்றாண்டின் பிற்பாதியில் ஆண்ட இராஜேந்திர சோழதேவன் II என்னும் இயற்

---

**1, 2, 3. இறையனார் அகப்பொருளுரை மேற்கோள் 4, 7, 30.**

பெயரையுடைய முதற்குலோத்துங்கன் விழிஞத்தைக் கைப்பற்றின செய்தி அவன் வரலாற்றால் அறியப்படும்.

"வடநாடுகள் தன்வசப்பட்டதும் தென்னாடுகளை வெல்ல முயன்றான். பாண்டியர்கள் முதலில் தாக்கப்பட்டார்கள். அப்பொழுது ஒரு பாண்டியன் சண்டையில் இறந்தான். இச்சண்டையில் மன்னார்குடாக் கடலைச் சார்ந்த நாடும், பொதிய மலையைச்சார்ந்த கூற்றமும், **கன்னியாகுமரியும், கோட்டாறும்** இவனதாயின........இதன் பின் இப்பொழுது மலையாளமென்று பெயர்பெறும் குட மலைநாட்டைக் கைக்கொண்டான். இந்நாட்டைத் தாக்கிய காலத்து, எதிர்த்து நின்ற மலையாளிகள் வெகு தைரியத்துடன் போர் பொருது எல்லோரும் மாண்டார்கள். குலோத்துங்கன் **விழிஞத்திலும், சாலையிலும்** தன் சைந்நியங்களை நிறுத்தி, காந்தளூர்ச் சாலையில் சேரர் கலங்களை இரண்டு தடவை அறுத்துத் திரும்பினான்.[1]

இது நடந்தது கி. பி. 1084 ஐ ஒட்டியாகும். இவனால் கைப்பற்றபட்ட காரணத்தால் இவ்வூருக்கு '**விழிஞமான ராஜேந்திர சோழபட்டணம்**' என்ற பெயர் ஏற்பட்டது. இது சோழர்களால் வெல்லப்பட்ட செய்தியை,

**'வேலை கொண்டு விழிஞ மழித்ததும்**
**சாலை கொண்டதும் தண்டுகொண் டல்லவோ?'**

என்னும் கலிங்கத்துப் பரணித் தாழிசையாலும் அதன் உரையினாலும் இன்னும் நன்கு அறியலாம். இது, பெரிப்

---

1. சோழவம்ச சரித்திரம்: பக்கம் 31; (by) கோபிநாத்ராயர். இதில் மலையாளிகள் என வருவது கோபிநாதராயர் தம் கூற்றாகக் சொன்னது என அறியவேண்டும்.

ளஸ் என்ற நூலில் 'பேலிதா' எனக் கூறப்படுகிறது. இது பற்றி அறிஞர் **K. N.** சிவராஜ பிள்ளை யவர்கள் கூறி யிருப்பது வருமாறு:-

**"Balita is Veliyam" the older and non-nasalized form of Vilinnam with the locative suffix attu** (அத்து) **added to it. 'Veliyattu' occurring in the early Tamil poems has been changed into 'Balita'. Compare the line.**

'வானவரம்பன் வேளியத் தன்ன நம்' -(**Agam S.** 359)[1] தற்போது இஃதோர் சிற்றூராக இருக்கிறது.

உ. **முன்சிறை:-** கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் நடுப்பகுதியில் ஆண்ட கோக்கருநந் தடக்கன் என்ற ஆய் அரசன் காலத்துச் செப்பேடு[2] ஒன்று வெளியாயிருக் கிறது. அது தூய தமிழில் அமைந்தது. இவ்வரசன் முன் சிறையின் பக்கத்தில் கோயில் ஒன்று கட்டினுன். அதற் குப் பார்த்திபசேகரபுரம் என்று பெயரிட்டான். பார்த்திப சேகரன் என்பது இவன் பெயர்களுள் ஒன்று. அக்கோயி லில் வேத அத்யயனம் செய்வதற்காக ஒரு உயர்தரக் கல்லூரியும் ஏற்படுத்தினுன்.

'காந்தளூர் மரியாதியால் தொண்ணூற்றைவர்
சட்டர்க்குச் சாலையும் செய்தான் ஸ்ரீகோக்கருநந்
தடக்கன்' -என்பது அக்கல்வெட்டில்வரும் தொடர்.

இவனுக்குப் பின் அரசேறியவன் விக்கிரமாதித்திய வரகுணன். இவன் கொடுத்த செப்பேடும் தமிழ்தான்.

---

1. **The Chronology of the early Tamils; P. 177.**
2. **T. A. S. Vol: I PP. II. 14.**

இவையன்றி இராஜ ராஜ சோழன் முதலான சோழ அரசர்களுடைய கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. அவற்றின் காலம் பத்தாம் நூற்றாண்டாகும். இவ்வூர் விளவங்கோட்டுத் தாலுகாவில் தென்பால் உள்ளது.

**௩. திருவாட்டாறு:-** இது கல்குளம் தாலுகாவில் வடபால் உள்ளதோரூர். மூன்று புறமும் ஆறு சூழ்ந்த ஓர் அழகிய இடம். வளைந்து வட்டமாக வருவதினால் அவ்விடத்து ஆற்றினை வாட்டாறு என்றனர். பின் அப்பெயரே அவ்வளைவினுள் இருக்கும் வளவிய ஊருக்கும் பெயராயிற்று. கோட்டாறு, வெள்ளாறு என்பன ஆற்றினால் பெயர் பெற்றதுபோல என்னலாம். இவ்விடம் ஆதிகேசவப்பெருமாள் என்ற திருமால் கோவிலையுடையது. மலைநாட்டுத் திருப்பதிகள் பதின் மூன்றனுள் ஒன்று.

எழினியாதன் என்னும் மன்னனொருவனை மாங்குடிகிழார் பாடிய பாடலொன்று புறநானூற்றில் காணப்படுகிறது. இம்மன்னன் அதில் வாட்டாற் றெழினியாதன் என்று அழைக்கப்படுகின்றான்.

**உள்ளிலோர்க்கு வலியாகுவன்**
**கேளிலோர்க்குக் கேளாகுவன்**
**கழுமிய வென்வேல் வேளே**
**வளநீர் வாட்டாற் றெழினி யாதன்**[1]

எழினி என்பது கடையெழு வள்ளல்களில் ஒருவனான அதிகமான் நெடுமான் அஞ்சியின் பெயர். புறநானூறு 158 ஆம் பாடலில் வள்ளல்கள் எழுவரையும் வரிசைப்படுத்துமிடத்து,

---

1. புறம்: 396

**'கொல்லி யாண்ட வல்வில் ஓரியும்**
**காரி யூர்ந்து பேரமர்க் கடந்த**
**மாரி யீகை மறப்போர் மலையனும்**
**ஊரா தேந்திய குதிரைக் கூர்வேல்**
**கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்'** -என

அதிகன், எழினி என்ற பெயரால் அழைக்கப்படுகின்றான். இதனால் எழினியாதன் என்பவன் அதிகனுடைய மரபில் வந்தவனாயிருக்கவேண்டும் என்று அறியலாம். 'ஆதன் என்பது சேரர் தரித்து வந்து பெயராதலால் இவன் சேரர் கிளையினனுமாவன்' என்று ராவ்சாகிப் மு. இராகவையங்கார் அவர்கள் சேர வேந்தர் செய்யுட் கோவையின் முகவுரையில் குறிப்பிடுகின்றார்கள். ஆகவே எழினியாதன், சேரர் மரபையும் அதிகன் மரபையும் இணைப்பவனாகின்றான்.

நாஞ்சில் நாட்டிலுள்ள சிறந்த நகரமான அழகிய பாண்டியபுரத்துக்கு 'அதிகன் ஊரான அழகியபாண்டிபுரம்' என்ற பெயர் ஓலைச் சுவடிகளில் காணப்படுவதும், அவ்வூரினின்று சுமார் ஐந்துகல் தொலைவிலுள்ள தாழைக்குடியின் அண்மையில் ஔவையாருக்குக் கோவில் எழுப்பப் பட்டிருப்பதும் அதிகனுக்கு மலை நாட்டோடுள்ள தொடர்பை இன்னும் அதிகப்படுத்திக் காட்டுகின்றன. ஆகவே, வாட்டாறு சங்க காலப் பெருமையுடையதென்று இதனால் அறிகிறோம்.

௪. **திருநந்திக்கரை-** இது திருவாட்டாற்றுக்கு வடபாலுள்ள ஓரிடம். சிவலிங்கம் போல உருண்டு திரண்டு உயர்ந்துள்ள ஒரு பாறையைக் குடைந்து இங்கே கோவில் அமைக்கப்பட்டிருக்கிறது. அக்கோவில்

இரண்டு அறைகளைக் கொண்டது. முதலிலுள்ளது சம சதுரமுடைய பெரிய அறை. உள் அறை சிறியது. விக்கிரகமொன்று இதன்கண் இருக்கின்றது. கோவிலினுள்ளே புகுவதற்கு வாயிலும், மேலிருந்து மழைநீர் வாயிலுக்கு நேரே பாயாமல் மேலே ஓடையும் அழகுபட அமைக்கப் பட்டிருக்கின்றன. பாறையின் வெளிப்புறத்தில் கல்வெட்டுக் காணப்படுகின்றது. மலையின் அடிவாரத்தில் சிவன் கோவில் ஒன்று உளது. அதன் அமைப்புக் கொண்டே அது புராதனமானது எனத் தெரிந்துகொள்ளலாம். இப் பகுதிகளெல்லாம்-ஏன்? இக்கீழ் மலைத்தொடர் முதல் மேல்கடல் வரையுள்ள இடமனைத்தும் தமிழ் நாடாகவே இருந்தது என்பதை ஆங்காங்குள்ள கோவில்களின் அமைப்புகளினால் தெளிவாக அறிந்து கொள்ளமுடியும். அறிய முடியாதவர்க்குத் திருநந்திக்கரைக் கோவில் சாசனம் வாய்விட்டுச் சொல்லித் தெரிவிக்கும். அது என்ன சொல்கிறது கேளுங்கள்:-

"......வள்ளுவநாட்டு முட்டம் என்னும் பேர் தவிர்த்து மும்முடி சோழநல்லூர் என்று பேராக்கி, இந்நாட்டுத் திருநந்திக்கரை மாதேவர்க்குப்பெருமாள் ஐப்பிகைச் சதயத்தின் நாள் ............திருவிழா எடுத்து"[1]

இதில் பெருமாள் என்றது கி. பி. 985-1012 வரை ஆண்ட முதல் ராஜராஜசோழனை. அம்மன்னன், மேல் கடற்கரையிலுள்ள முட்டத்தைக் கைப்பற்றி அதற்குத் தன் பெயரைச் சூட்டினதுமன்றி, திருநந்திக்கரையில் கோவில் கொண்டுள்ள தேவர்க்குத் தன் பிறந்த நாளான

1. T. A. S Vol; I; Page 292

ஐப்பசிமாதச் சதய நாளில் விழாக் கொண்டாடவும் ஏற்பாடு செய்தான். விழாவெடுத்த செய்தி,

**'சதய நாள்விழா உதியர் மண்டலம்**
**தன்னில் வைத்தவன் தனியொர் மாவின்மேல்**
**உதய பானுவொத் [1]துதகை வென்றகோன்**
**ஒருகை வாரணம் பலக வர்ந்ததும்'[2]** எனக்

கலிங்கத்துப் பரணியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

ரு. **தலைக்குளம்–** இது நாஞ்சில் நாட்டை யடுத்த கல்குளம் தாலுகாவிலுள்ள ஒரு சிற்றூர். இங்குக் காணப்படும் கல்வெட்டுக்களினுல் இவ்வூர் தொன்மையும் பெருமையும் வாய்ததென்று துணியலாம். இவ்வூரிலுள்ள அழகம் பெருமாள் நயினர் கோவிலானது கொல்லம் 660-ம் ஆண்டு புதுப்பிக்கப்பட்டதாக அக்கோவிலில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்லெழுத்துக் கொண்டு அறிகின்ருேம். அது வருமாறு.

1. "ஹரி: நன்ருக **शुभमस्तु स्वस्ति श्री** கொல்லம் 660 ளு தை மீ உ௰௬ ட அச்சுவதி........
அழகப் பெருமாள் நயினர் திருவுள்ளத்தின்படியே பிறத்து எழுந்தருளிவிப்பித்துக் கோயிலும் உவாஞதிபரியந்த முதலாகப் **பிறித்து திருப்பணி செய்து** மூலவெரம புழுகும் சாத்துவித்து
2. ௬௱௬௨ ஷூ வைகாசி மீ எ ட வெள்ளிக் கிழமையும்...........................................
நயினரையும் அகத்து எழுந்தருளுவிப்பித்துக் கலசமும் ஆட்டுவித்து

---

1. **கல்குளம் தாலுகாவிலுள்ள உதயகிரியைச் சூழ்ந்த இடம். 'Udagai or Udayagiri' (T. A. S. Vol; II; P. 5.)**
2. **கலிங்: தாழிசை 201.**

3. இரணி சிங்கப்பாடி வீட்டில் கண்டன் பெரு மாள் ஆன வீரகேரளப்பல்லவ தரையர் குறிப்பு நன்ருக **शुभमस्तु**[1]

கற்கோவில் ஒன்று பழுதுபட வேண்டுமென்ருல் சுமார் 500 ஆண்டுகளாவது சென்றிருக்க வேண்டும். ஆகவே கொல்லம் 660 ல் பழுது பார்க்கப்பட்ட இக் கோவில் கொல்லம் இரண்டாம் நூற்ருண்டில் அஃதாவது கி. பி. பத்தாம் நூற்ருண்டிலேயே தோன்றியிருக்க வேண்டுமென்று ஏற்படுகிறதல்லவா?

தலைக்குளம் ஊரின் அண்மையில் கறைக் கண்டே சுவரம் என்ருேர் கோவில் இருக்கிறது. கொல்லம் 395 ஆ மாண்டு வலங்கை மாணிக்கம் செட்டியார் என்பார் அக் கோவிலுக்கு நிபந்தம் விட்ட செய்தியை அங்குப் பொறிக் கப்பட்டிருக்கும் கல்வெட்டுச் சொல்கின்றது.

"1, ஸ்வஸ்தி ஸ்ரீ கொல்லம் **௩௱௯௰௫** மாண்டு கும்ப ஞாயிறு தென்ஞட்டு குறுநாட்டு கடிகை பட்டினத்து உடையார் **கறைக்கண்டீசுவரமுடைய மஹாதேவற்கு** அகநாழிகை சே

2. லவு கற்பிச்ச அரிசி இருநாழி உரியும் திரு வட்டமிக்கு கற்பிச்ச அரிசி பதிஞழியுந் திரு நந்தாவிளக்கொன்றுஞ் செல்லுமாறும் கற்பிச்சு கொடுத்தன் அயிரபுரை

3. ழ ஆதிச்சன் கோதை இதின்னு கொடுத்த முதல் மூன்று சலாகையும் அச்சு முப்பத்தஞ்சும்

1. T. A. S. Vol; VII; P. 35.

இதில் **வலங்கை மாணிக்க செட்டியார்** சே........
குழிப்புரை யிடத்தில் மேலே
4. முறியில் மேற்கூற்றில் கோடுத்த அச்சு
பதின் ஏழும்................[1]''

எனக் கூறிச் செல்கின்றது அச்சாசனம்.

இவ்வூரை யடுத்த கடிகை பட்டினம் பெரிய குளம் பாறையில் ஒரு கல்வெட்டு உளது. அது வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டது. முதல் ராஜராஜன் காலத்தது. சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. ஆதலால் மழை வெயில் காற்று என்பவற்றின் தாக்குதலால் எழுத்துக்கள் நன்கு அறிந்துகோள்ள முடியாதவாறு பொடிந்து காணப்படுகின்றன.

இவை தவிர, முதற் பராந்தக சோழன் காலமான கி.பி.பத்தாம் நூற்ருண்டில் சுசீந்திரம் கோவிலில் எழுந்த ஒரு சாசனத்திலும் இவ்வூர் குறிப்பிடப்படுகின்றது. இவ்வூரைச் சேர்ந்த அரையன் அரவிந்தன் என்பான் சுசீந்திரம் மகாதேவர்க்குத் திருநந்தா விளக்குக்கு நிபந்தம் விட்ட செய்தி அது. சுசீந்திரம் என்னும் தலைப்பின் கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் அதனைப் பார்க்க. இவ்வூரிலுள்ளவையும் இவ்வூர்ச் சம்பந்தப்பட்டவையும் ஆன கல்வெட்டுகள் யாவும் தமிழ் மொழியில் எழுதப்பட்டவையே. சுமார் 1100 ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழைமையை அவை காட்டுகின்றன. சரித்திரத்தாலறியப் படுகின்ற காலந்தோட்டே இதுவோர் செந்தமிழ் நாடாகத்தான் இருந்ததென்பதற்கு இவற்றினும் தகுதியுடைய சான்று வேறென்ன வேண்டும்?

---

1. T. A. S. Vol. IV. PP. 82, 83.

இதுகாறும் திருவனந்தபுரத்துக்குத் தென்பாலுள்ள சில இடங்களைப் பற்றி மட்டுமே சொல்லப்பட்டன. இதனால் வடபகுதிகளில் தமிழ்க் கல்வெட்டுக்கள் இல்லையோ என்று ஐயுற வேண்டாம். மலபாரைச் சேர்ந்த கள்ளிக் கோட்டையிலுங்கூட வட்டெழுத்தில் பொறிக்கப்பட்ட பழைமையான கல் வெட்டுக்கள் இருக்கின்றன. 'தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்' தொகுதி ஐந்தில் 367 ஆம் பக்கம் பார்க்க.

வடதிருவிதாங்கூரில் சடைய மங்கலம் (கொட்டாரக் கரைத் தாலுகா), ஏற்றுமானூர் (கோட்டயம் தாலுகா), கடமற்றம் (மூவாற்றுபுழைத் தாலுகா), பெருமயில் (சங்கனசேரி தாலுகா), செங்கந்நூர் முதலான பல இடங்களிலும் தமிழ்க் கல்வெட்டுக்கள் ஏராளமாக உள்ளன. திருவல்லாத் தாலுகாவைச் சார்ந்த மாந்நார் என்னுமிடத்திலுள்ள 17 கல்வெட்டுக்களில் 16-ம் தமிழாகும். ஒன்று மட்டும் மலையாளம். அதுவும் மிகப் பிற்காலத்தது. வேண்டுமானால் மாதிரிக்காக வடதிருவிதாங்கூரிலுள்ள கல் வெட்டுக்களில் ஒன்று தருகின்றோம். அதனை வாசித்துப் பார்த்து அது தமிழா பிறமொழியா என்பதைத் தீர்மானித்துக் கொள்ளுங்கள்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ போபாற்கர னிரவிவர்ம்மர் திருவடிக்குச் **செல்லாநின்ற** யாண்டி ரண்டி னெதிர் இருபத்து நாலமாண்டு வேணுடைய கோவர்த்தன மார்த்தாண்டன்......................நன்றுழநாடு வாழ்...............திருக்கடித்தானத்து

2. பரிடையுங் கணத்தாரும் பொதுவாள்மாரு நன்றுழ நாட்டு **முந்நூற்றுவரும் பணிசெய்கின்ற** நெடும்புறத்து குன்றன் கோவிந்தனும்........இர

3. திருக்கைய் உடையாருங் காட்டி........[1]

இது மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றனுள் ஒன்றுன திருக்கடித்தானம் என்னும் இடத்திலுள்ளது. இவ்வூர் ஆலப்புழைக்குச் சமீபமிருக்கிறது. சாசன மெழுந்தது பாஸ்கர ரவிவர்மன் காலத்தில் கி. பி. 1010-ல் ஆகும். இதுபோல எத்தனையோ சாசனங்கள் காட்ட முடியும்.

திருவிதாங்கூர் அரசாங்கத்தார் 1941-ல் வெளி யிட்டிருக்கும் இடவாரியான கல்வெட்டு வரிசைப் (**Topographical list of Inscriptions**) படி மொத்த முள்ள 1100 கல்வெட்டுக்களில் தமிழ்க் கல்வெட்டுக்கள் மட்டிலும் 838 உள்ளன. மலையாளம் 217. ஆங்கிலம், லத்தீன், டச்சு முதலான பிறமொழிக்கல்வெட்டுக்க ளெல்லாம் சேர்ந்து 45. இவற்றில் தமிழொழிந்த பிற வெல்லாம் மிகப் பிற்காலத்திலுள்ளவை :என்பதை வரிசையைப் புரட்டிப் பார்த்தாலே உணரமுடியும்.

இஃது இங்ஙனமிருக்க, சிலர் செப்பேடுகளை ஆதார மாகக் காட்டி மலையாள மொழி இன்றிருப்பது போன்ற லிபியில் கொல்லம் முதல் நூற்றுண்டிலேயே இருந்திருக் கிறது எனக் கூறுகின்றனர். கால நிர்ணயத்துக்குக் கல் வெட்டுக்களைப் போல செப்பேடு, ஓலைப் பிரமாணம் என்பவற்றை ஆதாரமாகக் கொள்ளலாகாது என்பதை நாம் இங்கு அறிய வேண்டும். கல்வெட்டுக்கள் எளிதில் மாய்க்கவோ திருத்தவோ கூடியவை யல்ல. அது பொது விடங்களில் யாவர் பார்வையிலும் படுமாறு அமைந்தி

---

1. T. A. S. Vol; II; Page 40

ருக்கும். அதனுல் பொய்யான ஒன்றைப் புதிதாக ஒருவர் தோற்றுவித்து விடவும் முடியாது.

செப்பேடுகளோ அப்படிப்பட்டவையல்ல. தனி மனிதனிடம் உரிமைப்பட்டிருப்பவை அவை. ஒருவருக்கும் தெரியாமல் புதிதாகச் சமைத்து அவற்றின் மேல் பழைமையை ஏற்றிப் பிறரை ஏமாற்றுவதற்குள்ள வசதி அவற்றில் உண்டு. ஆதலால் செப்பேடு என்ற அளவில் தானே தாவிப்பிடித்து அதனை அணைத்துக்கொள்ள லாகாது. பொய்ம்மையின்மையைத்தீர ஆய்ந்தறிந்துதான் அதனை ஆதாரமாகக்கொள்ள வேண்டும். பொய்யான ஏடுகளும் ஐயுறத்தக்க ஏடுகளும் பல இருக்கின்றன என் பதை இங்கே சொல்லாமலிருப்பதற்கில்லை. மேலே சொன்னவாறு சில அன்பர்கள் ஆதாரமாகக் காட்டும் செப்பேடுகளிலும் ஐயுறத்தக்க பகுதிகள் இருக்கின்றன. அவை பற்றி விரிப்பதற்கு இது இடமல்லவாதலால் இவ்வளவில் விடுகின்ருேம்.

## பழைய சுவடிகள்

ஒரு நாட்டில் வழங்கிவந்த பழைமையான ஏட்டுச் சுவடிகளின் இயல்பு கொண்டும் அந்நாட்டு மொழி வழக்கினை உணரலாமல்லவா? தென்றமிழ்ச் சேரநாடாக இருந்த இதில் ஆதிநாளில் தமிழ்ச் சுவடிகளன்றி வேறெம்மொழிச் சுவடிகள் வழங்கியிருக்க முடியும்? ஆம்; நாடெங்கணும் அவையே பரவிக்கிடந்தன. மிகப்பிற்பட்டு மலையாளம் தனி வடிவம் பெற்றுத் தலையெடுத்த காலத்தி லுங்கூட பண்டைய தமிழ்த் தொடர்பு ஒரேயடியாக அற்றுப் போகவில்லை. மொழி ஒன்று தோன்றிய காலத்தி லேயே எல்லாவித நூல்களும் ஒருங்கே அதில் தோன்றி

விடுமா? பக்திப் பாடல்களோ, காவியங்களோ, புராணங் களோ, கதைகளோ, வைத்தியம், மந்திரம் முதலானவை களோ தமிழிலிருந்தன்றி வடமொழிப் பயிற்சியற்றவர் களுக்கு எவ்வாறு கிடைக்க முடியும்? அவர் முன்னோர் சேர்த்து வைத்திருந்த பழந்தமிழ்ச் சுவடிகளோ அவர் வீடு களில் இடம்பெற்றிருந்தன. அவைகளே அவர்களுக்குப் பயன்பட்டிருக்கவேண்டும். மிகச் சமீபத்தில் கூட மலை யாளிகள் எனப்படுவோரில் பலரும் தேவாரம்,திருவாசகம், தாயுமானவர் பாடல் முதலிய பக்திச்சுவை ததும்பும் பாடல்களில் நல்ல பயிற்சி யுடையவர்களாயிருந்தார்க ளெனப் பலரும் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

ஒரு காலத்தில் திருவிதாங்கூரிலுள்ள அம்பலப்புழை யிலும் அரச குலமொன்று இருந்தது. அங்கும் ஏட்டுப் பிரதிகள் பல சேமித்து வைக்கப்பட்டிருந்தன. அம்பலப் புழை திருவிதாங்கூருக்குச் சொந்தமான காலத்தில் அங்கிருந்த ஏட்டுப் பிரதிகளுக்கும் ஏனைய பொருள்களுக் கும் உரியஇடம் திருவனந்தபுரமாயிற்று.இங்கே கொண்டு வரப்பட்ட ஏடுகளுள் கம்பராமாயண ஏடும் ஒன்று. இது மிகப் பழைமையானதும் சுத்தமானது மாகுமென்றும், இதனைத் தாம் சோதித்து ஒப்பிட்டுப் பார்த்ததுண்டென் றும் ராவ்சாகிப்S.வையாபுரிப்பிள்ளையவர்கள் கூறினர்கள்.

இம் மலை மாடெங்கணும் பழந் தமிழ்ச் சுவடிகள் பரவிக் கிடந்தன என்பதற்குப் பலப்பல ஆதாரங்கள் இருக்கின்றன,

க. திருவாய்மொழிப் பாசுரங்கள் வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டிருந்த ஏட்டுப் பிரதி ஒன்று கொஞ்சக் காலத்துக்கு முன் மலபாரிலிருந்து கிடைத்ததாகத் தெரி

கிறது. இதைத் தாம் நேரில் பார்த்ததாகத் திருவனந்த புரம் உயர்தர நீதிமன்றத் தலைவராயிருந்து காலஞ்சென்ற **K. G.** சேஷையரவர்கள் கவிமணியவர்களிடம் கூறியுள் ளார்கள்.

உ. மலை நாட்டில் 'பாடகம் சொல்வது' என்னும் ஓர் வழக்கம் உண்டு. அஃதாவது, காவியம், இதிகாசம், புராணம் என்பவற்றில் யாதேனும் ஒன்றன் பகுதியை எடுத்துக்கொண்டு ஆடிப்பாடி அபிநயித்துக் காட்டுவ தாகும். இங்ஙனம் பாடகம் சொல்வதற்குக் கம்பராமா யணப் பாடல்களைப் பயன்படுத்தி வந்ததாகப் பழங்கால ஏடுகள் கொண்டு அறிகிறோம்.

ங. திருவிதாங்கூர் அரசாங்கம் 'வலைவீசு புராணம்' என்றோர் ஏட்டுச் சுவடியை அண்மையில் பதிப்பித்தது. இதனை மலையாளிகள் எவரும் வாங்குவதில்லை. ஏன்? படித்தால் அவர்களுக்கு எதுவும் புரியாது. தமிழர்களும் வாங்குவதில்லை; மலையாள புத்தகம் என்ற எண்ணத்தால், உண்மையென்ன? பாடல்களெல்லாம் தூயதமிழ்; எழுத்து மட்டும் மலையாளம். மலையாள எழுத்தில் எழுதப்பட் டிருப்பதைப் பார்த்துவிட்டு மலையாளம்தான் என்றெண் ணிப் பதிப்பித்து விட்டார்கள். கதையோ என்றால் திரு விளையாடற் புராணத்திலுள்ள வலைவீசு படலத்தைப் பெரும்பாலும் தழுவியது.

இவ்வேடும் இம்மலைநாட்டிலிருந்து கிடைக்கப்பெற் றதேயாகும். இன்னும் தேடிப்பார்த்தால் திருவிதாங்கூர், கொச்சி, மலபார் என்னும் மேலைக் கடற்கரை நாடுகளி லிருந்து பழந்தமிழ் ஏடுகள் பல கிடைக்கப்பெறலாம். அங் ஙனம் தேடிக்காண்டல் பயன்தரு செயலாகவும் இருக்கும்.

மலேயாளம் ஒரு தனி மொழியின் தன்மையைப் பெற்றது கி. பி. 13-ஆம் நூற்ருண்டுக்கு மேலேதான். அம்மொழியில் எழுந்த முதல் நூல் "உண்ணி நீல சந்தேசம்" என்றும், அதன் காலம் கி. பி. 14 ஆம் நூற்ருண்டு என்றும் கூறுவர். ஆனல் பதின்மூன்ரும் நூற்ருண்டிலேயே 'இராம சரிதம்' என்னும் கிரந்தம் தோன்றியுள்ளதாகத் தெரிகிறது. அதுபற்றிப் பின்னர்க் கூறுவோம். பதினன்காம் நூற்ருண்டில் அதாவது கி. பி. 1350 ஐ ஒட்டி எழுந்த இன்னெரு மலேயாளக் கிரந்தம் 'கண்ணச்ச ராமாயணம்.' இதன் ஆசிரியர் கண்ணச்சப் பணிக்கர். இவர் ஒருவரல்லர்; மூவராவரென்றும், மூவருமே கண்ணச்சன் மார் என்று அழைக்கப்பட்டனர் என்றும் கூறுவர், இப் புத்தகத்தைப் பதிப்பித்த மலேயாள மகாகவி உள்ளூர் S. பரமேசுவர ஐயர் அவர்கள். அஃது எங்ஙனமாயினுமாக. அவ்வாசிரியர் கருதிய - மொழிந்த - மொழி நடை எவ்வாறிருக்கிறது என்பதைச் சுவைத்துப் பார்ப்பதற்கு அஃதாவது பதினன்காம் நூற்ருண்டு மலேயாளத்தின் அமைப்பு எவ்வாறிருந்ததென்று பார்ப்பதற்கு அதிலிருந்து ஒரு பாட்டுத் தருகின்ருேம்.

**ആർകലിമീതുതാവി മുതിൎന്നലങ്ക പുകുന്തു ചെന്താ**
**രാർമകളെന്നും മെന്നടയാളെ യമ്പൊടുകണ്ടു മീൾവൻ**
**വേകമൊടെന്നുള്ളിൽ നിനന്തു വെന്നികലന്ന് നീടാർ**
**മേനികിളൎന്ന് വാനരവീരൻ മാരുതി തന്നുഴററാൽ**
**ആകുല മിന്നിനിന്ന കുതിച്ചെഴം പൊഴുതിന്മലയ്ക്കു-**
**ണ്ടായ്വതമോ കുലുങ്കവുമെന്ന തൊത്തറിവാനുലച്ചാൻ**
**മേകകുലങ്ങൾ ചെന്നമരും കൊടും ചികരങ്ങളോടും**
**മീതിലകും മഹേന്ദ്രമെന്നും മഹാമലതന്നെമുന്നെ**

இது சுந்தர காண்டத்திலுள்ள முதற்பாட்டு. இதனை அப்படியே தமிழெழுத்தில் எழுதிக் காட்டுகின்ருேம்.

**ஆர்கலிமீதுதாவி முதிர்ந்நுலங்கபுகுந்து செந்தா**
**ரார்மகளெந்நும் மெந்நடயாளெ யம்பொடுகண்டுமீள்வன்**
**வேகமொடெந்நதுள்ளில் நிநந்து வெந்நி கலர்ந்ந நீடார்**
**மேனி கிளிர்ந்நவாநர வீரன் மாருதி தானுழற்றால்**
**ஆகுலமீந்நி நிந்நுகுதிச்செழும் பொழுதின் மலய்க்கு(ண்)**
**டாய்வருமோ குலுக்கவுமெந்ந தோர்த்தறிவானுலச்சான்**
**மேககுலங்ஙள் செந்நமருங்கொடும் சிகரங்ஙளோடும்**
**மீதிலகும் மகேந்த்ர மெந்நும் மகாமலதந்நெமுந்நெ.**

தமிழ்ச் சொற்களாக இருந்தும் மலையாளமாக்கத் துணிந்த காரணத்தால் அன்பு, வென்றி முதலான பல சொற்களும் பொருளிழந்தவையாய்ச் சிதைக்கப்பட்டிருக்கின்றன. எதுகையாக அமைந்து நிற்கும் 'வேகம்', 'மேகம்' என்னும் சொற்களை வடமொழியாகவே **'വേഗം'** **'മേഘം'** என எழுதிக் காட்டுகின்றார் பதிப்பாசிரியர். அக்காலத்தில் அதிகரம், மிருது, கோஷம் முதலான உச்சரிப்பு வேறுபாடுகளைத் தரும் வருக்க எழுத்துக்கள் மலையாளத்தில் தோன்றியிருக்கவே நியாயமில்லை யென்பதை நாம் நன்கு உணரவேண்டும். இவ்விரு சொற்களையும் இவ்வாறு பதிப்பித்த ஐயரவர்கள் 'சிகரம்' என்னும் சொல்லை **'ശിഖരം'** எனப் பதிப்பிக்காததற்குக் காரணம் விளங்கவில்லை. அக்காலத்தில் வடமொழிச் சொற்கள் ஏராளமாக வந்து வழங்கினவேனும் அவை தமிழிற் போலப் பொதுவெழுத்தாலேயே எழுதப்பட்டன. இதனை இன்னோரிடத்தில் வைத்தும் கூறுவோம். இப்போது, மேற்கூறிய பாடலைத் தமிழ் மரபுப்படிச் சீர்பிரித்து எழுதிக் காட்டுகின்றோம்.

**ஆர்கலி மீது தாவிமு திர்ந்து**
**லங்கைபு குந்து செந்தா[1]**
**ராமக ளென்னும் மென்னடை யாளை**
**யன்பொடு கண்டு மீள்வன்**
**வேகமோ டென்ற துன்னில்நி னைந்து**
**வென்றிக லந்த நீடார்**
**மேனிகி ளர்ந்த வானர வீரன்**
**மாருதி தானு ழற்றான்[2]**
**ஆகுல மின்றி நின்றுகு திச்செ**
**ழும்பொழு தின்ம லைக்குண்**
**டாய்வரு மோரு லுக்கமு மென்ற**
**தோர்த்தறி வானு லைத்தான்**
**மேககு லங்கள் சென்றம ருங்கொ**
**டுஞ்சிக ரங்க ளோடும்**
**மீதில கும்ம கேந்திர மென்னும்**
**மாமலை தன்னை முன்னே.**

'கடலின்மீது தாவி விரைந்து சென்று இலங்கையை யடைந்து செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் அவதாரமான மெல்லிய நடையையுடைய சீதையை அன்புடனே கண்டு விரைந்து மீண்டு வருவேன், என் பதைத் தன் மனதில் நினைத்து, வெற்றியோடு கூடிய-நீண்ட மேனிபடைத்த வானர வீரனான அனுமன் சிறிதும் வருந்தாதவனாய் [அநாயாசமாய் என்றபடி. இது உலைத்

1. மாலையை உணர்த்துகின்ற 'தார்' என்னும் சொல், மலைநாட்டில் பூவைக் குறிப்பிடும் சொல்லாகப் பல இடங்களிலும் வந்துள்ளது. இன்றும் இவ்வாட்சி வழக்கத்தில் இருக்கிறது. 2. உழற்றால் எனக்கொண்ட மலையாளப்பாடமும் பொருளும் பொருத்தமல்ல; வருந்தாதவனாய் என்னும் பொருளில் உழற்றான் என் இருக்கவேண்டும.

தான் என்பதனோடு இயையும்.] மனக்கலக்கமின்றி நின்று குதித்துச் சாடும்போது இம்மலைக்கு யாதேனும் அசைவு ஏற்படுமோ என்பதை ஆராய்ந்தறிவதற்காக, மேக கூட்டங்கள் சென்று தங்குகின்ற உயரிய சிகரங்களோடு ஆகாயமளாவ உயர்ந்து விளங்கிக் கொண்டிருக்கிற மகேந்திரம் என்னும் பெயரையுடைய அப்பெரிய மலையை முதலில் அசைத்துப்பார்த்தான்' என்பது இதன் பொருள்.

இது, பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரியச் சந்த விருத்தம். இந்நூற்கண் அமைந்த பாடல்களெல்லாம்அறுசீர் ஆசிரிய விருத்தம், எழுசீர் ஆசிரிய விருத்தம், எண்சீர் ஆசிரிய விருத்தம், பதினான்குசீர் ஆசிரிய விருத்தம், கலி விருத்தம் முதலான சிறந்த யாப்பமைதியுடையவை. எந்த ஒரு பாடலையும் அதன் யாப்பியல்பு உணர்ந்தன்றிப் பிரித்துப் பொருள் காண்டல் அருமை. இப்புத்தகத்தின் யாப்பமைதி மலையாள இலக்கணத்துக்கு முற்றிலும் மாறுபட்டது. ஆகவே, குரு, லகு என்ற எழுத்தெண்ணிக்கைப்படி ஏதோ ஓர் சட்டக்கூட்டுக்குள் அமைக்கப் பார்த்துப் பெரிதும் குழப்பமடைந்திருக்கிறார் பதிப்பாசிரியர். சில இடங்களில் பதங்களைச்சேர்த்தும் சிதைத்தும், விட்டும் விழுங்கியும்,உருத்திரித்தும் பாடல்கள் பதிப்பிக்கப்பட்டிருக்கும் முறையைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கும். பாடல்களின் திருந்திய வடிவத்தை உணரமுடியாமலிருப்பதற்குத் தடையாயிருப்பது தன்னபிமானத்தைத் தவிர வேறு எதுவுமேயல்ல. அதனை நீக்கிவிட்டுத் தமிழறிவு, இலக்கணப் பயிற்சி என்பவற்றின் துணை கொண்டு, உண்மை காணவேண்டும் என்னும் நல்லெண்ணத்தோடு நூலை நெருங்குவதாயிருந்தால் வெள்ளிடை மலை போல அதனைக் காண்பார்கள். அல்லாதவரையில் வெளிச்ச

முள்ள அறையில் கண்ணடைத்துத் தேடும் பிள்ளை விளையாட்டாகத்தான் இருக்கும்.

மேற்கூறிய இராமாயணம் எழுதிய கண்ணச்சப் பணிக்கரே 'பிரம்மாண்ட புராணம்' என்றோர் நூல் எழுதியிருக்கிறார். அதில், '**இதனை நான் தமிழாய்க் கொண்டறிவிக்கின்றேன்**' என்று அவரே கூறியுள்ளார். இப்படி அவர் கூறியும்கூட மலையாள அன்பர்களுக்குக் கண் திறக்கவில்லை. இந்நூல் அன்றைய தமிழில்-மலைநாட்டுத் தமிழில் அமைந்தது என்பதை ஒப்புக்கொள்ள மறுக்கின்றார்கள். மட்டுமல்ல; தமிழ் என்பதற்குப் 'பாஷை' என்றோர் புதுப் பொருளும் கற்பிக்கின்றார்கள். இது 'கண்ணால் கண்டேன், காதால் கேட்டேன்' என்பவற்றைவிடப் பயனற்ற பேச்சல்லவா? அவற்றிலேனும் கண்டது உண்மை, கேட்டது உண்மை என்ற அழுத்தமாவது தோன்றுகிறது. 'பாஷையால் சொல்கின்றேன்' என்பது யாதேனும் ஓர் பயன்தோன்ற நிற்கின்றதா? இப்படிப் பயனற்ற பேச்சை ஓர் ஆசிரியர் பேசுவாரா? பேசுவாராயின் பயனில் சொல் பாராட்டும் பதடி என்ற ஏளனத்துக்கு உள்ளாவரேயன்றி அரும் பொருட்களைச் சிறுசெஞ்சொற்களில் சித்திரித்துப் பொருளாழம் காட்டுகின்ற கவிஞர் வரிசையில் வைத்தெண்ணப்படுபவராவது எங்ஙனம்? ஆசிரியருக்கு வரும் இழிவைக்கூடப் புதுப்பொருள் காணும் அன்பர்கள் கவனிக்கின்றார்களில்லை.

கண்ணச்சப்பணிக்கர் காலத்துக்குச் சற்று முந்தியதென்று கருதப்படுகிற ஒரு கிரந்தம் 'இராம சரிதம்'. இதன் சில பகுதிகளையும், 'இராம கதைப்பாட்டு' என்பதன் சில பகுதிகளையும் சேர்த்து "**പ്രാചീന മലയാള മാതൃക**

കൾ ഭാഗം 1' (பிராசீன மலேயாள மாதிரிகள் பாகம் 1) என்ற பெயரால் மேற்கூறிய கவிஞர் பரமேசுவர ஐயரவர்களே பதிப்பித்திருக்கிறார்கள். ராமசரிதம் ஆசிரியர் சீராமன் எனப்படுபவர். பெயரொப்புமையை வைத்துக் கொண்டு இவர் கொல்லம் 371-ல் வேணாட்டை ஆண்ட ஸ்ரீவீர ராமவர்ம மன்னராயிருக்கலாம் என்று ஊகிக்கின்றார் பதிப்பாசிரியர். அப்படியானால் இந்நூலின் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டு என்றாகிறது. ஆனால் பதிப்பாசிரியரோ நூல் முகவுரையின் பிறிதோரிடத்தில் இதன் காலம் பதின்மூன்றாம் நூற்றாண்டு என்று குறிப்பிடுகின்றார். ஆகவே முற்கூறிய கொள்கைகளுக்கு மாறுபாடில்லாத முறையில் பதின்மூன்றாம் நூற்றாண்டே இதன் காலம் என நாமும் கொள்வோம்.

இந்நூலின் தொடக்கத்தே நூலாசிரியர் நூற்பயன் கூறும் சில அடிகளைத் தருகின்றோம்.

.... .... .... .... **മികവൊൻറു നിനവാൻ**
**ആതി തേവനി ലമിഴ്ന്ത മനകാമ്പുടയ ചീ**
**രാമനൻപിനൊടിയമ്പിന തമിഴ്കവി വല്ലോർ**
**പോതിൽ മാതിനിട മാവരുടൽ വീഴ്വളവുപിൻ**
**പോകിപോക ചയനൻ ചരണതാരടവരേ.'**

'மிக ஒன்றிய நினைவோடு ஆதி தேவனிடத்தில் அமிழ்ந்த பேரன்புடைய சீராமன் அன்போடு பாடிய இத் **தமிழ்க் கவியை**க் கற்று வல்லராயினோர் இப்பிறப்பில் உடல் வீழுமளவும் திருமகள் நோக்குப் பெறுவர்; இறந்த பின்னர் அனந்த சயனனான திருமாலினுடைய திருவடித் தாமரைகளை அடைவர்' என்பது இதன் கருத்து. அதில்

ஆசிரியரே தாம் பாடுவது தமிழ்க்கவி என்று குறிப்பிட்டிருக்கின்றமை காண்க. இன்னும் இந்நூலின் மொழிச்சுவையுணர்தற்கு வேறு சில பாடல்கள் தருகின்ரேம்.

**'മന്നാ മിൻനേർ മെല്ലിടയാളെ വഴക്കിനെന്നി രാമൻവരും**
**മുന്നേ നല്കീടെന്നു വിപീഴണൻ മുന്നിൽനിന്നിരന്തളവേ**
**നിന്നോടാരേ നല്ലതുകേട്ടതു? നീതികൈന്തപണ്ടിതനാ**
**യെന്നോടുണ്ടോ പേചുമതെന്നെഴനിൻറി രാവണൻ**
**നടന്താൻ.** [1]

**'നടന്തിട മറൈന്തവനുണർന്തിരവിൽ നാചം**
**തുടങ്കിനതു കണ്ടരിയ തുമ്പമുള്ളിലേറി**
**അടങ്കിയിങ്ങു ചെന്നര ചനൈത്തൊഴുതു ചൊല്ല-**
**ത്തുടങ്കിനൻ വിപീഴണനു ണർന്തുയ രെല്ലാം.** [2]

இனி இவை தமிழெழுத்தால் எழுதிக் காட்டப்படும்.

**'மன்னு மின்னேர் மெல்லிடை யாளை**
**வழக்கினென் றிராமன் வரும்**[3]
**முன்னே நல்கீ டென்றுவி பீழணன்**
**முன்னில் நின்றிரந் தளவே**
**நின்னோ டாரே நல்லது கேட்டது**
**நீதி கைந்தபண் டிதனு?**
**யென்னோ டுண்டோ பேசும தென்றே**
**எழுநின் றிராவணன் நடந்தான்.'**

**'நடந்திட மறைந்தவ னுணர்ந்திரவில் நாசம்**
**துடங்கினது கண்டரிய துன்பமுள்ளி லேறி**

---

**1. பாட்டு 55. ஐந்தாம் படலம்.**

**2. பாட்டு 56. ஆரும் படலம்.**

**3. இஃது ஓரசைச் சீராகக் காணப்படுகிறது; பாடம் பிழையாக இருக்கலாம்.**

**அடங்கியிங்கு சென்றரச னைத்தொழுது சொல்லத்**
**துடங்கினன்வி பீஷணனு ணர்ந்ததுய ரெல்லாம்.**

இவை, விபீடணன் இராவணனிடம் சீதையைவிட்டு விடுமாறு கூறுவதைத் தெரிவிக்கும் பாடல்கள். முன்னது எழுசீர் விருத்தம். பின்னது கலிவிருத்தம்.

இந்நூலோடு சேர்த்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கும் 'இராமகதைப் பாட்டு' என்னும் புத்தகத்தினின்றும் ஒரு பாட்டுத் தருகின்றோம். இதன் ஆசிரியர் அய்யப்பிள்ளை ஆசான் என்பவர். இவர் பிறப்பிடம் தென்திருவிதாங்கூரைச் சேர்ந்த நெய்யாற்றின்கரையிலுள்ள ஒரு சிற்றூர். கண்ணச்சப் பணிக்கருடைய இராமாயணத்தைப்பார்த்து இவர் ராமகதைப் பாட்டுப் பாடியிருக்கவேண்டுமென்று பதிப்பாசிரியர் கருதுவதனுல் இவர் காலம் பதினைன்காம் நூற்ருண்டுக்குப் பிந்தி என்றேற்படுகிறது. இவர் பாடிய ராமசரித பாலகாண்டத்தின் முதல் விருத்தம் இது-

**'ആലമുണ്ടരൻതൻ മൈന്താ! അൻകരത്തോനേ യമ്പാൽ**
**ചീലമുന്നടികൾ പോററി ച്ചിറുപയർ തിരളി തേങ്കായ്"**
**കോലമുൻ കടവയിററിൽ കുറവറയമുതു ചെയ്തു**
**വേലയിൽ തിരപോലെന്തൻ മേതയിൽ തോൻറുവായേ.'**

இதில் -'ஐங்கரன்,' 'அன்பால்' என்னும் சொற்களை 'அன்கரன்' என்றும், 'அம்பால்' என்றும் பொருளறச் சிதைத்திருக்கிருர்கள். இவ்வின்றமிழ் ஆசிரிய விருத்தத்தைத் தமிழில் எழுதிக் காட்டுகின்ருேம்.

**'ஆலமுண் டரன்றன் மைந்தா! ஐங்கரத் தோனே! யன்பால்**
**சீலமுன் னடிகள் போற்றி சிறுபயறு திரளி தேங்காய்**

**கோலமுன் சூடவ யிற்றில் குறைவற அமுது செய்து**
**வேலேயில் திரைபோ லென்றன் மேதையில் தோன்று வாயே!**

இது விநாயகர் வணக்கம். தமிழ் தெரிந்தார்க்கு இப்பாடற் பொருளை விரித்துரைக்கத் தேவையில்லை. இப்பாடலிலும் முந்திய பாடல்களிலுமுள்ள சொல்லமைதி, பொருள மைதி, இலக்கண முடிபுகள் என்பவற்றைப் பாருங்கள். இவையே அக்காலத்திய மலையாளமென்றால் தமிழுக் கும் மலையாளத்துக்கும் இருந்ததூரம் எவ்வளவு என்பது புலனாகும்.

இப்பாடல்களை வாசித்துப்பார்த்த திரு **T. A.** கோபி நாதராயரவர்கள் 'இராம சரிதம்' ஒரு தமிழ் நூலென்றும், அதனை மலையாளக் கிரந்தமென்று சொல்வது சரியல்ல வென்றும் பலவாண்டுகளுக்கு முன் செந்தமிழ்ப்பத்திரிகை யில் எழுதினார்கள். அவர் கூறியது தவறு என்று இப் புத்தகத்தின் முகவுரையில் அதனைக் குறிப்பிட்டுக் கண்டிக்கின்றார் பதிப்பாசிரியர் பரமேசுவரய்யரவர்கள். இப்படி இரு பேரறிஞர்கள் தமிழ் நூலென்றும் மலையாள நூலென்றும் விவகரிக்கின்ற முறையில் அமைந்துள்ள நூல் இருமொழிக்கும் அக்காலத்திருந்த மிக நெருங்கிய ஒற்றுமையைத் தானே புலப்படுத்துகின்றது!

இராம சரிதத்தினால் 13-ஆம் நூற்றாண்டு மலையாள மொழிநடையும், கண்ணச்ச ராமாயணத்தினால் 14-ஆம் நூற்றாண்டு மொழி நடையும், இராமகதைப் பாட்டினால் 14, 15 ஆம் நூற்றாண்டு மொழி நடையும் விளங்கின. இந் நூற்றாண்டுகளில் அம்மொழியில் ஸம்ஸ்கிருத உச்சரிப்பு ஏறவில்லையென்பது மேற்காட்டிய பாடல்களைப் பார்த் தாலே தெரியவரும். இராம சரிதத்தில் வருகின்ற **'ஐ'**

'ദേവൻ' 'ഭോഗി ഭോഗ ശയനൻ' 'ശരണം' என்பவற்றைத் தமிழில் எழுதுகின்ருற்போல முறையே 'ஆதி' 'தேவன்' 'போகிபோகசயனன்' 'சரணம்' என எழுதியிருக்கின்றமை கொண்டு இதனை உணரலாம். மலையாளத்துக்கு வடிவம் கிடைத்தது 16-ம் நூற்ருண்டிலேதான். அதற்கு லிபி அமைத்துக் கொடுத்த தந்தை எழுத்தச்சன் ஆவர். அக்காலத்துக்குப் பின்னரே அது ஸம்ஸ்கிருத உச்சரிப்போடு கூடிய சொல்லையும் பொருளையும் அப்படியே தழுவத் தலைப்பட்டது. இவ்வாறு தமிழினின்று அகன்று அகன்று சென்று நாளடைவில் ஸம்ஸ்கிருதத்தின் ஒரு கிளைமொழிபோல ஆயிற்று. இதுவே உண்மை நிலையாம்.

## அரண்மனை ஏடுகள்

திருவனந்தபுரம் அரண்மனையைச் சார்ந்து பழைய எட்டுப் பிரதிகளடங்கிய சுவடிச்சாலை ஒன்று உண்டு. அதில் தமிழ், மலையாளம், ஸம்ஸ்கிருதம் என்னும் மூன்று மொழிகளிலும் அமைந்த ஏடுகள் ஏராளமிருக்கின்றன. அவற்றில் தமிழேடுகள் பலவும் கவனிப்பாரில்லாமையால் அழிந்துபோயின. எஞ்சி இருப்பவற்றுள் 'அரிச்சந்திர வெண்பா' என்ருேர் சுவடி உள்ளது. இதனைக் கண்டு பிடித்தவர் ராவ்சாகிப் S. வையாபுரிப் பிள்ளை அவர்களாவர். அவர்கள் இதுபற்றிச் 'சக்தி' என்ற வெளியீட்டில் அப்போது கட்டுரை ஒன்றும் எழுதியிருந்தார்கள்.

திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராயிருந்த ராவ்சாகிப் மு. இராகவையங்கார் அவர்கள் இந்த ஏட்டை இப்பொழுது பதிப்பித்துள்ளார்கள். இது வெண்பாவும் இடை இடையே

வசனமுமாக அமைந்த உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள். இதுவே வீரகவிராயரால் பாடப்பட்டிருக்கும் இப்போதைய அரிச்சந்திர புராணத்துக்கு முதனூலா யிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அரிச்சந்திர புராணப்பாயிரச் செய்யுட்களால் இஃது ஒருவாறு அறி யப்படும், அப்பாடல்கள் அடியில் வருவன:-

'தண்கவிகைக் குரிசிலரிச் சந்தி ரன்றன்
சரிதமதைத் தாரணியோர் விருப்ப மெய்த
வண்கவிஞர் வகைவகையே வகுத்து ரைத்த
வடமொழியுந் தென்மொழியின் வழுவி லாத
வெண்கவியுங் கண்டரங்கின் மாத ராடல்
விதங்கேட்டு மழையெனவே வெருண்டு சோலைக்
கண்கவிகள் குதிபாயு நல்லூர் வீரைக்
கவிராச னேவிருத்தக் கவிசெய் தானே'

விதியினர சிறந்தவரிச் சந்தி ரன்றன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த மாக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச காத்தம்
ஆயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமால் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேல் மண்டபத்துக்
கதிதருசீர் நல்லூர்வாழ் வீரன் ஆசு
கவிராசன் கவியரங்க மேற்றி னானே.'

இவ்வாசிரியர் அரிச்சந்திர புராணம் பாடுவதற்கு முதனூலாயிருந்த 'அரிச்சந்திர வெண்பா' இங்குள்ள சுவடிச்சாலையைத் தவிர வேறெங்கும் கிடைப்பதாகத் தெரியவில்லை. தமிழ்த்தாய் களி நடம் புரிந்த செந்தமிழ் நாடெங்கும் கிடைக்காத ஒரு ஏட்டுப்பிரதி இந்நாட்டில்

மட்டும் காணப்படுகின்றதென்ருல் இங்குத் தமிழ் எவ்வாறு பயிலப்பட்டு வந்ததென்பதும், தமிழ் ஏடுகள் எவ்வளவு அருமையாகப் போற்றிப் பாதுகாக்கப்பட்டு வந்தன என்பதும் தெரியப்படுகின்றனவல்லவா? இன்னும் துருவிப் பார்த்தால் அருந்தமிழ் ஏடுகள் பல இங்குக் காணப்படலாம். அவற்றை ஆராய்ந்து வெளிக்கொணர்தல் அறிவுடையார் கடன்.

இதுகாறும் கூறப்பட்டவை கொண்டு ஆதிகாலம் முதல் தமிழ்மொழி மலேயாள மொழியாக மாற்றுருவம் எடுத்த கி. பி. பதினுன்காம் நூற்ருண்டுவரை இஃதோர் செந்தமிழ் நாடாகவே திகழ்ந்த தென்பது ஒருவாறு விளக்கப்பட்டது. இதன் தென்பாற் பகுதிகள் இன்றும் தமிழ் வழக்குடையவையாகவே இருக்கின்றன என்பது நேரில் கண்டறியத் தகுந்த உண்மை. இனி, இந்நாட்டின் தென்கோடியுலுள்ள நாஞ்சில்நாடு, தொன்றுநாள்தொட்டுத் தூய தமிழ்நாடாகவே துலங்கிக் கொண்டிருக்கிறதென்பதை விளக்கப் புகுவோம்.

---


கொல்லம்
ஆயூர்
மேல்வேம்பனாடு
திருநெல்வேலி
கீழ்வேம்பனாடு
திருவனந்தபுரம்
விழிஞம்
விளவங்கோடு
களக்காடு
பேச்சிப்பாறை
திருநந்திக்கரை
செங்கோடி
திருவட்டாறு
கல்குளம்
பத்மநாபபுரம்
அதங்கோடு
குழித்துறை
அழகியபாண்டிபுரம்
பூதப்பாண்டி
ஆரல்வாய்மொழி
நாகர்கோவில்
கோட்டாறு
சுசீந்திரம்
குமரி
திருவிதாங்கூரின்
தென்பகுதி.

## நாஞ்சில் நாடு

திருவிதாங்கூரின் தென்பாலுள்ள தோவாளை, அகஸ்தீசுவரம் என்ற இரண்டு தாலுகாக்களும் சேர்ந்த நிலப் பரப்பு இப்போது நாஞ்சில்நாடு என்று அழைக்கப்படுகிறது. இதன் வடக்கெல்லையும் தெற்கெல்லையும் இயற்கையரண்களான பொதியமலைத் தொடரும் குமரிக் கடலுமாக அமைந்துள்ளன. கீழ்பாலும் அம்மலைத்தொடரே வளைந்து அரண் வகுத்து நிற்கின்றது. ஆகவே, மலையையும் கடலையும் எல்லையாகக் கொண்ட இந்தச் சிறிய நாட்டைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற முறையில் அமைந்த நானில வளமிகுதியுடைய இயற்கையன்னையின் இருப்பிடம் என்று சொல்லாம்.

**'பாண்டியர் வந்தனை செய்தநாடு - சோழர்**
**பண்டு முடிதரித் தாண்டநாடு**
**வேண்டு பொருள்கள் விளையும்நாடு - சோலை**
**வேலியாய்ச் சூழ்ந்தணி செய்யும்நாடு'** -என்றும்

**'பண்ணை பெருத்த பழநாடு - சுற்றிப்**
**பார்த்திடக் கண்கள் குளிரும் நாடு**
**மண்ணையும் பொன்னாக மாற்றும் நாடு - கவி**
**வாணர் புகழும் தமிழ் நாடு'** -என்றும்

கவிமணியவர்கள் புகழ்ந்த உண்மைப் புகழ்ச்சிக்கு உறைவிடமானது இந்நாஞ்சில்நாடு. மருதவளமும் நெய்தல் வளமும் மாண்புற அமையப் பெற்றது இது. உப்பும் நெல்லும் உற்பத்தி செய்து வஞ்சி நாட்டை உண்பிப்பது இந்நன்செய் நாடுதான். ஆகவே இதனைத் திருவிதாங்கூரின் கருவூலம் என்று சொன்னால் அது மிகையாகாது.

இதன் வளமிகுதியைப் பற்றித் திருவனந்தைச் சுந்தரம் பிள்ளையவர்கள் சொல்வதைக் கேளுங்கள்:–

'வஞ்சிநா டதனில் நன்செய் நாடெனச்
செந்தமிழ் வழங்கும் தேயமொன் றுளததன்
அந்தமில் பெருவளம் அறியார் யாரே?
மருதமும் நெய்தலும் மயங்கியங் கெங்கும்
புரையறு செல்வம் நிலைபெற வளரும்.
..........................................................................
வேயென வளர்ந்த சாய்குலைச் சாலியில்
உப்பார் பஃறி ஒருநிரை பிணிப்பர்
இப்பெருந் தேயத் தெங்கும் இராப்பகல்
தப்பினும் மாரி தன்கடன் தவறு
..........................................................................
தூளியால் தம்முடல் நீவிடில் சிரிக்கும்
சிறுமியர் என்னவச் செழுநில நங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனம் கூசி
உடல்குழைந் தெங்கும் உலப்பறு செல்வப்
பயிர்மயிர் சிலிர்த்துப் பல்வளம் நகுவள்'[1]

இந்த வளமிகுதி நாஞ்சில்நாட்டுக்கு நன்மையை அளிக்கவில்லை. நேர்மாறாக ஓயாத பேராபத்துக்கேகாரண மாகத் தீர்ந்தது. மூவேந்தரின் கண்ணும் கருத்தும் இதன் மீது பதிந்துகொண்டே இருந்தன. அதனால் ஒரு காலத்தில் நாஞ்சில் வள்ளுவனிடம் சுதந்திர நாடாக இருந்த இது, பின் பலர் கைக்கும் மாறும் ஓர் பண்டம்போல ஆயிற்று. வேற்றரசர்களின் படையெடுப்பாலும் முற்றுகையாலும் இந்நாடு அனுபவித்துள்ள அல்லலும் தொல்லை

1. மனோன்மணீயம்: அங்கம் 2, களம் 1. வரி 75-144.

யும் கொஞ்சமல்ல. அவர்கள் ஒருவரோடொருவர் மோதிக் கொண்டு இதனைக் கைப்பற்றவும், இதில் தம் ஆட்சியை நிலைநாட்டவும் புரிந்த செயல்களே இந்நாட்டின் சரித்திரம்.

பலப்பல தடவைகளில் சோழர்களும் பாண்டியர்களும் இந்நாட்டின்மீது படையெடுத்து வந்திருக்கிறார்கள் என்பதை இந்நாட்டிலுள்ள ஊர்ப்பெயர்களே காட்டும். கோட்டாறான மும்முடிசோழபுரம், கோட்டாறான சோழ கேரளபுரம், தேரான அழகிய சோழநல்லூர், புதுக்கிராமமான ராஜநாராயண சதுர்வேதி மங்கலம், சுசீந்திரமான சுந்தரபாண்டிய சதுர்வேதி மங்கலம், சுசீந்திரமான சுந்தர சோழ சதுர்வேதிமங்கலம் முதலான பெயர்கள் அதற்கு உதாரணங்கள். கேரளத்தோடு சேர்க்கப்பட்ட பின்னரும் கூட இதற்குத் தொல்லை தணிந்துவிடவில்லை. கொல்லம் 850 (கி. பி. 1675) முதல் பலதடவையும் நாயக்கர் படைகள் இந்நாட்டுக்குள் புகுந்து வரிதண்டியும், கொள்ளையடித்தும், துன்புறுத்தியும் வந்திருக்கின்றன. இதனால் நாடும் பயிரும் நலிவடைந்தன. அழகியபாண்டியபுரம் முதலியார் வீட்டு ஓலையால் இஃது அறியப்படுகின்றது.

"**திருமலைநாயக்கர்** படை கொண்டு வந்த ஏதுவாய் எண்ணூற்று ஒருபதாமாண்டு கார்தரிசு விழுந்து........." *

அரசரிடம் மக்கள் இதுபற்றி முறையிட்டுக் கொள்ளவே, அவர் தீர்வையில் குறைவு செய்து நீட்டு அனுப்பினதுமட்டுமன்றி அதனை "வீரவிளையிலும், வடசேரி குதிரைப் பந்தி விளையிலும், வையாழி விளையிலும் கல்வெட்டி அதன்படிப் பிரமாணமாக நடந்து கொள்ளுமாறும்" ⌘ செய்தார்.

---

* T. A. S. Vol; V; P. 208. ⌘ T. A. S. Vol; V; P. 210-12.

இதன் பிறகு கோல்லம் 900 ஆம் ஆண்டில் அழகப்ப முதலியின் படைவந்து அங்கங்கே பாளையமடித்து அழிவு செய்தது.

"[1] **கூ** ௵ ஆடிமீ ருட வந்த மடக்கு நீட்டுக்கு பேர்ப்பு-1. கிழக்கு நிந்நும் அரமனையார் வகை இராணும் குதிரையும் கோண்டு **அழகப்பன்முதலி** கூ ௵ தைமாதம் இருபத்திரண்டாம் தெயிதி முதல் வைகாசி மாதம் **யிரு** ட வரை.

2. திருப்பதிசாரத்திலும், பெருவிளையிலும் தெருசரங்கோப்பிலும் புலியூர்க்குறிச்சி பிலாவிளையிலும் இரணியசிங்கநல்லூர் கிழக்கேப் பிறத்து சரவிளையிலும் பாளயம்

3. செயிது படைபோருககோண்டும் **நாஞ்சினாட்டில் மங்கல முதல் மணக்குடி வரை** படை வருக கோண்டும்..........."

இதன்பின் முகிலன் படை கோல்லம் 915ஆம் ஆண்டில் இந்நாட்டில் புகுந்து அழிவு செய்தது. இதனால் நாஞ்சிலின் போலிவே குன்றிப்போயிற்று. மக்கள் அரசருக்கு இறுக்க வேண்டும் இறையை இறுக்க இயலாதவர்களானார்கள். ஆகவே கரத்திற் குறைவு செய்து மன்னவர் இரக்கங் காட்டினார். அப்போது அவர் அனுப்பிய நீட்டின் ஒரு பகுதி வருமாறு:-

**கூயிரு**௵ சித்திரைமீ **யிரு**ட முகிலன் படைக்குகோட்டைக க்கு ளு வீதமும் அரை வீதமும் கால் வீதமும் குறச்சு தந்த நீட்டுக்கு பேர்ப்பு-

1. கிளக்கு நிந்நும் **முகிலன்படை** வந்து நாஞ்சி நாட்டு கோட்டாரத்தில் பாளையஞ் செய்திருக்கையில் நாஞ்சிநாட்டில் படைச்சேதம் வருக கோண்டு நாட்டார்கூடி தங்கடம்

---

1. T. A. Vol V. P. 228

2. பறைகையில் தொள்ளாயிரத் தொருபத்தய்யா மாண்டு பசானம் மேல் வாரம் பாட்டம் உபையம் பளிசை வகைக்கு கோட்டாறு உள்ளிட்டபற்று வகைக்கு ஒங்நினு முக்கால் களிவாகவும்...''

மேற்கூறிய படையெடுப்புக்களினுல் விளைவிழந்தும், உணவிழந்தும், ஊர்விட்டோடியும் நாஞ்சில் மக்கள் அளவற்ற தொல்லைகள் அனுபவித்திருக்க வேண்டுமல்லவா? என்னை? விளைந்த நெல்லை அறுத்து யானைக்குக் கவளமாகக் கொடுக்கத் துணிந்தால் சிறிய அளவினைக் கொண்ட ஒரு வயல் நெல்லும் பலநாள் உணவுக்குப் பற்றுவதாக அமையும். ஆனுல் யானையே வயலுக்குள் புகுந்து தின்னத் தொடங்கிவிட்டால் நூறு வயல் நெல்லாலும் அதன் பசியைப் போக்கப்பற்றுமா? அதன் வாய்க்குள் புகுவதைவிடக்காலில்பட்டு அழிவதுபெரிதாயிருக்குமன்றே? அதிலும் ஒரு நன்செய்யில் பல மதயானைகள் புகுந்து விட்டாலோ? அம்மம்ம! அதனுலுள்ள கேடு சொல்லும் தரத்ததா? யானையின் பசிதணியும் நன்மையினும் வயலழிவினுலுள்ள தீமைதான் பன்னூறுமடங்கு பெரிதாயிருக்கும். இப்படி யானை புக்க புலம்போல நன்செய்நாடு நைந்து வருந்தியது கொஞ்சமல்ல.

கிழக்கு நின்றும் தீராத பொருட்பசியோடும் குருதி வேட்கையோடும் வந்த படைகளுக்கெல்லாம் பாசறையாக அமைந்தது இப்பைந்தமிழ் நாடுதான். அது அவர்களுக்கு அன்னசத்திரமாய்-பண்டக சாலையாய்ப் பயன் பட்டுஅப்பால் செல்லவேண்டுமென்ற ஆசையையேமறப்பித்தது.இன்னெருநாடாக இருந்தால் இதற்குள்பாலைவனமாய்ப்போயிருக்கும் என்பதற்குச் சந்தேகமில்லை. இதன் அழியாத வளமிகுதியே இந்த அழிவையெல்லாம் தாங்கி அழியாமல் காத்து நிறுத்தியது. இதனை நினைக்கும்போது 'வாழ்க நாஞ்சிலே! நீ வாழ்க எந் நாளுமே' என்று

பல்லாண்டு கூறி வாழ்த்துவதைத் தவிர வேறொன்றும் சொல்லத் தோன்றவில்லை. நிற்க. இது தொன்றுதொட்டே தூய தமிழ்நாடாகத்தான் இருந்தது என்பதற்கான ஆதாரங்கள் காட்டப்புகுவதற்குமுன் இந்நாட்டின் பெயரமைதி பற்றிச் சிறிது ஆராய்வாம்.

## பெயரமைதி

நாஞ்சில் வள்ளுவன் என்பவனால் ஆளப்பட்ட காரணத்தால் இந்நாட்டுக்கு 'நாஞ்சில் நாடு' என்ற பெயர் ஏற்பட்டது என்பர் சிலர். நாஞ்சில் வள்ளுவன் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்ககாலத்துப் பாடற்றொகையுள் ஒன்றான புறநானூற்றால் அறியப்படுபவன். இவன் நிலக்கிழமையும் கொடைக் குணமும் உடையவனாயிருந்தான் என்பது இவனைப் புலவர்கள் பாடிய பாடற்பொருளால் அறியக்கிடக்கின்றது. [1]ஒருசிறைப் பெரியனார் [2]மருதன் இளநாகனார், [3]ஔவையார் [4]'கருவூர்க் கதப்பிள்ளை என்னும் புலவர்கள் இவனைப் பாடியிருக்கின்றனர்.

ஒரு பாடலில் இவன் 'நாஞ்சில் பொருநன் என்று அழைக்கப்படுகின்றான். 'உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருந!' -என வருவதால் இங்கே நாஞ்சில் என்ற சொல் அப்பெயருடைய மலையைக் குறிப்பதெனத் தெரிகிறது. இவன் நாடு -கயத்தில் இட்ட வித்து கரும்புபோல் தழைப்பதற்கிடமானதும், கோடைக் காலத்திலும் மகளிர் கண் போலக் குவளைப் பூக்கள் பூக்கின்ற தாழ்ந்த இடங்களையுடையதும், பொன்போன்ற வேங்கைப் பூக்களைச் சுமந்து நீலமணி போன்ற நீர் கடலைநோக்கிச் செல்கின்ற ஆறுகளையுடையதும் ஆன வளமிகுதி கொண்டது.

---

**1. புறம் 137. 2. ஷ 138, 139. 3. ஷ 140. 4. ஷ 380.**

இவன் கொடைத் தன்மையைப் பற்றி ஔவையார் குறிப்பிடும்போது 'நாங்கள் தோட்டங்களில் பறித்துச் சமைத்த கீரையின் மேல் தூற்றுவதற்குக் கொஞ்சம் அரிசி கேட்டோம்; அவன் வரிசை யறிந்து கொடுக்கும் வண்மையாளன் ஆதலால் குன்றமன்ன யானையைக் கொடுத்துக் கொடைமடம் பட்டான்' என்று கூறுகின்றார். ஒருசிறைப் பெரியனார் இவனை "மூவேந்தரையும் நினைக்க வேண்டாதவாறு கொடுப்போன்" என்று குறிப்பிடுகின்றார்.

'ஈதல் ஆனான் வேந்தே; வேந்தர்க்குச் சாதல் அஞ் சாய் நீயே'* என வரும் தொடரில் வேந்தன் என்றது 'சேரனை' எனப் புறநானூற்று உரைகாரர் கொள்கின்றார். பதிப்பாசிரியரும் 'இவன் சேரனிடத்து அன்புற்றுப் படைத்துணையாய் நின்றோன்' என்கின்றார். ஆனால் கரு வூர்க் கதப்பிள்ளை பாடிய பாடலில் இவன் 'தென்னவன் வயமறவன்' என்று கூறப்படுகின்றான். ஆதலால் பாண்டிய னுக்குப் படைத் தலைவனாயிருந்தான் என்று கொள்ள வேண்டியிருக்கிறது. இப்படி இவன் எந்தப் பெருவேந்த னைச் சார்ந்தவன் என்று கொள்வதில் முரண்பாடுகள் இருப்பினும் ஆட்சிக் கிழமையைக் கொண்ட ஓர் சிற்றரச னாயிருந்தான் என்பதை மறுப்பதற்கில்லை. இவன் பெய ரால் இது **நாஞ்சில் நாடு** என்னும் பெயர் கொண்டது எனக் கொள்வது இதற்கு ஒரு ஏற்றம் தருவதாகவே அமையும்.

ஆனால் இங்கு ஓர் கேள்வி எழக்கூடும். நாஞ்சில் வள்ளுவனால் இது நாஞ்சில் நாடாயிற்றா? அன்றி நாஞ்சில் நாட்டை ஆண்ட காரணத்தால் வள்ளுவன் நாஞ்சில்

---

* **புறநானூறு: 139**

வள்ளுவன் ஆயினனு? என்பது அக்கேள்வி. இது தற்போது விடையிறுக்க முடியாத ஒன்று. என்னவாயினும் புறநானூற்ருேடொத்த பழைமையுடைய நற்றமிழ்நாடு இந்நாஞ்சில்நாடு என்பது மட்டும் உறுதி.

இனி, நாஞ்சிக் குறவன்* என்பவனுல் இது **நாஞ்சி நாடு** என்னும் பெயர் பெற்றதாகச் சொல்லி அதற்கோர் கதையுங் கூறுவர். இங்குள்ள தாடகை மலைச் சாரலில் கோணங்கிக் குறவன் என்பவன் மலைகளிலிருந்து மாறு வெட்டிக் கூடை முதலியன முடைந்து காலங்கழித்து வந்தானென்றும், ஒரு சமயம் மாறு வெட்டும்போது ஓர் தைல ஊற்றில் அரிவாள் படவே அது தங்கமாயிற்றென்றும், அது கண்டு மகிழ்ந்து இரும்புகளை மிகுதியாகத் திரட்டி இதில் கொண்டு தோய்த்துத் தங்கமாக்கிப் பெரும் செல்வனுகிப் பின் நாட்டுக்கே அதிபதியாகிவிட்டானென்றும், தேய்ந்த கொழுவும் அற்ற மண்வெட்டியுமே தீர்வையாகப் பெற்று வந்தானென்றும், இவன் மகனுன பொம்மையாக் குறவன் பெரும் படைகளை வைத்துக்கொண்டு இந்நாட்டைப் பல வருடங்கள் ஆண்டு வந்தானென்றும், அவனுக்குப் பிறகு ஆண்ட நாஞ்சிக் குறவன், வெகு காலத்துக்குப் பின் பிறந்த தன் பிள்ளைக்கு மணம் முடிப்பதற்கு அழகியபாண்டியபுரம் பெரிய முதலியாரிடம் பெண் கேட்டானென்றும், வஞ்சனையால் இவனைக் குலத்தோடழிக்கக் கருதிய அவர் மணத்திற்கிசைந்து போய் மண்டபமொன்று கட்டி அதில் மாப்பிள்ளை வீட்டாரை இருக்கச் செய்து, பொறியைத் தடுக்கிக் கொல்வித்தாரென்றும் அக்கதை கூறுகின்றது.

---

* **பிற்சேர்க்கையில் பார்க்க.**

நாகமையா அவர்கள் எழுதிய ஸ்டேட் மானுவலில் **(State Manual)** காணக் கிடக்கிறது இந்தக் கதை. அதுவோ *மெக்கன்ஸி என்பாரது கையெழுத்துப் பிரதியிலிருந்து பெயர்த்தெழுதப்பட்டதாகும். அவருக்கு இந்தக் கதை எப்படிக் கிடைத்தது தெரியுமா? கிழக்கிந்தியக் கம்பெனியார் நம் நாட்டார்க்கு அனுசரணையாக இருந்து மெல்ல மெல்லத் தம் உரிமையை நாட்டினார்களல்லவா? அப்போது இங்குள்ள ஒவ்வோரிடத்தையும் பற்றிய பழங்கால வரலாறு திரட்டுவதற்கென்று மெக்கன்ஸி என்பார் தலைமையில் ஒரு குழுவை ஏற்படுத்தினார்கள். அக்குழுவினருள் ஒருவரிடம் கோட்டாற்றிலிருந்த ஒரு அண்ணாவி சொன்ன கதை இது. இப்போழுது தெரிகிறதா ஸ்டேட் மானுவலில் ஏறிக் கிடக்கிற கதையின் மூலம் எங்கே இருக்கிறதென்று?

அழகியபாண்டியபுரத்தின் பக்கத்தில் குறத்தியறை என்ற ஊர் இருப்பதையும், அங்கே குறவன் தட்டுவிளை என்ற நிலப்பகுதி இருப்பதையும், சோரைவயல் அரசன் பாடு வயல் என்னும் பெயருள்ள இரு வயல்கள் இருப்பதையும் கதை நிகழ்ச்சிக்கு ஆதரவாகக் காட்டிக் கதையை வளப்படுத்துகிறார்கள். இவைகளை யெல்லாம் வைத்துக் கொண்டு நாம் ஒரு முடிவுக்கு வந்துவிடுவது முறையாகாது.

குறவன் தட்டு விளையில் சில விக்கிரகங்கள் இருப்பதோடு வட்டெழுத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றும் காணப்படுகிறது. இதன் வடபுறமுள்ள பாறையில் ஒரு கோவிலும் இருக்கக் காணலாம். அது பாறையைக் குடைந்து செய்யப்பட்ட சிறு கோவில். உள்ளிருக்கும்



***Meckenzie Manuscripts.**

உருவத்தைப் பார்த்தால் ஔவையாரின் உருவம்போல் தோன்றும். இவற்றைப்பற்றி ஆராய்ந்து கல்வெட்டினை வெளிப்படுத்த வேண்டுவது அவசியமாகும். நிற்க.

இந்நாடு நன்செய் வளம் மிகுந்த நாடு என்பது யாவரும் அறிந்த உண்மை. ஆகவே, 'நன்செய் நாடு' என்னும் பெயர் நாளடைவில் மருவி **நாஞ்சி நாடு** ஆயிற்று என்பர் ஒரு சிலர்.

நாஞ்சில் என்பதற்குக் 'கலப்பை' என்றும், 'கொழு' என்றும் பொருள்கள் உள்ளன. 'நாஞ்சில் அல்லது படையும் அறியார்' என்பது புறநானூறு*. ஆகவே, ஏரினாலாய உழவுத் தொழில் மிகுந்த நாடு என்னும் பொருள் அமையுமாறு **நாஞ்சில் நாடு** என்ற பெயர் இதற்கு ஏற்பட்டது என்பர் இன்னொரு சிலர்.

நாஞ்சில் என்னும் சொல்லுக்கு 'மதில்', 'மதிலுறுப்பு' என்ற பொருள்களும் உண்டு. 'சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த ஆரை சுற்றுமுற்று பாரேலோம்'⌘ என்பது கம்பர் தொடர். அழியா மதிலாகிய மலையையும் கடலையும் அரண்களாகக் கொண்டிருப்பது இந்நாடாதலால் 'மதில்சூழ் நாடு' என்னும் பொருள் அமைய **நாஞ்சில்நாடு** என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம் என்பர் வேறு சிலர். என்னவாயினும் இவ்விருவகைப் பொருளையும் ஏற்பதற்குப் பொருந்திய **நாஞ்சில் நாடு** என்னும் பெயர் நாட்டுக்கு மிகப் பொருத்தமான பெயரேயாகும்.

**எல்லை**- வடக்கும் கிழக்கும் தெற்கும் மலையும் கடலுமாகிய நிலையான எல்லையைக் கொண்டிருப்பதுபோல

---

***புறநானூறு; 20** **⌘கம்பராமாயணம்; நகரப்; 17.**

மேற்கே கொண்டிருக்கவில்லையாதலால் மேற்கெல்லை அடிக்கடி மாற்றத்துக்குட்பட்டிருந்திருக்கிறது. ஒருகாலத்தில் பன்றி வாய்க்கால் மேற்கெல்லையாக இருந்ததென்பதை உலக வழக்குப் பேச்சினுல் அறிகிறோம். அது. ஆளூர், வீராணி, வேம்பன்ஊர் என்னும் ஊர்களின் கிழக்காகத் தெற்கு நோக்கிச் செல்லும் சிற்றாறு. இப்பொழுது தோவாளை அகஸ்தீசுவரம் என்ற இரண்டு தாலுகாக்களும் நாஞ்சில்நாடு என்று கொள்ளப்படுவதால் மேற்கெல்லை வேறுவகையாக மாறியிருக்கிறது.

வடக்கும் தெற்கும் கூட எல்லை வகுத்த காலம் உண்டு. அழகியபாண்டியபுரம் பெரிய முதலியார் வீட்டு ஓலைப் பிரமாணங்களில் எல்லையாக 'மங்கலம் முதல் மணக்குடிவரை' என்னும் தொடர் கூறப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். மங்கலமென்பது வடக்கெல்லையிலுள்ள மலை நாட்டுஊர். வடக்கே மலையைச் சொல்லாமல் மங்கலம் என்று சொன்னது மக்கட் குடியிருப்பைச் சுட்டுவதற்காக இருக்கலாம். இப்பொழுதும் 'கன்னியாகுமரி முதல் கடுக்கரை வரை' என்று கூறும் வழக்கம் இருப்பதைப் பார்க்கிறோம். ஆனுல் தெற்கெல்லையாகக் கன்னியாகுமரியைக் குறிப்பிடாமல் மணக்குடியைக் குறிப்பிட்டது எதனைக் காட்டுகிறது? மணக்குடியினின்று தென்கிழக்கே ஏறக்குறைய நான்கு மைல்களுக்கப்பால் இருக்கிற கன்னியாகுமரியும் அதன் சுற்றுப்புறங்களும் இதனுடன் அக்காலத்தில் சேர்ந்திருக்கவில்லை என்பதைக் காட்டுகிறதேயன்றி வேறல்ல. கல்வெட்டுக்களில் இந்நாடு 'ராஜ ராஜ பாண்டிய நாட்டு உத்தம சோழ வளநாட்டு நாஞ்சி நாடு' என்று குறிப்பிடப்படுகின்றது.

**ஆறு:-** பல கால்களால் நடந்து இந்நாடெங்கும் பரந்து வளம்படுத்தும் ஆறு பழையாறு.

**'ஆயிரம் காலால் நடந்து - நடந்தமு**
**தன்னை பழையா றவிக்கும் நாடு'** -என்பது

நம் கவிமணியவர்கள் வாக்கு. இன்றைய குமரியின் தெற்கே பெருநிலப் பரப்போன்று இருந்ததாகவும், அதில் குமரிக்கோடு என்றொரு மலையும், குமரியாறு பஃறுளி யாறு என இரு ஆறுகளும் இருந்ததாகவும், அவை ஒரு காலத்தில் உண்டான கடல்கோளுக்கு இரையாயின எனவும் பழந்தமிழ் இலக்கியங்கள் பகர்கின்றன.

**'வடிவேல் எறிந்த வான்பகை பொருது**
**பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
**குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள'** -என்பது

சிலப்பதிகாரம். இப்பஃறுளி, இந்நாட்டு மலையில் தோன் றித் தெற்கு முகமாக நடந்து மணக்குடிக் காயலில் சென்று வீழ்கின்ற இன்றைய **பழையாறு** ஆக இருக்க வேண்டுமென்று அறிஞர் பலரும் கருதுகின்றனர். இங் ஙனம் ஊகிப்பதற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. தெற்கே நிலப்பரப்பிருந்த காலத்தில் இன்று காயலில் சென்று வீழ்கின்ற பழையாறு அன்று அந்நிலத்தினூடு பாய்ந்து சென்றிருக்க வேண்டுமல்லவா? அப்போது அதற்குப் பெயர் இவ்விரண்டனுள் ஒன்றாகத்தானே இருக்க வேண்டும்? ஏனிப்படிச் சொல்கிறேமென்றால் வேறுசில ஆறுகளைப்போல அநாமதேய ஆறல்ல பழை யாறு ஆகையினால்தான்.

உற்பத்தியிடத்திலிருந்து சில மைல்களுக்கப்பால் இதில் ஓர் அணை கட்டப்பட்டிருக்கிறது. அவ்வணை தலை யணை என்றும், பாண்டியன் அணை என்றும் அழைக்கப் பெறும். அப்பக்கங்களில் இவ்வாற்றைப் **பறளியாறு**

என்று அழைக்கும் வழக்கம் இன்றும் இருக்கிறது.[1] இப் பெயர் பஃறுளி என்பதன் திரிபாகவே இருக்க வேண்டும். அது பறுளி என்றும், பறளி என்றும் திரிந்து வழங்குதல் இயல்புதானே? இவ்வணையில் கீழ்வரும் பாடலொன்று செதுக்கப்பட்டிருப்பதாகவுங் கூறுவர்.

**'எத்திசையும் புகழ்படைத்த கொல்லம் தோன்றி**
**இருநூற்றுத் தொண்ணூற்று இரண்டா மாண்டு**
**வெற்றிசெயும் கும்பத்தில் வியாழன் நிற்க**
**விளங்குபுகழ் ஆவணிபன் னிரண்டாந் தேதி**
**தத்திவிழும் பறளியாற் றணையும் தள்ளி**
**தமிழ்ப் பாண்டி ராஜசிங்கம் தனையும் வென்று**
**கொத்தலரும் பூஞ்சோலை நாஞ்சி நாடும்**
**கோட்டாறும் [2]கூபகர்கோன் கொண்ட நாளே.'**

என்பது அது.

இந்த ஆறு [3]கல் வெட்டுக்களில் 'கோட்டாறு' என்று குறிப்பிடப்படுகின்றது. அது:-

"எல்கையாவிது:- நாஞ்சி நாட்டு தேரான் அழகிய சோழ நல்லூர் தேரான் குளத்தில் கீழ் முட்டைக் குமிழிமடை கீழ் கால் போக்கில் நிலத்துக்கு எல்கை: கீழெல்லை கன்னடியான் குலகாலன் மடை மேல்ப் பெருங்காலுக்கு மேற்கு, தென் எல்லை உதிரப்பட்டி யைச் சுற்றியோடும் **கோட்டாற்றுக்கு** வடக்கு............"

---

**1 ஆனல் கோதையாற்றையும் பறளியாறு என்று அழைக்கும் வழக்கம் கல்குளம் தாலுகாவில் இருக்கிறதாம். இதற்கு ஆதாரம் யாது என்று தெரியவில்லை.**

**2. கூபகர்கோன்-திருவிதாங்கோட்டரசன், T. S. Manual vol. I. P. 251, கூபதேசம் அல்லது கூபகதேசம் திருவிதாங்கூர். சிறையின் கீழ்த் தாலுகாவிலுள்ள ஆற்றங்கல் என்னும் ஊரின் பக்கத்து இடங்களுக்கு ஏற்பட்டிருந்த பண்டைப் பெயர், (ஷை ஷை 254)**

**3 Kerala Society Papers: Vol. I. P. 263.**

எனவரும் அகஸ்தீசுவரம் பாறைக் கல் வெட்டுத் தொடரினுலும் அறியப்படும். மிகுதியும் வளைந்து வளைந்து வருவதனுல் இஃது இப்பெயர் பெற்றிருக்கலாம்.

ஆனுல் புராணகாரர்கள் கோடு என்பதற்கு யானைத் தந்தம் எனப்பொருள் கொண்டு அதற்கோர் கதையும் கட்டிவிட்டனர். அஃதாவது, கௌதமரால் சபிக்கப்பட்ட இந்திரன், தன் சாபம் போக்கச் சுசீந்திரத்துக்கு வந்து அங்குள்ள மகாதேவரைப் பூசிக்கக் கருதினுனென்றும், பூசைக்கு வேண்டும் புனித தீர்த்தத்தின் பொருட்டு ஐராவதத்தை ஏவ, அது தன் கோட்டினுல் கிழித்துப் பொதிய மலையினின்று ஓர் ஆறு கொண்டு வந்ததென்றும், அதுவே கோட்டாறு அல்லது தந்தநதி என்றும் கூறுவர். எந்தப்பழமையான ஆறுகளுக்கும் தெய்வத் தொடர்பை ஏற்படுத்திக் கதைகள் கட்டிவிடுகின்ற வழக்கம் நம் நாட்டில் உண்டு. அந்தப் பாணியில் அமைந்ததே இதுவும் என்று சொல்வதைத்தவிர வேறு என்ன சொல்லமுடியும்?

இனி, பழையாறு என்னும் பெயர்தான் இதற்கு எவ்வாறு வந்தது என்பது சிந்திக்கத் தக்கது. நாஞ்சில் நாட்டுப் பயிர்த் தொழிலுக்காக இவ்வாற்றில் பலப்பல அணைகள் கட்டிக் கால்வாய்கள் வகுத்தார்கள். பூதப் பாண்டிக்குப் பக்கத்திலுள்ள சாட்டுப்புதூர் அணை அவற்றுள் ஒன்று. இதிலிருந்து பிரியும் ஆறு 'நாஞ்சில் நாட்டுப் புத்தனுறு' எனப்படும். இதனைப் 'புத்தனுறு' என்றும் அழைப்பார். கிளை ஆருகிய இது புத்தனுறு ஆகவே தாய் நதி பழையாறு ஆகிவிட்டது. இங்ஙனம் வழங்கப்படுவது இயல்புதானே! அணை கட்டிப் புத்தனுறு வெட்டப்பட்டது கொல்லம் 920 ஆம் ஆண்டு என்று தெரிகிறது. கீழ்வரும் தொடர்கள் மேற்கூறியவற்றுக்கு ஆதரவு தந்து நிற்கும்.

"920-ാമാണ്ടു് ശുചീന്ദ്രത്തു ആററിനു കിഴക്കുള്ള നിലങ്ങളും കരക്കാട്ടും ശുചീന്ദ്രത്തുൻ പോററിമാരോട്ടും ചോരാവൊററി എഴുതി വേണ്ടിച്ചു അഗസ്തീശ്വരത്തു പട്ടരുപ്പററു നിലവും കരക്കാട്ടും കുലശേഖരപുരത്തു ഗ്രാമത്താരോടു ചോരാവൊററി എഴുതി വേണ്ടിച്ചു പുത്തനായിട്ടു കുളവും വെട്ടിച്ചു നിലം തിരുത്തുന്നതിനു ഭൂതപ്പാണ്ടി വടക്കെ പറളിയാററിൽ ചാരക്കാലണയിൽ നിന്നും ഉയർത്തി അണ കെട്ടി അവിടെ നിന്നും പുത്തനായിട്ടു ആറു വെട്ടി കന്നിമാകുമരിവരേയ്ക്കും ആററു വെള്ളം കൊണ്ടുവിട്ടു..............."[1]

இதிலிருந்து இன்றைய பழையாறு கி. பி. 1745 வரையும் பூதப்பாண்டியின் பக்கத்தில்கூட பறளியாறு என்றே அழைக்கப்பட்டு வந்ததென்பதும், அணை கட்டிப் புத்தன் ஆறு வெட்டப்பட்ட பின்னரே பழையாறு என்ற பெயரைப் பெற்றிருக்க வேண்டுமென்பதும், சாட்டுப்புதூர் அணைக்குச் சாரக்கால் அணை என்றோர் பெயருண்டு என்பதும் பிறவும் அறியப்படுகின்றன. இங்ஙனம் பழைமை என்னும் அடைமொழியை இது ஏற்கப்போய் தன் பழம்பெருமை வாய்ந்த இயற்பெயரை இழந்துவிட்டதுதான் வருந்தத்தக்கது. இன்றைய பழையாறே சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியங்களில் மிளிரும் பஃறுளியாறு என்று ஊகித்துச் சொல்லவேண்டிய நிலை ஏற்பட்டு விட்டதே!

இவ்வாற்றில் வீரநல்லூரின் அண்மையில் ஓர் அணை கட்டப்பட்டிருக்கிறது. அதற்கு வீரப்புலி அணை என்று பெயர். இது கட்டிய மன்னன் வரலாற்றைத் திருவிதாங்கூர் ஸ்டேட் மானுவல் கீழ் வருமாறு கூறும்.

---

1. **Land Revenue manual Vol. IV. P. 98 - 99.**
**T. S. Manual Appendix P. 127.**

"கேரளத்தில் வென்றுமண் கொண்ட பூதலவீர ஸ்ரீவீர உதய மார்த்தாண்டவர்மர் என்னும் அரசர் கொல்லம் 692 முதல் 710 வரை ஆண்டு வந்தார். இவர் சிறந்த போர் வீரராக இருந்தார். இவர் காலத்தில் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள பல இடங்களும் இவர் ஆட்சியின் கீழ் கொண்டுவரப்பட்டிருந்தன. இவர் **சோழகுலவல்லி** என்னும் சோழ ராஜகுமாரியை மணம் செய்தார். அவள் சீதனமாகச் சோழகுலவல்லிபுரம் என்னும் களக்காட்டைக் கொண்டு வந்தாள். பூதல வீரர் களக்காட்டைத் தலை நகரமாக்கி அதில் 'வீரமார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் புது மாளிகை' என்ற பெயரால் ஒரு அரண்மனை கட்டினார். சோழகுல மங்கையை மணந்தமையால் இவருக்கும் புலிவிருது உரிமையாயிற்று. ஆகவே 'புலிமார்த்தாண்டவர்மா' என்ற சிறப்புப் பெயரை இவர் பெற்றார். இவர் காலத்தில்தான் பழையாற்றில் வீரநல்லூரின் பக்கத்தில் வீரப்புலி அணை கட்டப்பட்டது*" என்பதாம்.

இதனை ஆராய்ந்துதான் முடிவுகட்டவேண்டுமே ஒழிய அப்படியே ஒப்புக்கொள்வதற்கில்லை. நிற்க,

இது கோடையிலும் வற்றாத நீர்வளம் சுரக்கும் தன்மையால் பஃறுளி (பல் + துளி) என்று அழைக்கப்பட்டிருக்கவேண்டும். இன்றும் இஃது உயிர்த்தன்மை நிரம்பப் பெற்றதாயிருப்பதை நேரில் பார்க்கிறோம். இதன் தண்ணீர் ஒரு சிறிதும் பாழ்படுதலின்றி அவ்வளவும் பயிர்த்தொழிலுக்குப் பெரிதும் பயன்பட்டு வருகின்றது. தலையணை முதல் தாமரைக் குளத்தின் பக்கத்திலுள்ள

---

* T. S. Manual by Nagamaiya Vol. I. P. 295.

மிஷன் அணை வரையிலுள்ள எத்தனையோ பல அணைகளி லும் தங்கி இளைப்பாறி, பல கால்களால் நடந்து, சென்ற இடமெல்லாம் செழுமையுறச் செய்து நாஞ்சில் நாட்டை நெற்களஞ்சியமாக்கும் இதன் நீர்மையை இந்நாட்டார் வாயார வாழ்த்தக் கடமைப் பட்டுள்ளார். இதனை நாஞ்சில் நாட்டுக் காவேரி என்று கூறுதல் மிகப் பொருந்தும்.

**ஊர்கள்.**

இனி, இதுவோர் பழந்தமிழ்நாடு என்பதை இதன் கண் உள்ள சில ஊர்களின் வரலாறு கொண்டு விளக்கப் புகுவோம்.

க. **அழகியபாண்டியபுரம்**— இது நாஞ்சில் நாட்டில் வடபாலுள்ள ஓர் ஊர். பெயரைக்கொண்டே பாண்டியன் தொடர்புடையதென்று அறிந்து கொள்ளலாம். எந்தப் பாண்டியன் என்பது தெரியவில்லை. கல்வெட்டுக்களில் இவ்வூர் அதியனூரான அழகியபாண்டியபுரம்[1] என்றும், '[2] அதி யனூர்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இவ் விரு பெயர்களும் அவ்வூருக்கு முற்காலத்தில் வழங்கி வந் தமை அறியப்படும். ஆனால் இவற்றுள் எப்பெயர் முந்தி யது? எது பிந்தியது? என்பது சிந்திக்கத்தக்கது.

அதியன். அதியமான், அதிகன், அதிகமான் என்ற இவையெல்லாம் ஒருவனையே குறிப்பிடுகின்றன. அதிகன் என்ற பெயரைக் கேட்டதும் அதிகமான் நெடுமானஞ்சி யின் நினைவு நமக்கு வருகின்றது. அதற்குக் காரணம் பெயர் ஒற்றுமை மட்டுமல்ல; வேறு காரணங்களும் உண்டு. அஞ்சி, சேர வேந்தனான பெருஞ்சேரல் இரும்

1. T. A. S. Vol. III P. 57. 2. T. A. S. Vol. I No. 3. Page 4

பொறையோடு பகைத்துத் தோல்வியுற்றுன் என்பதைப் புறநானூறு, பதிற்றுப்பத்து முதலிய இலக்கியங்கள் கொண்டு அறிகின்ருேம். ஆகவே இருவர் நாடும் அடுத் திருந்ததாகல் வேண்டும் என ஊகிக்கலாம் அல்லவா?

இன்னுென்று, அதிகனேடு நட்புப் பூண்டிருந்தவர் ஔவையார். ஔவையாரைத் தெய்வத்தன்மையுடைய வராக்கிய பிற்காலத்தார் அவருக்குக் கோவில் அமைத்து வழிபடத் தொடங்கினுர்கள். ஔவையார் வணக்கம் அழகியபாண்டியபுரத்தின் சுற்றுப்பக்கங்களில் மிகுந்திருக்கக் காண்கிறேம். இவ்வூரை யடுத்துள்ள குறத்தியறையிலும், அங்கு நின்று சுமார் ஐந்தாறு கல் தொலைவிலுள்ள தாடகை மலைச் சாரலிலும் ஔவையார் கோவில்கள் அமைந்திருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

அதிகன் என்பவன் சேர வம்சத்தைச் சேர்ந்த ஓரரசனுவான். "ஈகையங் கழற்கால் **இரும்பனம் புடையல்**[1]" எனவும், 'வட்கர் போகிய **வளரிளம் போந்தை**[2]' எனவும் இவனுக்குப் பனம் பூமாலை உரிமைப்பட்டதாகப் புறநானூறு பலவிடங்களிலும் கூறுகின்றது. 'இவனுக்குப் பனந்தார் கூறியது, சேரமாற்கு உறவாதலின்' என அதன் உரையாசிரியரும் குறிப்புரையிற் கூறுகின்றுர். புறநானூற்றுப் பதிப்பாசிரியரான டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களும் இவனைச் சேர வமிசத்தைச் சேர்ந்த ஓர் அரசனுகவே கருதுகின்றுர். அதற்கு ஆதாரமாக ராவ் பகதூர் வெங்கையா அவர்கள் எழுதியுள்ளதாகக் கொடுக்கும் அடிக்குறிப்பு வருமாறு:-

"அதிகமான், அதிகன், அதிகைமான், அதியமான், அதியன் இவ்வைந்தும் சேர வம்சத்தைச் சேர்ந்த ஓர் அர

**1. புறம். 99; 5. 2. புறம். 100: 3.**

சனைக் குறிக்கும் ஒருபொருட் பலபெயரென்று தோன்று கின்றன. அதிகன் என்று சொல்லப்பட்ட ஓர் அரசன் புகழ்ச் சோழ நாயனருடன் யுத்தம் செய்ததாகப் பெரிய புராணத்திலிருந்து அறியலாம். சித்தூரைச் சேர்ந்த போளூருக்கடுத்த திருமலையென்ற சமணக் கிராமத்தி லுள்ள ஒரு கல்வெட்டால் அதிகைமான் அதிகன் என்று கூறப்பட்டுள்ள கேரள தேசத்தானொருவன் இருந்தா னென்பதும், அவனுக்கு இராசராசனென்று மற்றொரு பெயருண்டென்பதும், அவன் வம்சத்தில் எழினி அல்லது யவநிகா என்ற ஓரரசன் இருந்தானென்பதும், இராச ராச னுடைய குமாரனான விடுகாதழகிய பெருமாள், தகடா என்று சொல்லப்பட்ட ஊரை ஆண்டானென்பதும் தெரி கின்றன. வடமொழியில் தகடா என்று சொல்லப்பட்ட இந்த ஊர் தமிழில் தகடூர் என்று வழங்கி வந்ததாகத் தோன்றுகின்றது,[1]" என்பதாம்.

அதிகமான் என்னும் பெயர். சேர வேந்தரில் ஒரு கிளையினரைக் குறிப்பதாக ராவ்சாகிப் மு. இராகவையங் கார் அவர்களும் கொள்கின்றார்கள். ஆகவே, மேற்கூறிய ஊர் சேர பரம்பரையைச் சேர்ந்த அதிகமான் நெடுமானஞ் சியின் பெயராலோ, அன்றி அவன் வழிவந்த அதிகன் என்றஅரசன் பெயராலோஇவ்வூர் அமைந்திருக்கவேண்டு மென்றும், பின்னர் அது பாண்டியன் கையகப்பட்டிருக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கலாம். அறிஞர் **K. N.** சிவ ராஜபிள்ளை அவர்களும் அழகியபாண்டியபுரம், பொதிகை நாடு அல்லது ஆய்நாட்டைச் சேர்ந்த ஓர் ஊராயிருந்த தென்றும், ஆய்நாட்டின் தலைவன் அதிகனுயிருந்தானென் னும் கூறுவதோடு 'பாண்டியபுரம்' என்ற பெயரமைவுக்கு

---

**1. புறம்: பக்கம் 546.**

ஒரு காரணமும் கூறுகின்றார்கள். அஃதாவது, 'பசும்பூண் பாண்டியன் என்பவன் அதிகனைத் தோற்கடித்து ஆய் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். அந்நாளில், வென்ற நாட்டில் தம் உரிமையை நாட்ட அரசர்கள் ஊர் களுக்குத் தம் பெயரை இடுவது வழக்கம். அப்படியே பாண்டியனும் 'அழகியபாண்டியன்' என்ற தன் பெயரை அதிகன் ஊர் ஒன்றுக்கு இட்டான்.' பசும்பூண் பாண்டி யன் என்பதும் அழகிய பாண்டியன் என்பதும் ஒரு பொருளையே குறிக்கும். பிற்காலத்தார் இரு வேந்தர்களுக் கும் அவ்வூரோடுள்ள தொடர்பைப் புலப்படுத்துவதற்கு 'அதிகனூரான அழகியபாண்டியபுரம்' என்று அழைக்க லாயினர்[1] என்பதாம்.

இது மிக்க பழமையான ஓரூர் என்பது கல்வெட்டுக் களாலும் அறியப்படும். இவ்வூர்ப் பெயரைக் குறிப்பிடு கின்ற கொல்லம் 252 (கி. பி. 1077) ஆம் ஆண்டைய சாசனம் இருக்கின்றது. அழகியபாண்டியபுரத்தின் மேல் பாலிருக்கும் 'மேல்கரை'க் கோவிலில் அமைந்த சாசனம் அது.

"கொல்லம் தோன்றி யிருநூற்றைம்பத்திரண்டாமாண்டு நாஞ்சி நாட்டதியனூரான அழகியபாண்டியபுரத்து கண்ணன் தேவ னுன உத்தம பாண்டியச்சிலை செட்டி யென் இந்நகரத்............[2]"

எனக் கூறிச் செல்லும்.

கன்னியாகுமரிக் கோவிலில் பொறிக்கப்பட்டுள்ள பராந்தக பாண்டியன் சாசனமும் எல்லை கூறுமிடத்து இவ்வூரைக் குறிப்பிடுகின்றது. "வடவெல்லை நாஞ்சிநாட்டு அதியனூரும்" என வருவதைக் காணலாம். இதன்காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டாயிருக்க வேண்டு

1. The Chronology of the Early Tamils: Page 122; Foot note.
2. T. A. S. Vol. III P; 57.

மென்று ஊகிக்கப்படுகிறது. அதில்வரும் 'நாஞ்சில்நாட்டு அதியனூர்' என்னும் தொடரால் வேறு அதியனூரும் உண்டோ? என்னும் ஐயம் எழக்கூடும். ஆம்; 'தெங்க நாட்டு அதியனூ'ரும் உண்டு. அது தேங்காய்ப்பட்டணத் தின் பக்கத்திலுள்ள இடத்தைக் குறிப்பிடுவதாகும். பிற் காலப் பிரமாணங்களில் இத்தொடர் ஏராளமாக வந்துள்ளது.

மேற்கூறியவற்ருல் இன்றைய அழகியபாண்டிபுரம் ஒரு காலத்தில் 'அதியனூர்' என்று அழைக்கப்பட்டு வந்து, பின் 'அதியனூரான அழகியபாண்டியபுரம்' ஆகி, இப்போது 'அழகியபாண்டியபுரம்' ஆக வழங்கி வருகிறது என்று அறியலாம்.

இவ்வூர் பழமையானது என்பதோடு தலைமைச் சிறப் பும் உடையது என்பது அறியத்தக்கது. அரசர்களின பிரதிநிதிகளாய், நாஞ்சில் நாட்டார்க்குத் தலைமை பூண்டு விளங்கிவந்த முதலியார்கள் எனப்படுவோர் இவ்வூரிலே தான் வாழ்ந்து வந்தார்கள். நாஞ்சில் நாட்டாரிடம் தீர்வை வசூலிக்கும் அதிகாரமும், அவற்றை மன்னருக்குச் செலுத்தும் பொறுப்பும் இவர்களுடையவையா யிருந் திருக்கின்றன. அக்காலத்தில் நாஞ்சில் மக்கள் தீர்வை (கரம்) ஆக நெல்லே அளந்து வந்தனர். காலக்கேடு, படையெடுப்பு என்பவற்ருல் விளைவு குன்றிய காலங்க ளில் மக்களின் குறைபாட்டை யுணர்ந்த மன்னர் தீர்வை யில் குறைவு செய்து முதலியார்களுக்கு நீட்டு அனுப்புவ தும், அவர்கள் வடமீது தென்மீதியாகப் பாகுபட்ட நாஞ் சில் மக்களுக்கு ஓலை அனுப்புவதும் வழக்கம். இப்படிப் பட்ட நீட்டுக்களை அழகியபாண்டியபுரம் பெரிய முதலி யார் வீட்டில் ஏராளமாகப் பார்க்கலாம்.

இவர்கள் நாஞ்சில் மக்களிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார்கள். நாஞ்சில் நாட்டில் முக்கியமான விழா சுசீந்திரம் தேரோட்டம். அன்று நாஞ்சில் நாட்டுப் [1]படாகைக்காரர்கள் அனைவரும் வந்துதான் தேர்வடம் பிடிப்பார்கள். இதனை மக்கள் ஓர் உரிமையாகவும் பெருமையாகவும் கருதியிருந்த காலம் அது. இங்ஙனம் இவர்கள் வடம் பிடிப்பதற்குமுன் பெரிய வீட்டு முதலியார் வந்து வடம் தொட்டிழுக்க வேண்டும். அப்படியானால் தான் ஏனையோர் தொட்டிழுக்கலாம். இவ்வளவு தலைமை அவர்களுக்கு இருந்தது அக்காலத்தில். இதுமட்டுமா?

அரசரையும் அரசாங்கத்தையும் எதிர்த்துக்கூட ஆசிராமம், தெரிசரங்கோப்பு, பூதப்பாண்டி முதலான ஊர்களில் வைத்து முதலியார் தலைமையில் கூட்டங்கள் நடந்திருக்கின்றனவென்றால் அவர்களுக்கிருந்தசெல்வாக்குக்கு வேறென்ன சான்று வேண்டும்? இந்த தலைமையும் அவர்கள் குலத்தில் ஓரிரு தலைமுறையோடு நின்றுவிடவில்லை. கொல்லம் 448 முதல் 870 க்கு மேலும் உள்ள அரசாங்க சம்பந்தமான ஓலைகள் அவர்களிடம் காணப்படுவதால் சுமார் 450 ஆண்டுகளுக்குமேல் இவர்கள் தலைமை பெற்றுச் சிறந்தார்கள் என்று அறியலாம்.

பழங்குடி மக்களாய முதலியார்கள் 'சேரகோன்' 'வைசிரவணன்', 'வணிகராமன்' என மூன்று பிரிவினராயிருந்தனர். இக்குலப் பிரிவு புதுக்கோட்டைச் சமஸ்தானத்திலுள்ள ஒரு கல்வெட்டிலும் காணப்படுகின்றது.

---

1. படாகை என்பது நாட்டின் சிறு உட்பிரிவைக் குறிப்பிடும். 'படாகை வலம் செய்து' S. I. I. Vol; II; P. 352.

"இதில் **சேரகோனுர்** ட உ ல[1]"

"நகரத்து.........**வயிராவணர்**[2]"

"உதையப் பெருமாளான **வணிகராமர்**[3]"

இப்பெயர்கள் இங்குவரக் காரணமென்ன என்பது ஆராய்ச்சிக்குரியது.

இவர்களுள் வணிகராமன் என்ற பிரிவினர்க்குத் தான் 'பெரிய வீட்டு முதலியார்' என்னும் ஸ்தானப்பெயர் இருந்தது. பழைமையான ஓலைப் பிரமாணங்கள் இவர்கள் வீட்டிலேயே இருந்தன. அவற்றை நன்கு சோதித்து ஆராய்ச்சிப் புலமை சான்ற கவிமணி தேசிகவினாயகம் பிள்ளை அவர்கள் சிலவற்றைக் 'கேரளா ஸொஸைற்றி பேப்பேர்ஸ்' என்னும் பத்திரிகையில் பதிப்பித்திருக்கிறுர்கள்.[4] இதன் பிறகு திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழக ஆராய்ச்சித் துறையினர் சோதனையின் பொருட்டுச் சுமார் 400 ஓலைகளை விலை கொடுத்து வாங்கியுள்ளனர்.

முதலியார் பிரிவுகளுள் வைசிரவணன் குலம் இப்போது முட்டுற்றுப் போயிற்று. ஏனைய பிரிவுகளைச் சேர்ந்தோர் இன்னும் இருக்கின்றனர். இவர்களெல்லாம் ஆதியில் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்ததாகக் கூறிக் கொள்வர். இதனை உணர்த்த இப்போதும் தாம் எழுதும் பிரமாணங்களில் பெயரின் முன் 'நகரம்' என்ற அடைமொழியைச் சேர்த்து எழுதுவது வழக்கம். இப்பழங்குடி மக்களாலும், இவர்கள் வீட்டு ஓலைப் பிரமாணங்களா

1. Inscription of the Pudukkottai State; No. 835
2. Do. No. 487.
3. Do. No. 835.
4. Kerala Society Papers. Vol. II, The Mudaliar Manuscripts, P. 19-40

லும், இவ்வூரையடுத்த இடங்களிலுள்ள கல்வெட்டுக்களா லும் தோன்றுநாள் தொடங்கித் தமிழ் உயிர்ப்பே உயிர்த் தவர்கள் நாஞ்சில் நாட்டார் என்பது வெள்ளிடை மலை யென அறியப்படும்,

உ. **பூதப்பாண்டி:—** இஃது அழகியபாண்டியபுரத்தி னின்று ஏறக்குறைய மூன்று கல்லுக்குத் தெற்கே இருக் கிறது. பூதப்பாண்டியன் பெயரால் இவ்வூர் அமைந்தது என்பர். பழந்தமிழ் நூலான புறநானூற்றுள் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்னும் ஓர் பாண்டிய மன்னன் அறியப்படுகிறான். இவன் ஆய் நாட்டின் தலைவனான அதி கனைத் தோற்கடித்த பசும்பூண் பாண்டியனுடைய தந்தை யாவானென்றும், அவன் தன் பெயரால் அதிகனூர்க்கு அழகியபாண்டியபுரம் எனப் பெயர் அமைத்தாற்போல, அதன் அண்மையிலிருக்கும் இவ்வூர்க்குத் தன் தந்தை பெயரை அமைத்தானென்றும் கூறுவர் அறிஞர் சிவராஜ பிள்ளையவர்கள்.[1]

பூதப்பாண்டியன் தமிழ்ப் புலமை சான்றவன். அகப் பொருளும் புறப்பொருளும் அமைத்துப் பாடும் திறமை யுடையவன். பாலையென்னும் உரிப்பொருள் அமைய இவன் பாடிய அகப்பொருட் பாடலில் இளவேனிற்காலம் இயற்கை நலம் தோன்ற இனிமையாகக் கூறப்படுகின் றது[2]. அவ்வாற்றல் மிகவும் மெச்சத்தகுந்தது. அன்றியும் இவன் பெரு வீரன். செங்கோல் முறைமையினன். தன் மனையாளை ஒருவன் கைவிட்டு ஒழுகுவதைப் பெரும் பாதகமாகக் கருதும் அறவோன். உத்தம நண்பர்களோடு

---

1. **The Chronology of the Early Tamils: P. 122 Foot note.**
2. **அகம். 25.**

கூடி மகிழ்ந்து கூட்டுறவு கொள்வதை ஒரு பேருக மதிக்கும் சுவையுணர்வுடையவன். இவையெல்லாம் இவன் பாடிய 71 ஆம் புறப்பாட்டால் அறியப்படுகின்றன.

"சிங்கம்போல் சினந்து சில வேந்தர்கள் தம்முள்கூடி என்னேடு பொருவேம் எனக் கூறுகின்ருர்கள். அவர்களை அரிய போரில் அலறச்செய்து அவர் புறக்கொடுத்தோடும் ஓட்டத்தைக் காணுமற் போனேஞனல் நான் இன்னின்ன தீமைகளைச் செய்தேஞகவும், இன்னின்ன பேறுகளை இழந்தேஞகவும் ஆகக்கடவேன்" என்று வஞ்சினங் கூறுகின்ருன். "மையுண்ட கண்ணிணையுடைய இவளினும் (தன் மனைவியினும்) நீங்கி ஒழுகினேஞகவும், அறங்கூர் அவையத்தில் அறத்தின் திறப்பாடு அறியாத ஒருவனை வைத்து முறை கலங்கக் கொடுங்கோல் செய்தேஞகவும், மாவன், ஆந்தை, அந்துவன் சாத்தன், ஆதனழிசி, இயக்கன் முதலான என் கண்ணன்ன நண்பர்களின் கூட்டுறவை இழந்தேஞகவும், தென்னுடு காக்கும் சிறந்த பாண்டியர் குலத்தில் பிறப்பதை நீங்கிப் புன்னுடு காக்கும் பிறர் குடியிற் சென்று பிறப்பேஞகவும் ஆவேன்" என்று மேலும் கூறுகின்ற கூற்றுக்களால் அவன் எவற்றை அறமாகவும், எவற்றைப் பேருகவும் கருதியிருந்தான் என்பது நன்கு அறியப்படும். அதோடு மானமும் வீரமும் குன்றி வாழ்வது இவற்றிலும் கொடியது எனக் கொண்டிருந்த அவன் உயர்ச்சியும் இதனுல் தெரியப்படுகின்றது.

தன் இன்ப வாழ்க்கைக்குரிய இல்லறத் துணைவியோடு இவன் அன்பும் உரிமையும் பூண்டு ஒழுகினுற் போலவே, அவளும் இவன்பால் அளப்பரும் காதல் பூண்டு ஒழுகினுள். மட்டுமல்ல; தமிழ்ப் புலமை சான்ற தன் மன்னனுக்குத் தக்காளாய்த் தானும் தமிழ்த் துறை

யிலே முங்கித் திளைத்தவளாயுமிருந்தாள். மன்னவன் இறந்தபோது தீப்பாய்தலை விலக்கிய சான்றோரிடம் அவள் கூறிய கூற்று இதனை உணர்த்தும். "நீ உன் கணவனோடு போ என்று சொல்லாமல் விலக்குகின்ற பொல்லாத சான்றோர்களே! பிழிந்த பழஞ் சோற்றுடனே கீரையும் எள் துவையலும் கலந்து உண்டும், பாயில்லாமல் வறு நிலத்தில் படுத்தும் கைம்மை நோன்பு நோற்கிற பெண்ணினத்தைச் சேர்ந்தவளல்லேன் நான்; இந்த ஈமப் படுக்கை உங்களுக்கு அரியதாகலாம்; எனக்கு என் கணவனையுடைய இச்சிதையும் தாமரைப் பொய்கையும் ஒரு தன்மையுடையவையே[1]" என்று கூறித் தீப் பாய்கிருள். இவற்ருல் இவ்விருவர் அன்பு நிலையும் நன்கு அறிந்து கொள்ளப்படும். இத்தகைய பேரரசன் பெயரை இவ்வூர் பெற்றிருந்ததென்ருல் இது மிகப் பெருமையுடையது என்பதற்கு ஐயமில்லை.

இவ்வூருக்குப் பெயர் அமைந்த விதத்தைப் பற்றிக் கதையொன்றும் வழங்குகிறது. அஃதாவது- "ஒரு பாண்டியன் தன்க்குத் துணையாகப் பூதங்களை அழைத்துக் கொண்டு கேரளத்தில் புகுந்து பெருமாக்களோடு போர் செய்தான். கேரளத்தைத் தோற்றுவித்த பரசுராமர் அது கண்டு, தாம் அதனைப் பெருமாக்களுக்குத் தானம்செய்து விட்டபடியால் பாண்டியன் கவர்வது முறையல்லவென்று கருதி, அவனை யெதிர்த்துத் தோற்கடித்து, கிழக்கு நெருக்கிக் கொண்டுபோய் இப்பொழுதுள்ள பூதப்பாண்டியில் கொண்டு நிறுத்தினன். பூதங்களுக்குத் தலைவனுன பாண்டியன் தடுத்து நிறுத்தப்பட்ட இடமாதலால் அதற்குப் பூதப்பாண்டி யென்னும் பெயர் அமைந்தது[2] என்ப

1. புறம். 246.
2. State Manual by Nagamaiya Vol. I. P. 221-2.

தாம். இது பெயரை வைத்துக்கொண்டு புனைந்த ஒரு கட்டுக்கதையே தவிர வேறல்ல.

பாண்டியன் பூதங்களை ஏவல்கொண்ட செய்தி இலக்கியங்களில் பரக்கக் காணப்படுகின்றது. அவற்றுள் இராசராச சோழனுலாத் தொடரும் அதன் உரையும் இங்குக் கவனிக்கத்தக்கன.

**"பணிகொண்ட பூதம் படை நான்கும் பற்றப்**
**பணிகொண்ட பௌவம் பரக்க - பணிகொண்ட (245)**

மேற்கோள்-பணிகொண்ட-ஏவலைக்கொண்ட.பாண்டியர் ஒரு பூதத்தை ஏவல் கொண்டது. "பூதம் பணி கொண்ட பூழியன் மாறன்"-(பாண்டிக்கோவை) "தடம் பூதம் பணி கொண்டு"-(சின்னமனூர்ச் சாசனம்) "பூதம் பணிகொண்டாய்" "பிணிகொண்ட காரையு முந்நீரையும் பெரும் பூதத்தையும், பணிகொண்ட சேண்பகத்தென்னு பராக்ரம பாண்டியனே" -(பெருந்தொகை 913, 943)" என்பன.

இன்னும், 'பாண்டியன் பூதம் (பரிசுத்தம்) அடைந்த இடமாதலால் பூதப்பாண்டியாயிற்று' என்று சொற்பொருள் விரித்து வடமொழிப் புலமை காட்டுகின்ற பண்டிதர்களும் இல்லாமலில்லை. அவர்களெல்லாம் பாண்டியன் தொடர்பை இந்நகருக்குக் கொடுப்பதில் மட்டும் தவருமலிருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

இவ்வூர்ச் சுவாமியின் பெயர் 'பூதலிங்கம்' என்பதாகும். பரிசுத்தமான லிங்கம் என்னும் பொருளில் அப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். அன்றி, பூதப்பாண்டியனுல் தாபிக்கப்பட்டு பூதலிங்கம் என்ற பெயரைப் பெற்றிருக்கவும் செய்யலாம். எவ்வாறு இப்பெயர் அமைந்த

தென்று திட்டமாகத் தெரியவில்லை. சுவாமியிருக்குமிடம் மலைவிடரைத் திருத்தியமைத்த ஓர் குகையாகும். பழைமையான சாசனங்களேதுவும் இங்கு இருப்பதாகக் காணோம். ஆனால் கொல்லம் 754-ல் ஏற்பட்ட தமிழ்க் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. அது உதயமார்த்தாண்டன் பெருந்தெருவுக்கும் அஞ்சினான் புகலிடமான பூதலராமன் பெருந்தெருவுக்கும் நடுவில் உள்ளது. இவ்விரு தெருக்களும் முறையே கொல்லம் 654, 665-ல் ஆண்டவர்களான வென்றுமண் கொண்ட பூதலவீர ராமவர்மர், வென்று மண் கொண்ட பூதலவீர மார்த்தாண்டவர்மர் என்னும் அரசர்களின் பெயரால் ஏற்பட்டவை[1] யென்பர்.

௯. **ஆரல்வாய்மொழி-** இது மேற்குத் தொடர்ச்சி மலையின் தென்கோடியிலுள்ள கணவாயைச் சார்ந்த ஊர். பாண்டிய நாட்டினின்று திருவிதாங்கூருக்குள் புகுவதற்கு ஒரு கோபுரவாயிலாக அமைந்திருப்பது ஆரல்வாய்மொழிக் கணவாய். கிழக்கு நின்றும் அதி விரைவாய் மோட்டாரில் வருகின்றவர்கள் சடக்கென இங்கே தடுத்து நிறுத்தப்படுவார்கள். 'இது என்ன கஷ்டம்' என்று முணுமுணுத்துக் கொண்டு மெல்ல நிமிர்ந்து பார்த்தால் தங்கள் முணுமுணுப்பு மேலே பிரதிபலிப்பதைக் காண்பார்கள். கொட்டை யெழுத்தில் எதிரே 'கஸ்டம்ஸ்' என்றெழுதப்பட்டிருக்கும்.* ஐயயோ! ஜம்மென்று வந்த சுகத்தைக்கெடுத்த இந்த ஒரு கஷ்டத்தோடு நிற்கவில்லையா? கஸ்டம்ஸ் என்றெழுதப்பட்டிருப்பதைப் பார்த்தால் இன்னும் பல கஷ்டங்கள் அனுபவிக்க வேண்டும் போலிருக்கிறதே' என்றெண்ணித் திகைத்துக்கொண்டிருக்கும்போதே அவர்கள்

---

1. T. A. S. Vol. VII. P. 81.

* இந்தக் கஷ்டங்கள் (Costoms) 1949 ஆவணி 31 ஆம் தேதியோடு ஒரளவு ஒழிந்தன.

வண்டியிலிருந்து இறக்கப்பட்டு, படுக்கை முதல் உடுக்கை வரை யாவும் பரிசோதிக்கப்படுவார்கள். இதற்குச் சரியான பெயர்தான் கொடுக்கப்பட்டிருக்கிறதென்பது அப்போது தெரியும் அவர்களுக்கு.

இதற்கிடையில் இன்னொரு பக்கம் எழுதப்பட்டிருக்கும் பலகையை பார்த்துவிட்டாலோ எந்த ஹோட்டல் முதலாளிக்கும் பிரமை தட்டிப்போகும். 'நாம் எப்படிப் பட்ட போளிகளெல்லாமோ செய்வித்திருக்கிறோம்; இந்த 'ஆரும்போளி'யைப்பற்றிக் கேட்டதேயில்லையே, என்று திகைத்துவிடுவார். அவர் கண்டாரா இதன் உண்மையை? இந்தப்போளி இந்நாட்டுக்காரரால் செய்யப்பட்டதல்ல; ஆங்கிலேயரால் செய்யப்பட்டதென்று. 'ஆரல்வாய்வழி' என்ற பொருள் போதிந்த பெயர்தான் இப்படி 'ஆரும் போளி' என்ற பொருளற்ற பெயராயிற்று என்பதை யாரேனும் சொன்னாலன்றி அவர் எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? ஊர்ப் பெயர்களை நாக்கு வளைக்காமல் உச்சரிப்பதற்கேற்றபடி உருத் தெரியாமல் திரிக்கும் உரிமை ஆங்கிலேயருக்குத் தனிப்பட அமைந்ததல்லவா? அவர்கள்பாடு இருக்கட்டும். நம்மவர்கள்தான் என்ன! மோசமானவர்களா? ஆருவாமொழி என்றும், ஆரவாய் மொழி என்றும் ஆளுகிறார்களே! இது சரியா? ஒருபோதும் இல்லை. இதன் உண்மைப் பெயர் ஆராயத் தகுந்தது.

மேற்கூறப்பட்ட பெயர்கள் 'ஆரவாய்வழி' அல்லது 'ஆரைவாய்வழி' என்பவற்றின் திரிபாயிருக்கக் கூடும் என்று ஊகிக்கலாம். 'ஆரல்' என்றால் மதில் என்று பொருள். 'ஆரை' என்னும் சொல்லுக்கும் அப்பொருள் உண்டு. ஒரு கோட்டையைப்போல் மூன்று புறமும் சூழ்ந்த பொதிய மலைத் தொடரின்கண் அமைந்த இந்த

வழிக்கு **ஆரல்வாய்வழி** அல்லது **ஆரைவாய்வழி** எனப்பெயர் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று யூகிப்பது நியாயமல்லவா?

இது தவிர, இவ்விடம் மலையிடைப்பட்ட கணவாயாக இருப்பதால், கணவாய் என்னும் பொருளைத் தருகிற 'அறைவாய்' என்னும் சொல் இவ்வாறு திரிந்ததோ என்றும் சந்தேகிக்க இடமிருக்கிறது. 'அறை' அல்லது 'அறைவாய்' என்னும் சொற்கள் அப்பொருளவாதலைக் கீழ் வருபவற்றால் அறியலாம்.

[1]'**விண்ணுற ஓங்கிய பனியிருங் குன்றத்து**
**ஒண்கதிர்த் திகிரி உருளிய குறைத்த**
**அறை**............ ....................................என்பது

முன்னதற்கு உதாரணம்.

[2]**உலக இடைகழி அறைவாய் நிலைஇய**
**மலர்வாய் மண்டிலம்**......................என்பது பின்னதற்குக்காட்டு. ஆகவே, '**அறைவாய்வழி**' என்னும் தொடர் அரவாய்வழி, ஆரவாய்வழி, ஆரவாய்மொழி எனத்திரிந்திருக்கலாம். இது சற்றுப் பொருத்தமாகவும் தோன்றுகின்றது.

இனி, ஊகிக்கப்படுகின்ற ஆரல்வாய்வழி, ஆரைவாய்வழி, அறைவாய்வழி என்னும் மூன்று தொடர்களிலுமே 'வழி' என்பது 'மொழி' என்றாயிற்று எனக்கொள்ள வேண்டியிருக்கிறதே! அஃது எவ்வாறு பொருந்தும் எனக் கேட்கலாம். 'வழி'யை ஏன் சொல்ல வேண்டும். 'பொழில்'

---

1. அகநானூறு 281. 2. புறநானூறு 175.

என்ற சொல்லே இன்று 'மொழி'யாகச் சிதைந்து வழங்குகிறதே! ஈத்தம்பொழில் என்ற ஊர்ப் பெயர் ஈத்தாமொழி என்று அழைக்கப்படவில்லையா? மொழி என்னும் சொல்லோடு யாதோர் இயைபுமில்லாமலிருக்க 'இட்டமொழி,' 'ஊருமொழி' முதலியனவாக வழங்கி வருவதையும் பார்க்கிறோமே. ஆதலால் இச் சிதைவில் ஐயுறுவதற்கில்லை.

இவற்றைத் தவிர இவ்வூருக்கு வேறொரு பெயர்க் காரணமும் கூறப்படுகிறது. கி. பி. 1307-ல்[1] அல்லாவுதீனுடைய படைத் தலைவனான மாலிக்காபர் மதுரையைக் கைப்பற்ற வந்த காலத்தில் அங்குள்ளவர்கள் தங்கத்தாலான மீனாட்சி சுந்தரர் விக்கிரகங்களை எடுத்துக்கொண்டு வந்து நாஞ்சில் நாட்டுக் கிலுகிலுப்பைக் காட்டில் ஒளித்து வைத்ததாகவும், பகையச்சம் நீங்கிய பின்னர் அவற்றை எடுத்துச் சென்றதாகவும் மதுரைத் தல வரலாறு கூறுகின்றது. அது கிலுகிலுப்பைக்காடு என்று கூறியது நாஞ்சில் நாட்டிலுள்ள எந்த இடத்தை யென்பது சிந்திக்கத் தக்கது. சிந்திக்கு மிடத்து அது ஆரல்வாய் மொழியாக இருக்கலாமோ என்று சந்தேகிப்பதற்கான சில காரணங்கள் இருக்கின்றன.

அது பாண்டிய நாட்டின் முன்னடியில் இருப்பது முதலாவது காரணம். மதுரையார், தம் நாட்டைத் தொட்டு இருக்கும் வேற்று நாட்டுப் பகுதியான இதனை, மறைவுக்கு ஏற்ற இடமாகத் தெரிந்தெடுத்திருத்தல் கூடியதே. இரண்டாவது, ஆரல்வாய்மொழியிலிருக்கும் மீனாட்சி சுந்தரர் ஆலயத்தின் அமைப்பு. இது இன்று

1. **A. S. S. Indian Vol II ல் 1131 என்று சொல்லியிருப்பதாக அபிதான சிந்தாமணி சொல்கிறது.**

'மீனுட்சி சுந்தரர் கோவில்' என்று அழைக்கப்படுகிறதா யினும் அது சாஸ்தாவுக்குரிய கோவிலாகும். கோவிலில் முக்கிய தெய்வம் சாஸ்தாதான். சாஸ்தாவின் முன்னிலை யில்தான் கொடிமரம் நிற்கிறது. சாஸ்தாவுக்குத்தான் விழா நடைபெறுகின்றது. அது பங்குனி உத்திரத்தன்று 'நம்பிரான் விழா' என்னும் பெயரால் சிறப்பாக நடை பெறும்.அதுவே அவ்வூருக்குப் பெரிய திருவிழா.இவற்றை யெல்லாம் பார்க்கும்போது மீனுட்சி சுந்தரர்கள் ஒட்டுக் குடியிருப்புக்கு வந்தவர்களோஎன்றுநினைக்கத்தோன்றும்.

அவர்கள் வந்தது உண்மை யென்ருலும் பிறகு தம் மூருக்குப்போய்விட்டார்களல்லவா?இங்கே அவர்களுக்கு ஆலயம் எப்படி அமைந்தது என்று கேட்கலாம். ஆம். தெய்வங்கள் இருந்து சென்ற இடத்தில் அவர்கள் இருந்த தற்கு அறிகுறியாக விக்கிரகங்கள் அமைத்து வழிபடுவது இயல்புதானே!அம்முறைப்படியே இங்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். இத்தெய்வங்களுக்குரிய சிறப்புக்களேல்லாம் மதுரையில் போலவே இன்றும் நடைபெறுகின்றன. மூன் ருவது, ஆரல்வாய்மொழியிலிருப்பதைத் தவிர மீனுட்சி சுந்தரர் கோவில் நாஞ்சில்நாட்டில் வேறெங்குமே இல்லா திருப்பது.விக்கிரகங்கள் வேறு எங்கேனும் வைக்கப்பட்டி ருக்குமானுல் நிச்சயமாக அங்கே மீனுட்சிசுந்தரர் கோவில் ஒன்று தோன்றியிருக்கும்.ஒன்றுமில்லாத இடங்களிளெல் லாம் வேண்டாத காரணங்களைக் கற்பித்துக்கொண்டு கோவில் கட்டிச் சுவாமிகளைக் குடியேற்றி வழிபடுகின்ற நம்மவர்கள் மதுரைச் சுந்தரப்பெருமான் அடைக்கலம் புகுந்த இடம் ஒன்று இருந்திருக்குமானுல் அதை எளிதில் விடுவார்களா?ஆகவே வேறெங்கும் இல்லாமல் தன்னிடத் தில் மட்டும் மீனுட்சி சுந்தரர் ஆலயத்தைக் கொண்ட

ஆரல்வாய்மொழியையே 'நாஞ்சில் நாட்டுக் கிலுகிலுப்பைக் காடு' என அவர்கள் குறிப்பிட்டார்கள் என்று ஊகிக்கலாம். ஆபத்துக்கு அஞ்சி ஓடி வந்த கூடற்பெருமானுக்கும் தேவிக்கும் அபயமளித்து உதவிய பெருமை இந்நகர்க்கு ஓர் தனிப் பெருமையாகிவிட்டது. இதனை எடுத்துக் காட்டிச் சிறப்பிக்கும் கவிமணி பாடலைக் கீழே காண்க:-

**அங்கயற் கண்ணிக்கும் அண்ணலுக்கும் ஆபத்தில்**
**தங்குமிடம் ஈந்த தனியூராம் - பொங்குபுகழ்**
**ஆரையூர்க் கிடாய் அவனியில் மீதெந்த**
**ஊரையான் சொல்வேன் உணர்ந்து"**

'சரி; இந்தக் கதையெல்லாம் எதற்கு' என்று கேட்கக்கூடும். எதற்கா? இந்த ஊருக்கு இன்னொரு பெயர் கொடுப்பதற்குத்தான். ஆலவாய்ச் சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருந்த இடமல்லவா இது? ஆகவே **ஆலவாய்** என்ற பெயர் இதற்கும் அமைந்தது என்று சிலர் சொன்னால் அதை மட்டும் தள்ளிவிட முடியுமா என்ன! அவர்கள் தம் கூற்றுக்குப் பின் பலமாக ஒரு பழம் பாடலையும் காட்டுகின்றார்கள். அது வருமாறு:-

**'ஆலவாய்ச் சோம சுந்தரக் கடவுள்**
**அம்மைமீ னாட்சியொ டெழுந்து**
**சோலைசேர் பொதிகைச் சாரலின் தென்பால்**
**தோன்றிவீற் றிருந்தலி னாலே**
**ஆலவாய்ப் பதியென் றிப்பதி தனக்கும்**
**அமைந்தது பண்டைநாள் பெயரே'** [1]

இப்படி இவ்வூர்ப் பெயர் பலவிதமாகப் பொருள் கொள்ளநிற்பினும் கல்வெட்டுக்களிலும் ஓலைப்பிரமாணங்

---

1. **இது முக்கால் விருத்தம். இதற்கு ஒரு கால் இல்லை.**

களிலும் **ஆரைவாய்மொழி** என்றே கூறப்பட்டிருக்கிறது. கொல்லம் 872-ல் எழுந்த கல்வெட்டில் 'நாஞ்சி நாட்டு ஆரைவாய்மொழியில்[1] என்னும் தொடர் காணப்படும்.

ஊரின் கிழக்கே இருக்கும் கணவாயில் போக்குவரவுப் பொருட்களைச் சோதித்துத் தீர்வை வசூலிப்பதற்குரிய சுங்கச்சாவடி அமைந்திருக்கிறது. இதனைத் தொட்டு வடக்கும் தெற்கும் நெடுவிதாய் வளைந்து வளைந்து செல்லும் இயற்கையரணாய மலைக்கோட்டையொன்றும், அம்மலைத்தொடரை அடுத்தும் அகன்றும் அதன்மீதேறியும் செவ்விதாய்ச் செல்கின்ற செயற்கைக் கோட்டை ஒன்றும் உள்ளன. இக்கோட்டை தெற்கே கடல் முதல் வடக்கே கடுக்கரை (கடுக்கையறை) வரையும் செல்கின்றது. ஒரு காலத்தில் கட்டுங்காவலுமுடையதாய்ப் படைகளும் தலைவர்களும் தங்குவதற்கேற்றதாய், வாயில் புழை ஞாயில் என்பவற்றோடு சிறந்து விளங்கிய இக்கோட்டை இன்று இடிந்து நொறுங்கி, உடையும் வேலும் நிறைந்த ஒரு முள் கோட்டையாகக் காட்சியளிக்கிறது. எனினும் இது தன் காவற்றொழிலைக் கைவிடவில்லை. 'கோட்டைக்கரை' என்பது இதற்கு இப்போது வழங்கும் பெயர்.

சில ஆண்டுகளுக்கு முன்னால் இதன் பக்கத்திலிருந்து ஒரு சிலாசாசனம் கண்டெடுத்தார்கள். எடுத்தவர் திருவனந்தபுரம் சாசன பரிசோதனை இலாகாவில் கௌரவ காரியதரிசியாக இருந்து சேவை புரிந்துவந்த ராவ்பகதூர் சுந்தரம்பிள்ளை அவர்களாவர். அது வட்டெழுத்தில் பொறிக்கப்பட்ட சாசனம். மாறன் சடையன் காலத்தது. அஃதாவது, கி. பி. எட்டாம் நூற்றாண்டிலுள்ளது.

---

1. T. A. S. Vol. VI. P. 98.

திருவனந்தபுரம் காட்சிசாலையில் கொண்டுவைக்கப்பட்டிருந்த இது, இப்போது பத்மநாபபுரம் பழைமைப் பொருட் காட்சி சாலைக்கு மாற்றப்பட்டிருக்கிறது. அதில் பொறிக்கப்பட்டுள்ள விவரம் வருமாறு:-

1. ஸ்ரீ கோமாறஞ் சடையற்கி
2. ருபத்தேழா மாண்டு சேரமா
3. ஞர்படை விழுஞுத்து புறத்து
4. விட்டுழக்கக் **கரக்கோட்டை** அழி
5. ப்பான் வர பெருமானடிகளுள
6. ன்புமிக்கூள இரணகீர்த்தியு
7. ம் அமர்க்கழியும் உள்வீ
8. ட்டி ஞெற்றைச் சேவகர் கோட்
9. டை அழியாமை காத்தெறி
10. ந்து பலரும் பட்டஇ
11. டத்து இரணகீர்த்தி உள்
12. வீட்டுச் சேவகன் கொழுவூ
13. ர் கூற்றத்துப் பெருமூர்
14. த்தாதம் பெருந்திணை அ
15. த்திரத்தாற் பலரோடுங்
16. குத்திப்பட்டான் இரு
17. பது -கமாளி.........*

இது, சேரன்படை கோட்டையை அழிக்க வர, பாண்டியனுடைய படைவீரனை இரணகீர்த்தி என்பான் பலரையும் கொன்று இறுதியில் தாதம் பெருந்திணை என்பவனுடைய அம்பு பட்டு இறந்ததற்காக நடப்பட்ட வீரக்கல். இதனை இரணகீர்த்தி வீரக்கல் என்று சொல்லலாம். இதில் குறிக்கப்பட்டிருக்கும்கரைக்கோட்டைஎன்பதுஇப்போதுள்ள கோட்டைக் கரையாயிருக்கும் என்று சிலர் கருதுகின்றனர். போரில் வீரச்செயல் காட்டி வீர

---

* T. A. S. Vol. I P. 158.

ஞெருவன் இறந்துவிட்டால் அவன் வீழ்ந்த் இடத்திலே கல் நடுவதுதான் அக்கால வழக்கம். இக்கல் இந்த இடத்தில் காணப்படுவதும், அதில் 'கரைக்கோட்டை' என்னும் தொடர் வருவதுமே அவர்களை மேற்கூறியவாறு கருதச் செய்கின்றன.

ஆனல் 'விழுஞத்துப் புறத்துக் கரைக்கோட்டை என வந்துள்ளதே! விழிஞத்துக்கும் இதற்கும் வெகு தொலையல்லவா? என்று கேட்கலாம். உண்மைதான். "கல்வெட்டில் 'விழுஞத்து' என்னும் சொல் சந்தேகிக்கக் கூடியதாகவே இருக்கிறது. அவ்விடம் தேய்ந்து மாய்ந்து தெளிவற்றிருப்பது மட்டுமல்ல; அத்தனை எழுத்துக்களுக்குரிய இட அகலமும் அதில் இல்லை" என்று கவிமணியவர்கள் சொல்கின்றார்கள். இதனை எப்படியோ ஊதித்துப் பதிப்பித்திருக்கிறார்களே தவிர வேறல்ல. ஆகவே, கரைக் கோட்டை என்பது இன்றைய கோட்டைக்கரையாயிருந்து அதனோடு இக்கல் சம்பந்தப்பட்டிருக்குமானல் இக்கோட்டையும் ஊரும் மிக்க தொன்மையும் பெருமையும் உடையவை என்பதை எடுத்துச் சொல்லத் தேவையில்லை. இது தவிர இவ்வூரிலுள்ள பழைமையான கல்வெட்டு என்று சொல்லத் தகுந்தது கொல்லம் 872-ல் உள்ள அகலிகை ஊற்றுக் கல்வெட்டுத்தான். நிற்க.

அடிக்கடி இந்நாட்டின்மீது படையெடுத்து வந்த சோழ பாண்டிய நாயக்க வேந்தர்களால் பெருந்தொல்லைகள் அனுபவித்தவர்கள் இவ்வூரார்கள். ஏன்? தலைவாசலில் இருப்பவர்களல்லவா அவர்கள்? கொல்லம் 810-ல் திருமலைநாயக்கரின் பிரதிநிதியான இராமப்பய்யன் பெரும் படையுடன் வந்து இவ்வூரிலும் நாஞ்சில் நாட்டின் பல

விடங்களிலும் அழிவுகள் செய்தான். அப்போதுதான் கணியாகுளம் போர் நடந்தது. அது இரவிக்குட்டிப் பிள்ளைப் போர் என்றும் சொல்லப்படும். நாயக்கர் படையெடுப்புப் போன்ற பலப்பல படையெடுப்புக்களாலும் அழிவுகளாலும் சிறிதும் நிலைகலங்காத வீரத் தமிழர்களைக் கொண்டது இவ்வூர் என்றால் அது ஒரு சிறிதும் மிகையாகாது.

இதுகாறும் கூறப்பட்ட மூன்று ஊர்களும் இன்றைய தோவாளைத் தாலுகாவில் உள்ளவை. இனிக் கூறப்படும் மூன்று ஊர்களும் அகஸ்தீசுவரம் தாலுகாவில் உள்ளன.

௪. **கோட்டாறு-** இங்கே கோட்டாறு என்று குறிப்பிட்டது நாஞ்சில் நாட்டின் தலைநகர்போல் இன்று விளங்கிக்கொண்டிருக்கும் நாகர்கோவிலையாகும். இதற்கு இதுவா பெயர் என்ற ஐயம் தோன்றலாம். ஆம்; நகர் முழுமைக்கும் கோட்டாறு என்ற பெயர்தான் பண்டை நாளில் வழங்கி வந்தது. அதன் ஒரு பகுதியே நாகர்கோவில்.

*"கோட்டாறுன மும்முடி சோழபுரத்து நாகர்கோவில்" எனக் கல்வெட்டில் வரும் தொடரே இதனைக் காட்டும். கோட்டாறு என்பது ஆற்றினால் பெற்ற பெயர். பழையாறு என்றழைக்கப்பெறும் கோட்டாற்றின் கரையில் இருப்பதால் இப்பெயர் பெற்றது; வாட்டாற்றின் கரையிலிருக்கும் ஊர் வாட்டாறு எனப்பட்டது போல.

இது மிக்க பெருமையும் பழைமையும் வாய்ந்த ஒரு நகரம். அந்நாள் வாணிபத்துறையில் சிறந்து விளங்கினமையால் பிளினி, தாலமி என்பவர்களாலும் அறியப்பட்ட

---

* T. A. S. Vol. VI. P. 163.

ஒன்றுயிருந்தது. மட்டுமல்ல; சில புலவர்களைத் தோற்று வித்த புகழையும் உடையது இவ்வூர். கி. பி. எட்டாம் நூற்றுண்டையொட்டி தஞ்சைப் பக்கங்களை முத்தரையர் என்னும் மரபினர் ஆண்டு வந்தனர். இம்மரபு நாலடி யாரில் சைனப் புலவர்களால் பாடப்பட்ட பெருமையுடை யதாகும். இம்முத்தரையர் குலத்தில் தோன்றிய மன்னன் ஒருவன் பெரும்பிடுகு முத்தரையன் எனப்படுபவன். இவனை நான்கு புலவர்கள் பாடியுள்ளனர். அப்பாடல்கள் திருச்சிராப்பள்ளியை யடுத்த செந்தலை என வழங்கும் சந்திரைலேகைச் சதுர்வேதமங்கலம் என்ற ஊரிலுள்ள சிவன்கோவில் சாசனத்தில் காணப்படுகின்றன.* புலவர் நால்வருள் கோட்டாற்று இளம்பெருமானுர் என்பவரும் ஒருவர். இவர் பாடிய பாடல் சிதைந்தே காணப்படுகின் றது. அது வருமாறு:-

**"சேட்டினர் பூந்தண் பொழிற்செம்பொன் மாரிக் கடியரணம்**
**முட்டின சீற்றமுன் சென்றது பின்பு பகட்டினத்தோர்**
**கெ .. [மர்] மாறன்க [டி]...................க்க"**

இதனுல் ஒரு காலத்தில் நாஞ்சில் நாட்டுக் கோட் டாற்றுப் புலமை சோணுட்டிலும் மலர்ந்து கமழ்ந்தமை அறியப்படும்.

பழைய இலக்கியங்களில் இவ்வூரைப்பற்றிய பேச் சுக்கள் முகுதியும் வந்துள்ளன. எட்டாம் நூற்றுண்டில் ஆண்ட பாண்டியன் நெடுமாறன் என்பான்படையெடுத்து வந்து இங்கு நிகழ்ந்த போரில் எதிர்த்த அரசர்களை வென்று இதனைக் கைப்பற்றினுன் என்பதை அவன்மீது

---

* **செந்தமிழ். தொகுதி 6. பக் 6-12.**

இயற்றப்பட்ட பாண்டிக் கோவையினுல் அறிகின்ரேம். அதில் அம்மன்னனைக் குறிப்பிடுகின்றபோது,

[1]'**தூவுண்டை வண்டினங் காள்வம்மின் சொல்லுமின் துள்ளிநில்லாக் கோவுண்டை கோட்டாற் றறிவித்தகோன்'** -என்றும்,

[2]'**குருமா நெடுமதிற் கோட்டாற் றரண்கொண்ட தென்னன்கன்னிப் பெருமான்'** என்றும்

மற்றும் அவன் கோட்டாறு வென்ற செய்தியைப் பல விடங்களிலும் சொல்வதைப் பரக்கக் காணலாம்.

இதன் பின் கி. பி. 10, 11 ஆம் நூற்ருண்டுகளில் ஆண்ட முதல் ராஜ ராஜ சோழன் இந்நாட்டின்மீது படையெடுத்து வந்து கோட்டாறு முதலிய இடங்களைக் கைப் பற்றிக் கோட்டாற்றுக்குத் தன் பெயரையும் சூட்டினுன். அதுமுதல் 'கோட்டாருன் மும்முடி சோழபுரம்' என்பது அதற்குப் பெயராய் அமைந்தது.

இராஜ ராஜ தேவனின் மகனுன இராஜேந்திர சோழ தேவன் கி. பி. 1012-ல் முடிசூட்டப்பெற்ருன். இவன் ஆட்சியிலும் இவ்வூர் இருந்ததாய்த் தெரிகிறது. இன்றைய நாகர்கோவிலின் ஒரு பகுதியாய [3]ஒழுகினசேரியின் அண்மையிலிருக்கும் ஒரு பகுதிக்குச் 'சோழபுரம்' என்று பெயர். தோவாளைத் தாலுகாவிலும் வேருெரு சோழபுரம் உண்டு. இவை இச்சோழ வேந்தர்களின் ஆட்சிக் காலத்

---

1. **இறையனூர் அகப்பொருளுரை மேற்கோள் பாட்டு 5. தூ உண்டை** - தூய சிறகு. **கோவுண்டை** - அரசர்களின் படை வகுப்பு அல்லது கூட்டம்.

2. ஷெ ஷெ - 36

3. உலகமுழுதுடையாள் சேரி என்பது ஒழுகினசேரியாயிற்று என்பர்.

தில் ஏற்பட்டஊர்களாய் இருக்கவேண்டும். நாகர்கோவில் சோழபுரத்திலுள்ள பழைமையான கோவில் 'இராஜேந்திர சோழீசுவரம்' என்றழைக்கப்பெறும். காரணம் இராஜேந்திர சோழ தேவன் பெயரால் அமைந்ததுதான். அங்கே பழைமையான கல்வெட்டுக்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று தருதும்:-

1. [1]ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடைய பன்மரான ஸ்ரீ சுந்தர சோழ பாண்டிய தேவர்க்கு யாண்டு ௰௪ 'ஆவது ராஜராஜ பாண்டிநாட்டு உத்தம சோழவளநா

2. ட்டு நாஞ்சிநாட்டு திருக்கோட்டாறுன மும்முடி சோழ நல்லூர் மகாதேவர் ராஜேந்திர சோழ ஈசுவரமுடையார்க்கு உடையார் பொருந்தனத்து

3. தேவன் விச்சாதிரநான சோழ மாராயன் வைத்த நுந்தா விளக்கு ஒன்றும் விளக்கொன்றுக்கும் சாவாமூவாப் பேராடு ஐம்பது

4. ங் கொண்டு நிசத முழக்கு நெல் முட்டாமல் அட்டுவ தானேன் இடைத்தலைவன் சாத்தன் தூயக்கோன் இன்னிவந்தம் இவன் முட்டிவீடில் இவனுக்கு

5. ப் புணைப்பட்ட சாத்தன் சுந்தரனேன் செலுத்துவதா னேன் இன்னும் இச் சோழமாராயன் வைத்த நோந்தாவிளக் கொன்றுக்கும் வைத்

6. த சாவாமூவாப் பேராடு ஐம்பதுங்கொண்டு நிசத முழக்கு நெய் நிவந்தஞ் செலுத்துவதானேன் இடைத் தலைவன் சாத்தன் சுந்தரனேன்

7. இவன் இன்னிவந்தஞ் செலுத்துவதற்குப் புணைப் பட்டேன் பட்டகை சாத்தனேன்......

இது சுந்தரசோழபாண்டியன் காலத்துச் சாசனம். கி. பி. 11 ஆம் நூற்றுண்டில் ஏற்பட்டது.

---

1. T. A. S. Vol. VI. P. 9.

இராஜேந்திரசோழ தேவனுக்குப் பின் வந்தவன் அவன் மகனான இராஜாதிராஜன். இவன் ஆட்சியில் மட்டு மல்ல; கி. பி. 1070-1118 வரை செங்கோல் செலுத்திய முதற் குலோத்துங்கசோழன் ஆட்சியிலும் இஃது இருந்தி ருக்கிறது. அவன் வரலாற்றால் இஃது அறியப்படும். அது வருமாறு;-

"வடநாடுகள் தன் வசப்பட்டதும் தென்னாடுகளை வெல்ல முயன்றான். பாண்டியர்கள் முதலில் தாக்கப் பட்டார்கள். அப்பொழுது ஒரு பாண்டியன் சண்டையில் இறந்தான். இச்சண்டையில் மன்னார்குடாக் கடலைச் சார்ந்த நாடும், பொதியமலையைச் சார்ந்த கூற்றமும், கன்னியாகுமரியும், **கோட்டாறும்** இவனதாயின.*"

இதுவன்றி,

**'முள்ளாறும் கல்லாறும் தென்னர் ஓட**
**முன்னொருநாள் வாளபயன் முனிந்த போரில்**
**வெள்ளாறும் கோட்டாறும் புகையால் மூட**
**வெந்தவனம் இந்தவனம் ஒக்கில் ஒக்கும்'** -(95)

என்னும் கலிங்கத்துப் பரணித் தாழிசையும் இதனை வலியுறுத்தும். ஆனால் மேற்கூறப்பட்ட சோழபாண்டியர் பலரும் போர்புரிந்தே இதனைக்கைப்பற்ற வேண்டியதாயி ருந்தது எனத் தெரிகிறது. அது சேரனோடா? அன்றிச் சோழபாண்டியர் தமக்குள்ளா? அல்லது வேறு குறுநில மன்னர்களோடா? என்பது அறியக்கூடவில்லை. கி. பி. 15 ஆம் நூற்றாண்டிலெல்லாம் இவ்வூர் கேரள வேந்தன் கைக்கு மாறியிருக்க வேண்டும். கொல்லம் 660-ல்

---

***சோழவம்ச சரித்திரச் சுருக்கம் by கோபிநாதராவ்: பக்கம் 31**

அதாவது கி. பி. 1485-ல் உள்ள அழகியபாண்டியபுரம் முதலியார் வீட்டு ஓலை இவ்வூரைக் 'கோட்டாறுன சோழ கேரளபுரம்' எனக் குறிப்பிடுவதால் இஃது அறியப்படும். ஆயினும் செந்தமிழ்ச் சோழவேந்தர்களுக்கு இந்நாட்டிலிருந்த உரிமையை, ஓங்கி உயர்ந்த தெய்வத் திருக்கோயில்கள் காட்டி நிற்கின்றன; மன்னுயிர்கள் வாழும் வளம் பொருந்திய ஊர்கள் காட்டி நிற்கின்றன; மட்டுமல்ல: அது கால வெள்ளத்தால் மாய்ந்துபோகாது திண்ணிதாய் நிற்கும் என்பதைக் கல்லணையும் காட்டி நிற்கின்றது.[1] சோழர்களின் நிலைப்படை ஒன்று இங்கிருந்ததாகவும் இலக்கியங்கள் கல்வெட்டுக்கள் என்பவை கொண்டு அறிகின்றோம். நிற்க.

நாகர்கோவில் என்ற பெயர் ஒரு காலத்தில் நாகராஜா கோவிலை மட்டுமே உணர்த்தி நின்றது. பின் அது அக்கோவிலிருக்கும் சுற்றுப்பகுதியைக் குறிப்பதாயிற்று. இதுபோலவே, இந்நகரத்தின் ஓர் பால் கிருஷ்ணனுக்குக் கோவில் ஒன்று ஏற்படவே, அதனைச் சூழ்ந்துள்ள இடங்கள் கிருஷ்ணன்கோவில் என்ற பெயரால் அழைக்கப் பெறுவதையும் பார்க்கிறோம். பிற்காலத்தில்தான் நாகர்கோவில் என்ற பெயர் பிரசித்திபெறத் தொடங்கினது. அது கிறிஸ்தவ மிஷனெறிகள் வந்து தங்கிப் பள்ளிகளும் பாடசாலைகளும் நிறுவிக் கவர்ச்சியும் காட்சியும் உண்டு பண்ணினபோது ஆகும். பின் நாகர்கோவில் என்ற பெயரே நகர் முழுமையையும் சுட்டுவதாயிற்று.

நகரத்தின் வடகிழக்குப் பகுதியிலிருக்கும் நாகராஜா கோவில் ஆதியில் ஒரு சமணக் கோவிலாக இருந்ததென்

1: பழையாற்றிலுள்ள ஓர் அணைக்குச் 'சோழன் கட்டு அணை' என்ற பெயர்.

றும், பிற்காலத்தில்தான் இந்துக்கோவிலாக மாறியதென்றும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இதற்கான ஆதாரங்கள் பலவும் அங்கே காணப்படுகின்றன. கோவிலில் சந்நிதி மண்டபத்தின் சுவரிலும் தூண்களிலும் மகாவீரர், பார்சுவநாதர், பத்மாவதி இவர்களுடைய சிலைகள் செதுக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம். படமெடுத்த பாம்பின்கீழ் நிற்பதாகவுள்ள விக்கிரகம் தீர்த்தங்கரரில் ஒருவரான பார்சுவநாதருடையதாகும்.

அன்றியும் கோவிலுக்குள் இருக்கும் கல்வெட்டு ஒன்று கீழ்வருமாறு தொடங்குகிறது.

> "ஸ்வஸ்தி ஸ்ரீ அருளிச் செயல் கொட்டாருண மும் முடி சோழபுரத்து நாகர்கோயிலிற் பள்ளி உடைய குணவீர பண்டிதனும் கமல வாகன பண்டிதனும் கொட்டாற்று நாகர்க்கும் நாக ராசாவுக்கும் உச்சிச் சந்திப் பூசைக்கு நாள் ஒன்றுக்கு அமுதுபடி நாழி ஆகவும் திருநந்தா விளக்கு இரண்டாகவும் நடத்திக்கொண்டு போதும்படி கற்பித்து தொண்ணூற்று ஆருமாண்டு கார்முதலுக்குப் பள்ளிச் சந்தமாக விட்டுக் குடுத்த நிலமாவது.......................[1]"

இது கொல்லம் 696-ல் எழுந்த கல்வெட்டு. இதில் குறிப்பிடப்பட்டுள்ள குணவீரபண்டிதன், கமலவாகன பண்டிதன் என்னும் பெயர்களிரண்டும் சமணப்பெயர்கள் என்பது தெளிவு. 'பள்ளி' என வரும் சொல்லும் கவனிக்கத் தக்கது. அது கோவில் என்னும் பொருளைத் தரும்போது இந்துமதக் கோவிலல்லாத பிறமதக்கோவில்களையே உணர்த்தும். கிறிஸ்தவப் பள்ளி, மகம்மதியப் பள்ளி என வரும் வழக்குக்கள் கொண்டும், ஜைன

1. T. A. S. Vol. VI. P. 163.

பௌத்த ஆலயங்களுக்கு விடப்படும் நிலத்தைப் 'பள்ளிச் சந்தம்' எனக் கூறும் பழங்கால வழக்குக் கொண்டும் இதனை அறியலாம். ஆனால் இங்குப் பள்ளி என்று கூறியது கிறிஸ்தவப் பள்ளியையோ மகமதியப் பள்ளியையோ அல்ல என்பது திண்ணம். பின்னையோ என்றால் மேற் கூறிய இரு பெயர்களின் அமைப்புக் கொண்டும், கோவிலிலுள்ள விக்கிரகங்களின் அமைப்புக் கொண்டும் இச் சொல் பௌத்தப் பள்ளியை விலக்கிச் சமணப் பள்ளியையே குறிப்பிடுகின்றதென்பது தெளியக் கிடக்கின்றது. இதுபற்றிய முழுவிவரமும் திருவிதாங்கூர்ச் சாசன வெளியீட்டு வரிசை இரண்டாம் பாகத்தில் பரக்கக் காணலாம்.

கோவிலின் தென்புறத்திலுள்ள மடத்தில் கொஞ்சக் காலத்துக்கு முன்வரையிலும் சமண ஸ்தானீகர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களை நேரில் பார்த்துள்ள முதியோர் பலர் இன்னும் இருக்கின்றனர். இவற்றாலெல்லாம் இக் கோவில் ஓர் சமணக் கோவிலாயிருந்ததென்பது நன்கு தெளியப்படும். ஞாயிற்றுக்கிழமை இந்தக் கோவிலுக்குச் சிறந்த நாளாம். ஒருவகை நனைந்த மணல் இங்கே பிரசாதமாக வழங்கப்படுகிறது.

இதுகாறும் கூறியவற்றால் சமணக் கோவிலாயிருந்த நாகர்கோவில்பின்னரே இந்துக்கோவிலாயிற்றுஎன்பதும், அப்பெயர் முதலில் கோவிலை உணர்த்தி, பின் சுற்றுப்பக்கங்களைச் சுட்டி, அதன்பின் நகரம் முழுமையையும் சுட்டுவதாயிற்று என்பதும், கோட்டாறு என்பதே இலக்கியங்களாலும் கல்வெட்டுக்களாலும் அறியப்படுகிற பழைமையான பெயர் என்பதும், இவ்வூர் சேர பாண்டியர் ஆட்சியினும் சோழர் ஆட்சியில் வெகுகாலம் இருந்திருக்கிறதென்பதும், இங்கு வாழ்ந்தவர்களும் வாழுகின்றவர்களும்

தமிழ் மரபு குன்றாத் தூய தமிழ் மக்களே என்பதும் அறியப்பட்டன.

ரு. **சுசீந்திரம்**- இது நாகர்கோவிலினின்று கன்னியாகுமரிக்குப் போகும் வழியில் தென் கிழக்கில் மூன்று மைல் தொலைவிலே இருக்கிறது. தென்னாட்டிலுள்ள சிறந்த சிவத்தலங்களுள் ஒன்று. தாணுமாலயப்பெருமாள் கோவில் ஊரின் நடுவே உயர்ந்தோங்கிய கோபுரத்துடன் பொலிந்து விளங்குகிறது. ஏழு நிலைகளையுடைய அக்கோபுரம் அமைப்பினாலும் வேலைப்பாட்டினாலும் இணையற்றதென்று சொல்லலாம். கோவிலுக்குள் இருக்கும் சிற்பங்கள் கண்களைக் கவரும் வனப்புடையன. பிந்திய காலத்தில் மகமதியர்களின் படையெடுப்பால் பழுதுபடுத்தப்பட்ட சில சிலைகள்கூடச் சிற்பக் கலையில் சுவையற்றவர்களையும் பிரமிக்குமாறு செய்து விடுகின்றன.

பழங்காலச் சிற்பத்துக்கு நிலைக்களமாயிருக்கும் இவ்வாலயம் மிக்க புராதனமானது. இஃது இன்ன காலத்துத் தோன்றியது எனத் திட்டமாய்ச் சொல்வதற்கில்லை. நாளடைவில் முன் மண்டபம், சுற்று மண்டபம், கோபுரம் என்பவைகள் கட்டப்பட்டு வளர்ச்சி யடைந்தன. சோழ, பாண்டிய, கேரள, விஜயநகர அரசர்கள் பலப்பல திருப்பணிகளும் அறங்களும் நடத்தி வந்திருக்கிறார்கள். அவ்வக் காலங்களில் பொறிக்கப்பட்ட சுமார் நூற்றுக்கு மேற்பட்ட கல்லெழுத்துக்கள் கோவிற் சுவரிலும் மதிற் புறத்தும் பாறைகளிலுமாய்க் காணப்படுகின்றன. நாமறிந்த வரையில் மிகப் பழைமையான கல்வெட்டாகக் காணப்படுவது மாறன் சடையன் காலத்ததாகும். இவன் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு. சோழ வேந்தருள் ஆதித்

தன் மகனுகிய முதற்பராந்தகன் கி. பி. 906-ல் அரசேறி ஞன். இவன் காலத்துக் கல்வெட்டுக்களும் சுசீந்திரம் கோவிலில் உள்ளன. அவற்றுள் ஒன்று தருதும்:-

ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பர கேசரி வன்ம
ற்க்கு யாண்டு முப்பத்து நாலு இ
வ்வாண்டு நாஞ்சிநாட்டு திருச்
சிவீந்திரத்து மாதேவர்க்கு தெ
ன் நாட்டு **தலைக்குளத்து அரையன**
**ரவிந்தன்** சந்திராதித்த ம(லு)
ம் நியதி உழக்கு நெய் முட்டா
மல் எரிவதாக வைச்ச திருநொ
ந்தா விளக்கு ஒன்றினுக்கு வைச்ச
சாவா மூவா பேர் ஆடு அம்பது இவை
ஐம்பதும் பரடை ஸபையார்க்கு.........[1]

இவன் காலத்தும் அதற்குப் பின்னர் வெகுகாலம் வரையிலும் சுசீந்திரமானது சோழர்களின் ஆட்சிக்கீழ் இருந்துள்ளது. 985-ல் அரசேறிய முதல் இராஜ ராஜன் ஆட்சியில் நாஞ்சில்நாடு மட்டுமல்ல; திருவிதாங்கூரின் பெரும்பகுதியும் இருந்ததாகத் தெரிகிறது, அவன் தென் ஞட்டுப் பல இடங்களுக்கும் தன் மக்களைப் பிரதிநிதிக ளாக நியமித்தான். அவ்வாறு நியமிக்கப்பட்டவருள் ஜடா வர்மன் சுந்தர பாண்டியன் ஒருவன். இவன் காலத்தில் சுசீந்திரம் கோவிலகத்துப் பொறிக்கப்பட்டுள்ள சாசனம் இவ்வூரைச் **சுந்தரசோழ சதுர்வேதிமங்கலம்** எனக் கூறுகின் றது. அது வருமாறு:-

ஸவஸ்தி ஸ்ரீ கொச்சடையபன்மரா
ந ஸ்ரீ சுந்தர சொழ பாண்டி தெ
வற்க்கு யாண்டு ஒன்பதாவது இ
ராஜராஜப் பாண்டி நாட்டுத்த

---

1. T. A. S. Vol. I. P. 237.

ம சோழ வ்ளநாட்டு நாஞ்சி
நாட்டு **ञह्म देश சுசீ,**
**ந்திரமாந சுந்தர சோழச் சருப்பெ**
**தி மங்கலத்து** தென்றிரு வெங்க
டத் தாழ்வார்க்கு கோட்டாருந
மும்முடி சோழ நல்லூரிருக்கும்
சங்கர......................[1]

பன்னிரண்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதியில் இவ்'வூர் பாண்டியர் ஆட்சியில் இருந்திருக்கவேண்டும். 1132 முதல் 1169 வரை ஆண்ட பாண்டியன் மாறவர்மன் ஸ்ரீ வல்லபன் காலத்துக் கல்வெட்டு **சுந்தரபாண்டிய சதுர் வேதி மங்கலம்** என்ற பெயரால் இவ்வூரைக் குறிப்பிடுவதாக அறிகின்றோம்.

"நாஞ்சி நாட்டு **சுசீந்திரமான சுந்தர பாண்டிய சதுர்வெதி மங்கலத்து** ஸபையார்[2]" -என வருவது காண்க.

1209-ல் எழுந்த சாசனமும் இவ்வாறேதான் கூறுகின்றது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொல்லம் ௩௱அ௰௪ மாண்டு நாஞ்சிநாட்டுச்
**சுசீந்திரமான சுந்தரபாண்**
2. **டிய சதுர்வெதி மங்கலத்து**............[3]"

இதன் பின்னர் இவ்வூர் வேணாட்டரசர்களுடைய கைக்கு மாறியது போலும். வேணாட்டரசனான கேரளவர்மன் காலத்தில் எழுந்த சாசனத்தில் இவ்வூரை **வீர கேரள சதுர்வேதி மங்கலம்** என்று குறிப்பிட்டிருக்கிறது. சுசீந்திரம்

1. T. A. S. Vol. IV. P. 135.
2. T. A. S. Vol. IV. P. 125.
3. இது சுசீந்திரம் பெரிய கோவிலில் பஞ்சபாண்டவர் சந்நிதியில் ஸ்ரீகோவில் மதிலின் அடுத்துக் காணப்படுவது.

தெற்கு ரத வீதி இரட்டைத்தெரு கேரள விண்ணவர் எம்பெருமான் சந்நிதி முன்மண்டப லிகிதத்தில்

1. **शुभमस्तु** ஸ்வஸ்தி ஸ்ரீ **शकाब्दं** *கதுகூாயக* இதின் மேல் **செல்லா நின்ற கும்ப வியாழம் துலாச் சநி சு**

2. க்கில வருஷம் கோல்லம் *அாகூயரு* ஞ மாசி மீ **உயஅ உ** அமரபட்சத்து ஏகாதேசியும் சோமவாரமும் சுபயோகமும்

3. ......மஹகரணமும் பேற உத்திராடத்து நாள் செய்த கல்வெட்டாவது நாஞ்சிநாட்டு **சுசீந்திரமான வீரகேரளச் சதுர்வெதி**

4. **மங்கலத்து**......................* என வருகின்றது.

மேலே காட்டப்பட்டவாறு இவ்வூருக்கு ஏற்பட்டுள்ள பெயர்களான-சுசீந்திரமான சுந்தரசோழ சதுர்வேதி மங்கலம், சுசீந்திரமான சுந்தரபாண்டிய சதுர்வேதிமங்கலம், சுசீந்திரமான வீரகேரள சதுர்வேதி மங்கலம் என்னும் பெயர்களால் இவ்வூரும் இதனைச் சேர்ந்த பகுதிகளும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்கு இப்பால் முறையே சோழ பாண்டிய கேரள வேந்தர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தன என்றும், அக்காலத்தெல்லாம் தமிழாட்சியே நிலவியிருந்ததென்றும் தெள்ளத் தெளிய உணரமுடியும்.

மூவேந்தரன்றி விஜயநகர அரசர்கள், நாயக்க அரசர்கள் என்பவர்களுடைய ஆட்சியின் கீழும் சுசீந்திரம் உள்ளிட்ட பகுதிகள் இருந்ததாக அறிகிறோம். அவர்கள் காலத்துக் கல்வெட்டுக்கள் பலவும் கோவிலில் காணப்படுகின்றன. இதற்கு முந்திய கோபுரத்தைக் கட்டுவித்தவர் விஜயநகர வேந்தராயிருந்த கீர்த்தி பெற்ற கிருஷ்ண தேவராயராவர். அதுபற்றிய விவரங்களைக் கோபுரத்தின்

* **பதிப்பிக்கப்படாதது.**

கீழ்ப் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டில் காணலாம். அக்கோபுரம் இடியேறுண்டு இடிந்துபட்டவே இப்போதைய அழகிய கோபுரத்தைத் திருவிதாங்கூர் மன்னராயிருந்த விசாகம் திருநாள் ராமவர்மா அவர்கள் கட்டத் தொடங்கினார்கள். அது ஸ்ரீமூலந்திருநாள் மன்னர்பிரான் காலத்தில் முற்றுப் பெற்றது.

கோவிலுக்குள் விஜயநகர வேந்தர்களுடையவும் நாயக்க அரசர்களுடையவும் சிலைகள் காணப்படுகின்றன. திருமலை நாயக்கருடைய தென்று சொல்லப்படும் இரண்டு கற்சிலைகள்சிற்பக்கலையின்சிகரத்தைத் தொட்டுவிட்டவை என்று சொல்லும்படியானவை. கருமெழுகிற் செய்தது போன்ற வழுவழுப்பும், ஆடையின் மடிப்பும், அவற்றிடை வெளியும், விளிம்பில் தொங்குகின்ற முத்துக்கோவையும் யாவரையும் பிரமிக்கச் செய்கின்றன. இடையில் செருகியுள்ள கடாரி இரும்பால் செய்ததோ என்று தோன்றும். ஓங்கிய வாள் ஒருவரையும் வெட்டாமலிருப்பதற்குக் காரணம் ஒருவரும் அதனை நெருங்காமலிருப்பதுதான். மன்னனுக்கு நீர்த் தோஷம் ஏற்பட்டு மூக்கின் வழியே நீர் வடிந்தால் நிச்சயமாகவும் ஆச்சரியப்படுவதற்கில்லை. மூக்குத்துளை தலைவரையும் செல்கிறது.வலது மூக்கில் ஈர்க்கில் விட்டால் இடது காதுக்கும், இடது மூக்கில் ஈர்க்கில் விட்டால் வலது காதுக்கும் செல்வதைப் பார்க்கலாம். இவ்வளவு நுண்ணிய வேலைப்பாடமைந்த சிற்பத்தின் அமைப்பு யாவரும் கண்டுகளிக்கத்தக்க ஒன்றாகும்.

நாயக்க மன்னருக்குச் சுசீந்திரத்தோடுள்ள தொடர்பைக் கோவிலினுட் சிலைகள் மட்டுமன்றி வேறு சிலவும் விளக்கி நிற்கின்றன. கோவிலின் வடபாலுள்ள தெப்பக் குளத்தின் எதிர்ப்புறத்தில் ஒரு மடம் இருக்கிறது. இது

நாயக்கர் மடம் எனப்படும். அங்கேதிருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த பண்டார சந்நிதிகளின் சமாதிகள் சில காணப்படுகின்றன. நாயக்கமன்னர்கள் ஆதீனத்தாருக்கு மடம் கட்டிக் கொடுத்துப் பொருளும் விட்டுச் சமயத் தொண்டு புரிந்து வருமாறு ஏற்பாடு செய்திருந்தார்கள் என்னும் உண்மை இவற்றால் அறியப்படும். நிற்க.

கோவிலின் அகத்துக் கொடிமரம் நிற்கும் விசாலமான மண்டபத்தின் பெயர் செண்பகராமன் மண்டபம் என்பது. இதனைத் தாண்டி உள்ளே போகும் போதிருப்பது வீரபாண்டியன் மணிமண்டபம். அதற்கும் அப்பால் உதயமார்த்தாண்ட மண்டபம், இடப மண்டபம் முதலியன இருக்கின்றன. முதலிற் சொல்லப்பட்ட செண்பகராமன் மண்டபம் வடக்கிடம் தெற்கிடம் என்று சொல்லப்படுகின்ற தாணுநாதர் சந்நிதி, பெருமாள் சந்நிதி இரண்டுக்கும் பொதுவானதாய்ப் பெரிதாக அமைந்திருக்கின்றது. இம்மண்டபத்தின் தூண்களிலும் அதன் மேல் நாற்புறத்து விட்டங்களிலும் சிற்பங்கள் பல செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் தாணுநாதருக்கு முன்புற மண்டபத்துச் சிற்பங்கள் யாவும் சைவமதச் சார்பானவை. பெருமாளுக்கு முன்புறமுள்ளவை வைணவ மதச் சார்பானவை.

தெற்கிடத்துள்ள சிற்பங்களில் இராமயணக் கதையும் ஒன்று. சிற்பவரிசையைக் கூர்ந்து பார்த்தால் அது வான்மீகி ராமாயணத்தை தழுவிச் செய்யப்பட்டதல்ல என்பது தெரியவரும். முதலாவது, அசுவமேதயாகத்தைக் காட்டும் சிற்பங்கள் அதில் இல்லை. இரண்டாவது, இராவணன் சந்நியாசியாக வருவதும் சீதையைத் தேரில் வைத்துச்செல்வதுமான சிற்பங்கள்தாம் காணப்படுகின்ற

னவேயன்றி, தொட்டுத் தூக்குவதாயுள்ள சிற்பங்களைக் காணேம். இவ்விரண்டாலும் இச்சிற்பங்கள் செந்தமிழ்க் காப்பியமாய கம்ப ராமாயணக் கதையைப் பின்பற்றிப் பொறிக்கப்பட்டவை எனக் கொள்வதற்குத் தடையில்லை. ஆகவே இம் மண்டபம் செய்யப்பட்டது. கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டுக்குப் பின்னரே என்றறியலாம். ஆம்; கொல்லம் 654-ல் (கி. பி. 1479-ல்) இது கட்டி முடிக்கப்பட்டது. திருப்பாப்பூர் மூத்த திருவடிகளாகிய வீரராமவர்மர் கொல்லம் 646-ல் தொடங்கி எட்டாண்டுகள் கொண்டு திருப்பணி முற்றுவித்ததாக மண்டபத்தின் அகத்தும் புறத்தும் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களால் அறிகின்ருேம். இதன் உட்புற மண்டபமாகிய வீரபாண்டியன் மணி மண்டபம் கட்டப்பட்டது இதற்கும் சில நூற்றுண்டுகளுக்கு முன்னராகும். அஃதாவது கி. பி. 1257-ல் ஆகும்.

இவ்வாலயம் ஒரு காலத்தில் ஒரு தெய்வீக நீதிமன்றம் **(Divine Court of Justice)** ஆகக் கருதப்பட்டு வந்தது. குற்றவாளிகளென்று சந்தேகிக்கப்பட்ட நம்பூதிரிப் பிராமணர்களை இக் கோவிலுக்கு அழைத்து வந்து சோதனை மூலம் அவர் குற்ற முண்மை யின்மைகளைத் தெளிவிப்பது வழக்கம். செண்பகராமன் மண்டபத்தில் கொடிமரத்தின் சற்று உட்புறமாக மேலே சதுரமான வெளி ஒன்று போடப்பட்டிருக்கிறது. அதன் வழியாக உச்சிப்போதை உணரலாம். அவ்வேளையில் சூரியன்சாட்சியாக மேற்கூறிய சோதனை நடைபெறும். பெரிய மிடாவில் நெய்யைக் கொதிக்க வைத்து ஒருவகை இலையினுல் கொதிப்பின் அளவை அறிந்துகொண்டு, தங்கத்தால் செய்த நந்தியை அதில் போடுவார்கள். சந்தேகிக்கப்

பட்டவர் அங்குக்கூடியிருக்கும் சபையோர்முன் நெய்யில் கையை முக்கி அதனை எடுக்கவேண்டும். அப்போது கை வெந்து போகாமலிருந்தால் அவர் குற்றமற்றவர். நேர் மாறாக நடந்தால் அவரை அப்போதே அடித்து விரட்டிச் சாதி நீக்கம் செய்துவிடுவர். இச்செயலுக்குச் 'சுசீந்திரம் கைமுக்கு' என்று பெயர். இதற்கான உபகரணங்கள் இப்போதும் கோவிலில் இருக்கின்றன.

கோவிலுக்குள் சுமார் நூற்றுக்கு மேற்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன என்று முன்னரே சொன்னோம். அவற்றுள் பெரும்பாலானவை வட்டெழுத்திலும், சிலவை பழங்காலத் தமிழெழுத்திலும், இன்னும் சில தற்காலத் தமிழெழுத்திலும் எழுதப்பட்டவையாகும். வடமொழியில் பொறிக்கப்பட்டவை இரண்டோ மூன்றோதான் இருக்கும். இவைகளுள் 9 முதல் 11 ஆம் நூற்றாண்டு வரையுள்ளவை சோழபாண்டிய வேந்தர்களின் ஆட்சிக் காலத்தில் தோன்றினவையாம். கேரள வேந்தர்களைக் குறிப்பிடும் கல்வெட்டுக்களெல்லாம் பிற்காலத்தன, வேணாட்டரசர்களைக் குறிப்பிடும் கல்வெட்டுக்களில் பழைமை வாய்ந்தது கொல்லம் 320-ல் உள்ளது. அதுவும் தமிழ்க் கல்வெட்டே.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொல்லந் தோன்றி *௩௱௨௰*-தாவது மீன ஞாயிற்று
2. வேணாடு வாண்டருளுன்ற ஸ்ரீ கோதை கேரளவம்மர் நாஞ்சிநாட்டு சுசிந்திர
3. முடைய மஹாதேவர்க்கு திருவமுதுக்கு அரி நாணுழியும் ......................*

என வருவது அது. இவற்றாலெல்லாம் தோன்றுநாள் தொட்டுத் திருச் சுசீந்திரத்தில் தமிழாட்சியே நிலவி

* T. A. S. Vol. IV. PP. 18, 19.

வந்ததென்பதை ஐயம் திரிபறத் தெரிந்து கொள்ளலா மல்லவா?

௬. **கன்னியாகுமரி:-** பாரதத்தாயின் பாதச் சிலம் பொலியேன முக்கடலுங் கூடி முழங்கும் குமரித் துறை யைப் பற்றிக் கேள்விப்பட்டிராதவர் இந்திய நாட்டில் எவரும் இரார் என்றே கூறிவிடலாம்.

**'நீலத் திரைக்கடல் ஓரத்திலே நின்று**
**நித்தம் தவம் செய் குமரி'** பண்ணோடு

இயைந்து பாட்டிற் குழைந்து தமிழர் நாவில் தனி நடம் புரிகின்றாள். சங்ககாலம் குமரியைப் பற்றி நன்கு தெரிந் திருந்தது.

'[1] **வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்**
**தமிழ்கூறு நல்லுலகத்து'** -என வருவதும்,

'[2] **வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்**
**தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்**
-என வருவதும்,

'[3] **தென்குமரி வடபெருங்கல்**
**குணகுடகட லாவெல்லை'** -என வருவதும்,

'[4] **குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி'**-என வருவதும்,

'[5] **தென்குமரி வடபெருங்கல்**
**குணகுடகட லாவெல்லைத்**
**தொன்று மொழிந்து தொழில் கேட்ப'**- என வருவதும்

---

1. தொல்காப்பியம்: பாயிரம். 2. புறம்: 6. 3. புறம்: 17.
4. புறம்: 67. 5. மதுரைக்காஞ்சி: 70-73.

இன்றைய குமரியைக் குறிப்பதன்றி, இதன் தென்பாலி ருந்த நிலப்பகுதியில் ஓடிய குமரியாற்றைக் குறிக்கும் என்றும், அது கடல் கொள்ளப்பட்டுப் போயிற்று என் றும், பலருங் கூறுகின்றனர். குமரியாறு என்பது ஒரு நதியைக் குறிப்பதல்ல; பாம்பன் ஆறு என்னும் பெயர் பாம்பன் ஜலசந்தியைச் சுட்டினாற்போல இதுவும் குமரித் துறையை யடுத்த கடற்பகுதியைக் குறிப்பதேயாம் என் றும், 'பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடு' என வருவதிலும் குமரிக்கோடு என்றது குமரிக் கடற்கரையை யன்றி வேறல்ல என்றும் கூறுவர் ஒரு சாரார். இது சரித்திர காலத்துக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சி பற்றியது ஆதலால் இதற்கோர் முடிவு கூறுவது எளி தல்ல. அஃது எங்ஙனமாயினும் இன்றைய குமரியும் இலக்கியங்களில் எவ்வளவோ பயின்று வந்திருக்கிறது என்பது உண்மை.

**'காதுசேர் தாழ்குழையாய்! கன்னித் துறைச்சேர்ப்ப!**
**போதுசேர் தார்மார்ப! போர்ச்செழிய!'**

-இது முத்தொள்ளாயிரப் பாடலடி.

**'[1]மாமறை முதல்வன் மாடலன் என்போன்**
**மாதவ முனிவன் மலைவலம் கொண்டு**
**குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து'** -எனவும்,

**'[2]பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து**
**கொண்டோற் பிழைத்த தண்டம் அஞ்சித்**
**தென்றிசைக் குமரி ஆடிய வருவோள்'** -எனவும்

முறையே சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் வரு

---

1. சிலப்பதிகாரம் 15 : 13-15. 2. மணிமேகலை 13 : 5-7

பவை குமரிக் கடற்றுறைத் தீர்த்தத்தைக் குறிப்பிட்டவை யாகவே இருத்தல்வேண்டும்.

"[1] ..............................அயல் வேந்திறைஞ்சும்
பொன்னூர் கழல்நெடு மாறன் குமரியம் பூம்பொழில்வாய்'

இஃது எட்டாம் நூற்றுண்டு இலக்கியம். இப்படிப் பல.

ஏன்? கிறிஸ்து பிறப்பதற்கும் பல நூற்றுண்டு களுக்கு முன்னரே குமரியானது அயல் நாட்டவரால் அறியப்பட்ட ஒன்ருயிருந்திருக்கிறது. கி. மு. மூன்ரும் நூற்ருண்டிலிருந்தவரும், இங்கு வந்த மேலை நாட்டாசிரி யர்களுள் முற்பட்டவருமான 'எராத்தோதனஸ்' என்பார் தாமெழுதியுள்ள வரலாற்றில் குமரியைக் குறிப்பிட்டுள் ளார்[2]. பெரிப்ளஸ் என்னும் நூல் கீழ்வருமாறு கூறுகின் றது[3]. -"இதற்கப்பால் குமரி என்ரூேர் இடமிருக்கின்றது. இங்கே குமரி முனையும் துறையுமிருக்கின்றன. தம் பிற்றைநாளைக் கழிக்க விரும்புகின்றவர்களும், நீராட விரும்புகின்றவர்களும், பிரமச்சரியம் காக்க விரும்புகின்ற வர்களும் இங்குக் கூடுகின்றனர். பெண்களும் இதேமாதிரி செய்கின்றனர். அதற்குக் காரணம் ஒரு பெண் தெய்வம் இங்கு வாழ்ந்து நீராடினதாகக் கூறப்படுவதுதான்"

---

1. பாண்டிக்கோவை: 232.

2. "Eratosthenes; who lived in the 3rd century B. C is the first foreigu writer who mentions Cape Comorin." - (Travancore State Manual by Nagamaiah P. 232)

3. Beyond this there is another place called Comari, at which are the cape of Comari and a harbour; hither come those men who wish to consecrate themselves for the rest of their lives, and bath and dwell in celibacy; and women also do the same; for it is told that a goddess once dwelt here and bathed. (Foreign notes of South India; Periplus P. 59)

என்பது. இந்நூல் கி. பி. 85-ல் தோன்றியதாகும். கி. பி. 150-ஐ ஒட்டி வாழ்ந்த யவன ஆசிரியரான தாலமியும் **'Komaria Akron'** என்னும் பெயரால் இதனைக் குறிக்கின்றார். இவற்றால் குமரி மிகத் தொன்றுதொட்டே பிற தேயத்தவரும் அறியுமாறு சிறப்புற்று விளங்கினமை தெரியப்படும்.

வரலாற்று முறைமை கொண்டு அறியப்படுவது ஒருபுறமிருக்க, புராணகாரர்களோ இதனை மிகப் பழைமையுடையதாகக் காட்டுகின்றார்கள். இராமபிரான் ஆழ்கடல் கடந்து இலங்கை செல்வதற்கேற்ற அணைகட்ட இங்கு வந்ததாகவும், அதற்கு அருள்புரியவேண்டுமென்று தேவியிடம் இரந்து நின்றதாகவும், அவ்வாறே தேவி அருளினதாகவும், அதுமுதல் இது 'ஆதிசேது' எனப் பெயர் பெற்றதாகவும் குமரித் தலபுராணம் கூறுகின்றது. அது வருமாறு:-

1. **"அடலுடை யிராம னென்பா னுறிது நிலங்கைக் கேகக்***
   **கடலுடைச் சேது வொன்று கட்டிடக் கருத்தில் உன்னி**
   **மடலவிழ் மாலைச் செங்கை மாதவக் கன்னி வாழும்**
   **திடலுறு குமரி யென்னும் தென்கடற் கரைக்கண் வந்தான்.**

2. **கருதிடும் சேதுவொன்று கட்டவும் கட்டும் சேது**
   **வருமிடை யூறொன் றின்றி வழிக்கொண்டு செலவும் மற்றப்**
   **பொருவலி யிராவணாதி அரக்கரைப் பொருது கொல்வான்**
   **பெருவலி பெறவும் தந்தேன் என்றவள் பின்னும் சொல்வாள்**

---

* **ஆசிரியர்: சங்கர நாவலர்,**

3. சேதுவின் கீழ்பா லாய தேவிபட் டணத்துக் கிப்பால்
ஓதிய மேல்பாற் சேது மூலமா யுள்ள தாய
ஆதியாம் குமரியென்னும் அத்தலத் திருந்தி யானும்
பேதியா ததனைக் காத்தல் செய்குவன் பேணிப் பேணி.

4. அவ்வரங் கொள்ளப் பெற்ற அடல்வலி யிராம னானும்
செவ்விதிற் பூசித் துள்ள தேவிவாழ் குமரி தன்னைத்
திவ்விய சேது மூலம் என்பது செய்யப் பெற்றது
எவ்வமில் அத்த லத்தின் பெருமையார் இயம்ப வல்லார்?

5. ஆங்குள இராம சேதுக் காதியாம் சேது மூலம்
ஈங்கிது ......................................''

என வரும் பாடல்களாற் காண்க. இது ஆதிசேதுவாகக் கருதப்படுகிறது என்பதற்கு இன்னொரு ஆதாரமும் காண்கிறோம். "குமரித் துறையில் நீராடுவோர்-

'ஆதிஸேதோः கன்னியாகுமரி க்ஷேத்ரே மாதுர் பிதுர் தீர்த்தே'

என ஸங்கல்பம் செய்து கொள்வர். கன்னியாகுமரியை ஆதிஸேதுவாகவும், தனுஷ்கோடியை மத்யஸேதுவாகவும் கூறுவர்[1]" என உயர்திரு இராகவையங்காரவர்கள் எழுதியிருப்பதாலும் அறியப்படும்.

அணைபற்றிய தொடர்பு அல்லது குரங்குகளின் தொடர்பு குமரிக்கு உண்டு என்பதற்குப் பழந்தமிழ்க் காப்பியமாய மணிமேகலையும் ஆதரவு தருகின்றது அதில்

1 Collected Essays by M. Raghava Iyangar Avl, PP. 30-31

'குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறை[1]' -என்னும் தொடர் வருதல் காண்க. இதற்குக் 'குரங்குகளால் பணி செய்யப்பட்ட கடலையுடைய அழகிய கன்னியா குமரித் தீர்த்தத்துறை' என்பது பொருள். இவை எம்மட்டு உண்மை என்பது ஆராயத்தக்கது. நிற்க.

கன்னியாகுமரியும் அதன் சுற்றுப் பக்கங்களும் புறத்தாயநாடு என அழைககப்பட்டு வந்தன. அவை நாஞ்சில் நாட்டைச் சேர்ந்திருந்தன என்பதற்கு ஆதாரம் எதுவுமில்லை.

"[2] ராஜராஜப் பாண்டியநாட்டு உத்தம சோழவள நாட்டுப் **புறத்தாய நாட்டுக்** குமரி கன்னியா பகவதியார்" என வருவது முதலியன பார்க்க. புறத்தாயநாடு என்பதன்றி '**முறத்தாய நாடு**[3]' எனவும் குமரிப்பகுதி அழைக்கப்பட்டு வந்தது. இதற்கு '**வாரணவாசி நாடு**' என்ற பெயர் இருந்ததாகவும் அறிகிறோம்.

"[4] ஸ்வஸ்தி ஸ்ரீ கோல்லம் *௩௭௰௬*-வது மேடநாயிற்று *௨௰௧* சென்ற சனியாண்ட மகத்தி

நாள் ஸ்ரீ பாண்டியநாட்டுப் **புறத்தாய நாடான தென்வாரணவாசி நன்னுட்டு குமரி** கன்னியா பகவதியார் கோயிலில் உள்ளாலை **गर्भगृहत्तु चन्द्रादित्य** வற் திருநந்தா விளக்கு செலுத்துவிதாக........"

எனக் கி. பி. 1201-ல் எழுந்த கன்னியாகுமரிக் கல்வெட்டு, புறத்தாய நாட்டுக்குத் தென்வாரணவாசி நாடு என்றோர் பெயர் இருந்ததாகக் குறிப்பிடுகின்றது. ஆனுல்

1. மணிமேகலை 5-37.
2. பராந்தக பாண்டியன் சாசனம்.
3. T. A. S. Vol. VI. P. 126. 4. T. A. S. Vol. IV P. 65.

அகஸ்தீசுவரம் பாறைக் கல்வெட்டோ என்றால் தென் வாரணவாசி நாட்டைப் புறத்தாய நாட்டின் ஒரு பகுதி யாக வைத்துச் சொல்கின்றது.

"[1]ஸ்வஸ்தி ஸ்ரீ அருளிச் செய்கை **புறத்தாநாட்டு தென்வாசி வாரண நன்னாட்டு** அகத்திசுவரமான உதய மாத்த ரண்டச் சதுர்வேதிமங்கலத்து..................." என வரும்.

கன்னியாகுமரிக் கல்வெட்டு அப்பகுதியைத் 'தென் வாரணவாசி நாடு' எனக் கூற, அதன் அண்மையிலிருக் கும் அகஸ்தீசுவரம் கல்வெட்டோ 'தென்வாசி வாரண நாடு' என்று பெயரை முன்பின்னாக மாற்றிக் கூறுகின்றது. அன்றியும் முன்னது, அதனைப் புறத்தாய நாட்டுக்கு இன் னொரு பெயர் என்பது போலக் கூற, பின்னது அதனைப் புறத்தாய நாட்டில் உட்பட்ட ஒன்றாகக் கூறுகின்றது. என்னவாயினும் வாரணவாசி நாடு அல்லது வாசிவாரண நாடு என்பது புறத்தாய நாட்டோடு தொடர்புடையதாய்க் கன்னியாகுமரி, அகஸ்தீசுவரம் பகுதிகளைக் குறிப்பிட்டு நின்றது என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

காசிக்கு வாரணாசி என்னும் பெயர் இருப்பதால், அதுபோன்ற புண்ணிய தீர்த்தமான தெற்கின்கணுள்ள கன்னியாகுமரிக்குத் 'தென் வாரணவாசி, எனப் பெயர் அமைந்ததோ என்று கருதுவோர் இருக்கலாம். காசியை விட எவ்வகையிலும் சிறப்பிற் குன்றாத இக்குமரிக்குக் காசியின் பெயர் இட்டு வழங்கினர் என்று கருதுவது பிழையாகும். இரண்டாவது, அது கன்னியாகுமரித் தலத்தைக் குறிப்பிடாமல் அது உள்ளிட்ட நாட்டை

1. Kerela Society Papers Vol- I- P- 264-

உணர்த்துவதாக இருக்கின்றது. மூன்ருவது, பெயர் அமைப்பிலும் வேற்றுமை உள்ளது. முன்னது வாரண + அசி எனப் பிரிவுபடும். அப்பெயர்களுடைய இரண்டு ஆறுகளின் நடுவில் இருப்பதால் அப்பெயர் பெற்றது அது. "வாரணசி-காசி. **Benares, Situated between the rivers Varana and Asi."** என வரும் **Lexicon** உரையைப் பார்க்க. இதுவோ **வாரணவாசி** எனப்படுகின்றது.

ஆகவே, இப்பெயர் ஏற்பட்டது எவ்வாறு? ஏற்படக் காரணம் என்ன? காலம் எது? இதற்கு ஆதாரம் யாதேனும் அகப்படுகின்றதா? என்பவை சிந்திக்கத் தக்கன. அங்ஙனம் சிந்திக்குங்கால் ஒரு சிறு வெளிச்சம் கண்ணுக்குப் புலனுகின்றது. 'குலோத்துங்க சோழன் உலா' விலுள்ள சில தொடர்களும் அவற்றின் உரையுமே அச் சிறு விளக்கு.

**29.** **'கொற்றக் குலோத்துங்க சோழன் குவலயங்கள்**
**முற்றப் புரக்கும் முகில்வண்ணன் - பொற்றுவரை**

**30.** **இந்து மரபில் இருக்கும் திருக்குலத்தில்**
**வந்து மனுகுலத்தை வாழ்வித்த - பைந்தளிர்க்கை**

**31.** **மாதர்ப் பிடிபெற்ற வாரணமவ் வாரணத்தின்**
**காதற் பெயரன் கனகளபன்"**

நூலில் கொடுக்கப்பட்டுள்ள குறிப்புரை கொண்டு அறியத் தகும் பொருள் வருமாறு:- 'வெற்றியையுடைய குலோத்துங்க சோழன்; உலகம் முழுவதையும் காக்கின்ற மேகத்தையோத்த நிறத்தையுடையவன்; அழகிய துவார சமுத்

திரத்திலே யிருக்கின்ற சந்திரகுலத்தவரைச் சேர்ந்த சிறந்த குடும்பத்தில் பிறந்து வந்து சோழகுலத்தை வாழ் வித்தவளான பசிய தளிர் போன்ற கைகளையுடைய அழகிய பெண் யானையைப் (போன்ற மகளைப்) பெற்ற வாரணம் என்பான்-அந்த வாரணத்தின் அன்புடைய பெயரனுன் கனகளபன் என்னும் பெயருடையான்' என்பது.

இதுபற்றிநூலில் கோடுக்கப்பட்டிருக்கும் குறிப்புரை வருமாறு:-"வாரணம்-பெண் சக்கரவர்த்தியின் பிதா [வான பாண்டியன் முதலியாரைக் குமபிட]; அவர் யோகீசரான காலையிற் பேர், வாரணவாசித்தவர்."

"வாரணவாசி: இப்பெயருள்ள ஊரொன்று அரியலூருக்குத் தென்பாலுள்ளது[1]"

மேலே காட்டப்பெற்றவற்ருல் குலோத்துங்க சோழனுடைய பாட்டனுர் பெயர் வாரணம் என்பதும், அவர் யோகீசரான பிறகு 'வாரணவாசித்தேவர்' என அழைக்கப்பட்டார் என்பதும், அவர் பெயரால் ஊரொன்று அமைந்துள்ளது என்பதும் அறியப்படும். அறியவே, தன் பாட்டன் பெயரான 'வாரணவாசி' என்பதைக் குலோத்துங்கன் II குமரி சூழ்ந்த பகுதிக்குப் பெயராகச் சூட்டியிருக்கலாம்எனஊகிக்கலாம்அல்லவா?குலோத்துங்கன் இரண்டாமவன் அரசு கட்டிலேறியது 1133ல் ஆகும். சாசன காலம் 1201. ஆகவே, அதில் முரண்பாடு இருப்பதாகவும் சோல்வதற்கில்லை. முதற்குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டுக்கள் கன்னியாகுமரியில் உள்ளன. அவற்றில் இந்நாட்டை வாரணவாசி நாடு எனக் குறிப்பிடாமையும் கவனிக்கத் தக்கது.

---

1. குலோத்துங்க சோழனுலா; பக் 74.

நாட்டுக்குப் பல பெயர்கள் வழங்கி வந்தாற் போலக் குமரிக்கும் பல பெயர்கள் வழங்கி வந்தன. 'கழிக்குடி' என்பது அவற்றுள் ஒன்று.

'ராஜராஜப் பாண்டிநாட்டு உத்தம சோழவள நாட்டுப் புறத்தாய நாட்டுக் **குமரிக் கழிக்குடி** ராஜராஜ ஈசுவரமுடையார்''[1]

**என வந்துள்ளது.**

''இன்னாட்டுக் **குமரியான கங்கை கொண்ட சோழ புரத்து**[2]''-என வரும் தொடரால் இதற்குக் 'கங்கை கொண்ட சோழபுரம்' என்னும் பெயர் இருந்தமையும் அறிகிறோம். இவ்வாறு ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோர் பெயர் இதற்கு ஒட்டுப் பெயராய் ஏற்பட்டுக் கொண்டிருந்தபோதிலும் 'குமரி' என்னும் பெயர் மட்டும் இளமை நலம்குன்றாமல் உலகப்பிரசித்தமாக விளங்கிக்கொண்டேயிருந்தது. ஏன்? துடிப்புடைய கன்னித்தன்மை வாய்ந்த குமரித் தெய்வத்தின் பெயரல்லவா அது? அங்கே கன்னித் தெய்வமாய அன்னை கண்கண்ட தெய்வமாய் மன்னி வீற்றிருக்கின்றாள். தன்கண் மூழ்கினார் மாசுகளைப் போக்கி இன்பநிலை அடைவிக்கவல்ல நீர்த்துறை செவ்வையாக அமைந்துள்ளது. முக்கடலும் முழங்கிக்கூடும் அம்முனை எத்தகைய மன நோயையும் உடல் நோயையும் அகற்றி ஆனந்தம் அளிக்கின்றது.

ஆகவே, இத்தகைய சிறந்த தலம் தம் ஆட்சியின் கீழ் இருப்பதை அக்கால அரசர் ஒவ்வொருவரும் பெரும் பேறுகக் கருதினர். குமரிக்கு உரியான் என்னும் பொருள் பட இந்த இடத்தோடு சார்த்தித் தமக்குப் பெயரும் சூட்டிக்கொண்டனர்:-

---

**1. T. A. S. Vol; I. P. 168. 2. T. A. S. Vol; I; P. 249.**

'குமரித்துறைவன்', 'குமரிச்சேர்ப்பன்' முதலான பெயர்களை அவர்கள் தாங்கியிருந்ததாக அறிகிறோம்.

**'இறைவன் அகளங்கன் எங்கோன் குமரித்**
**துறைவன்.........................'** [1] - என வரும் தொடரால் விக்கிரம சோழனுக்குக் 'குமரித்துறைவன்' என்னும் பெயர் இருந்தமை தெரியப்படுகின்றது.

சோழர்களை விடவும் பாண்டியர்களிடம்தான் குமரி பெரும்பாலும் உரிமைப்பட்டிருந்தது. பாண்டியருக்குக் 'குமரிச் சேர்ப்பன்' என்பதே ஓர் உரிமைப் பெயர்.

**'செழியனே கூடற்கோமான் தென்னவன் வேம்பின் தாரோன்**
**வழுதியே குமரிச் சேர்ப்பன்.........................'**

என்பது சூடாமணி நிகண்டு. பாண்டியர்கள், குமரியன்னையைத் தம் குல தெய்வமாகவே கருதினார்கள். பராந்தக பாண்டியன் கல்வெட்டு ஒன்று தேவியைத் 'தென்னவர் தம் குல தெய்வம்' எனக் குறிப்பிடுகின்றது. அக் கல்வெட்டுப் பின்னர்த் தரப்படும்.

சோழர்களும் பாண்டியர்களும் இத்தலத்தை ஆண்ட காலத்தில் கோவில் காரியங்களுக்காகவும் வேறு அறங்கள் கருதியும் விட்ட நிபந்தங்கள் பல. அரசர்களேயன்றிப் பிறரும் நிபந்தங்கள் விட்டிருக்கின்றனர். அவை பற்றிய கல்லெழுத்துக்கள் கோவிலிலும் சுற்றுப்பக்கங்களிலும் காணப்படுகின்றன. கோவிலிலிருந்து பெயர்த்தெடுத்து வெளிப்படுத்தப்பட்ட கல்லெழுத்து மட்டுமே சுமார் நூற்றுக்கு மேலிருக்கும். இன்னும் வெளிப்படுத்தப்படாதவை எத்தனையோ உள்ளன. சுண்ணும்புப்பூச்சுக்குள் மறைந்து

---

1. **விக்கிரம சோழனுலா: 182.**

கிடப்பவையும், சிதைவு படுத்தப் பட்டவையும் பல. ஆராய்ந்து வெளியாக்கப்படாதவையும் பல. உதாரண மாகக் கோடிமரத்தின்அடிப்பீடத்திலிருக்கும்கல்லெழுத்து இன்னும் வெளியாகவில்லை. அதற்கடுத்த உள்ளிடமான சபாமண்டபம் மேற்குச் சுவரிலுள்ள தெலுங்குக் கல் லெழுத்தும், கோலம் போடுமிடத்தை அடுத்த சுவரிலுள்ள கல்லெழுத்தும் வெளிப்படுத்தப்படவில்லை. இப்படி எத் தனையோ இருக்கலாம்.

அதிகாரிகள் இத்துறையில் சற்றுக் கவனம்செலுத்த வேண்டும். தேவஸ்தானத்தார் இவற்றின் விலையை நன்கு உணரவேண்டும். சாதாரணக் கற்களுக்கும் எழுத்துக் கற்களுக்குமுள்ள வேற்றுமையை அவர்கள் உணராமலி ருப்பது வருந்தத் தக்கது. எத்தனையோ எழுத்துக் கற்கள் துண்டுபடுத்தப்பட்டு மதிற் சுவருக்கும், தளவரிசைக்கும், படிக்கல்லுக்கும் பயன்படுத்தப்படுகின்றன. ஆய்ந்துபார்த் தால் அரும்பெரும் புதையல் போன்ற எத்துணையோ சிறந்த பொருள்களை அவை தாங்கி நிற்கலாம். இருண்ட சரிதங்களுக்கு விளக்கொளியாயிருக்கலாம். இத்தகைய வற்றின் மதிப்பை யறியாமல் பாழாக்குவது வருந்தத் தக்கதல்லவா?

சில வருடங்களுக்கு முன் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் கன்னியாகுமரிக்குச் சென்றிருந்தபோது வெளிப் பிரகாரத்துக்குப் படிகளாயமைந்து கிடந்த இரண்டு கற்களில் எழுத்துக்கள் இருப்பதைக் கண்டார் கள். அவை, யாதோ ஓர் சாசனத்தின் பகுதிகள் என்பது தெளிவாயிற்று. ஆராய்ந்து பார்த்ததில் கோவில் இரண் டாவது பிரகாரத்தின் தெற்குச் சுவரில் பொறிக்கப்பட்டி

ருந்த சாசனப் பகுதி என்பது தெரியவந்தது. பிற்காலத்தில் அச் சுவரைப் புதிப்பித்தபோது பழைய கற்களில் சிலவற்றை மாற்றிவிட்டனர். எனவே சாசனத்தின் பல பாகங்களும் சிதைந்து போயின. அங்ஙனம் சிதைந்தவற்றையும் கூட்டிச் சேர்த்து எலும்பைப் பெண்ணுக்கினுற்போல உருவப்படுத்திவிட்டார் கவிமணி. அத்துடன் குறிப்புரையும் சாசன காலமும் ஆராய்ந்தெழுதி வெளிப்படுத்தினர்.[1] அவை சேரநாட்டில் பாண்டியர் கொண்ட வெற்றியும் பிறவும் விளக்கி நிற்பனவாதலால் கீழே தருகின்றேம்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருவளரச் செயம் வளர தென்னவர்தங் குலம்வளர அருமறைநான் கவைவளர வனைத்துலகுந் துயர்நீங்கத் தென்மதுரா புரித்தோன்றி தேவேந்திரனே டினிதிரு

2. ந்து மன்னர்பிரான் வழுதியர் கோன் வடிம்பலம்ப நின்றருளி மால்கடலை எறிந்தருளி மலையத்துக் கயல் பொறித்துச் சேரலனைச் செருவில் வென்று திறைகொண்டு வாகை சூடிக் கூப

3. கர்கோன் மகட்குடுப்பக் குல விழிஞுங் கைக்கொண்டு கன்னிப்போர் செய்தருளிக் காந்தளூர்ச் சாலைக் கலமறுத்து மன்னு புகழ் மறையவர்தம் மணியம்பலத் திருந்தருளி ஆங்கவர்க ளற

4. ம் வளர்ப்ப அமைத்த பேரா யிரத்தெண்ம ரவிரோதம் பணிப்பணியால் மறைபேர்த்துக் கல்நாட்டிப் பண்டுள்ள பேர்தவிர்த்து அளப்பனவும் முகப்பனவும் நிறுப்பனவும் கயலெழுதி அனந்தபுரத் தெம்மாற்

5. கு நிலவிய போன் மணிவிளக்கு நின்றெரியப் பத்தமைத்து ஆங்கமைந்த தாயநல்லூர் அட தென்னுட் டரையனென அறிவாகையால் அறிந்துணர்த்த **தென்னவர்தங் குல தெய்வம் தென் குமரி கன்...............**

6. ன் திருநாள் விழாவதனில் தைப்பூசப் பிற்றை நான்று வந்திரந்தோ ரெல்லாற்கும் மாற்றுதே தியாகமிட அறத்தால் விளங்

---

1. **கலைமகள் Vol; I, PP, 585-590**

கிய ஆழ்ந்த கேழ்விப் புறத்தாய நாடு பூமகட்களித்துத் தெலிங்க வீமங்

7. குளங்கொண்டு தென் கலிங்க மடிப்படுத்துத் திகை யனைத்து முடனுண்ட ஸ்ரீ கோற் சடைய பன்மரான திரிபுவனசக் கரவர்த்திகள் ஸ்ரீ பராந்தக தேவற்கு............ராஜராஜப்ப

8. ாண்டி நாட்டு உத்தம சோழவளநாட்டுப் புறத்தாய நாட்டுக் குமரிக் கன்னியா பகவதியார் தேவதானத்துக்கு இருப்ப தாக உள்ளோலை

..............................................................................................

இதன்பின் இன்னும் எட்டு வரிகள் கிடைத்துள்ளன வாயினும் அவை சிதைந்தே காணப்படுகின்றன. ஆதலின் இங்குத் தரப்படவில்லை. அவர்கள் முடிவின்படி இச்சாசன காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டின் முதற் பகுதி யாகும். இது பற்றி அவர்கள் எழுதியிருப்பது ஆராய்ச்சி யுணர்வுடையார் அனைவரும் கற்றுணரத் தகுந்த ஒன்ரு கும்.

இதில் - 'சேரலனைச் செருவில் வென்றது, கூபகர் கோனிடம் மகட்கொண்டது, குல விழிஞம் கைக்கொண் டது, காந்தளூர்ச்சாலை கலமறுத்தது, மணியம்பலத்து மறைபேர்த்துக் கல்நாட்டியது, அனந்தபுரத் தெம்மாற்கு மணிவிளக்குப் பத்தமைத்தது' முதலான செயல்கள் பராந்தக பாண்டியனும் அவன் முன்னேரும் இந்நாட்டிற் செய்தனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இதில் வரும் 'காந்தளூர்ச்சாலை கலமறுத்து' என்னும் தொடர், மிகுந்த கருத்து வேறுபாடுகளுக்கு இடமாயிருந்தது. பிறரெல் லாம் 'சாலை' என்ருல் துறைமுகம் என்றும், 'கலம்' என் பது மரக்கலத்தைக் குறிக்குமென்றும்' 'அறுத்தல்' என் பது அழித்தல் பொருளைத் தருமென்றும் கொண்டு

'பகைவர்களின் மரக்கலத்தை அழித்த மன்னனின் வீரச் செயலை விளக்குவதாகக் கருதினர். 'சாலை' என்பது 'நிலையம்' என்னும் பொருளைத் தருவதென்றும், அஃது இங்கே பிராமணர்களுக்கு ஒழுங்காக உணவளித்து உண்பிக்கும் ஊட்டுப்புரையை உணர்த்துமென்றும், இத்தனை பேருக்கு உணவளிப்பதென வரையற்று செய்வதையே 'கலமறுத்தல்' என்னும் தொடர் காட்டுமென்றும் (கலம்-உண்கலம்) தக்க ஆதாரங்களுடன் எடுத்து விளக்கிக் 'காந்தளூர்ச்சாலை' என்னும் பெயரால் நூல் ஒன்று எழுதியுள்ளார்கள் திரு. பிள்ளையவர்கள்.[1] அவர்கள் கோள்கைக்கு ஆதரவு தருவன கன்னியாகுமரிக் கல்வெட்டுக்களிலும் உள்ளன. அவை பின்னர்க் காட்டப்படும். இங்கே இச் சாசனம் பற்றி அவர்கள் கூறும் குறிப்பைக் கீழே தருகின்றோம்.

'மன்னுபுகழ் மறையவர்தம் மணியம்பலத் திருந்தருளி ஆங்கவர்கள் அறம் வளர்ப்ப அமைத்த பேராயிரத் தெண்மர் அவிரோதம் பணிப்பணியால் மறைபேர்த்துக் கல்நாட்டி'-என்னும் பகுதிக்கு அவர்கள் எழுதியுள்ள குறிப்பு வருமாறு:-

"இப்பகுதியிலடங்கிய விஷயங்கள் இன்ன என இது வரை யாரும் வெளிப்படுத்தினதில்லை. மணியம்பலம் எங்குள்ளது? காந்தளூர்ச் சாலையில் உள்ளதா? அல்லது வேறெங்குமா? 'அறம் வளர்ப்ப' என்பது எதைக் குறிக்கின்றது? ஆயிரத்தெண்மர் எவர்? அச்சாலையில் தங்கியிருந்தவர் மறையவரா? அந்நியரா? 'மறைபேர்த்துக் கல்நாட்டி' என்பதிலிருந்து அறியவேண்டுவதென்ன? இவை யாவும் ஆராய்ச்சிக்குரிய பாகங்கள்.

1. Kerala Society Papers, Travancore. Series 2; PP. 100-106-லும் இதுபற்றிய வரலாற்றைப் பார்க்கலாம்.

"காந்தளூர்ச் சாலையைத் தென்னாட்டின் தக்ஷசிலை யென்றோ, நாளந்தா என்றோ, விக்கிரமசிலை யென்றோ கூறுவது மிகையாகாது. வடநாட்டு மன்னர் நாளந்தா முதலியவற்றை எவ்வாறு ஆதரித்து வந்தனரோ அவ் வாறே தென்னாட்டு மூவேந்தரும் காந்தளூர்ச் சாலையை ஆதரித்து வந்திருக்கின்றனர். நம் பராந்தக பாண்டியன் **சேரநாட்டை வென்று அடிப்படுத்திய பொழுது** அந்நாட்டின் கண்மணிபோல் விளங்கிய காந்தளூர்ச் சாலையினைக் கைப் பற்றி அதில் சில சீர்திருத்தங்கள் செய்திருப்பதாகத் தெரிய வருகிறது. மணியம்பலம் என்பது அச்சாலையி லுள்ளார் அனைவரும் ஒருங்கு கூடும் சபா மண்டபமாம். 'ஆயிரத் தெண்பர்' என்பவர் அங்குத் தங்கியிருத்தற்குரிய ஆயிரத்தெட்டு அந்தணர்களேயாவர். வேதாகமங்களை ஆராய்ந்து உண்மைகளை அறிந்து உலக தர்மங்களைப் பாதுகாப்பதே அவரது முக்கிய கடைமையாம். ஒவ்வோர் அரசனும் அச்சாலையைக் கைப்பற்றியவுடன் அதில் அநேக சீர்திருத்தங்கள் செய்து வந்திருக்கின்றனன். சாலை யில் உண்ணுங்கலங்கள் இத்தனையென்று திட்டப்படுத் துவதோடு அங்கு ஓதப்படும் வேதாகமங்களில் விசேஷப் பயிற்சிக்குரிய பகுதிகள் இன்ன இன்னவையென அறிவிற் பெரிய அந்தணர் குழாத்தைக் கொண்டு தீர்மானம் செய் விப்பதும், அத்தீர்மானத்தைச் சிலையில் எழுதி நாட்டுவ தும் பண்டையரசரின் வழக்கமாயிருந்த தென்பது 'மறை பேர்த்துக் கல்நாட்டி' என்ற சொற்றொடரால் அறியக் கிடக்கின்றது."

கவிமணியவர்களின் இச்சிறந்த ஆராய்ச்சிக் குறிப் பின் மூலம் சோழபாண்டிய வேந்தர்கள் [1]காந்தளூர்ச் சாலையைக் கைப்பற்றித் தம் ஆட்சியை நாட்டி வந்த

---

1. இது திருவனந்தபுரத்திலிருக்கும் 'வலியசாலை'யில் ஒரு பகுதி யாயிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

தோட்டன்றி அச்சாலையைக் கண்ணெனக் காத்துவந்தமை யும் அறியப்படும். காந்தளூர்ச்சாலை கலமறுத்த செய்தி பாண்டிய மன்னர் சாசனங்களை விடவும் சோழ வேந்தர் சாசனங்களிலேதான் மிகுதியும் காணப்படுகிறது. இராஜ ராஜன் முதலாகக் குலோத்துங்கன் வரையுள்ள அரசர் களின் வரலாறுகளிலெல்லாம் இதனைக் காணலாம்.

சோழ வேந்தர்கள், குமரியிலும் சாலை ஒன்று அமைத்து முட்டின்றி நடத்தி வந்ததாகக் கல்வெட்டுக் களால் தெரிகின்றோம்.

"குமரி ராஜராஜன் சாலையின் சாலாபோகம் நாஞ்சிநாட்டு மணற்குடி ஊரோங் கெத்தீட்டு[1]" எனவும்,

"ராஜராஜ ஈசுவரத்துச் சட்டப் பெருமக்கள் வசம் ஆட் டாண்டு தோறும் இந்நெல்லு அழக்கக் கடவோமாக இசைந்து இக்காசு கொண்டோ மணற்குடி ஊரோம்[2]" எனவும்,

"ராஜ ராஜப் பாண்டி நாட்டு உத்தம சோழவள நாட்டு புறத் தாய நாட்டுக் கழிக்குடி ஸ்ரீ வல்லவப் பெருஞ்சாலையான ராஜராஜ பெருஞ்சாலைக்கு நாஞ்சிநாட்டு மணற்குடியான மஹிபால குலகாலப் பேரழத்து[3]" —எனவும்,

"இவ்வூர் (குமரி) ராஜராஜன் சாலைக்கு சாலாபோகமான ஊர்கள்[4]" —எனவும்,

"குமரி மங்கலத்துச் சட்டர்கள்[5]" —எனவும்,

"ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க (சோழதே)
வற்கு யாண்டு (பதிஞலாவது)
இராஜராஜ (ப்பாண்டிநாட்டு) உத்

1. T. A. S. Vol. I. P. 242. 2. T. A. S. Vol. VI. P. 150.
3. T. A. S. Vol. I. P. 136. 4. T. A. S. Vol. I. P. 165.
5. Kerala Society papers; Series 5. Vol. I. P. 272.

தம சோழவள நாட்டு புறத்தா
ய நாட்டுக் குமரிக் கன்னி (யாபடா)ரி
யார் கோயிலில் பிராமணரை **அமிது**
**செய்யக் கற்பித்த கலம்** நாம் ராய
க்குடிச் சாலா போகத்திற் கலம் ப
ன்னிரண்டும் பெருங்குடிச் சாலா
போகத்தில் கலம் இருபத்திர(ண்)டும்
கெங்கலூரான சிக.........மங்கலத்
துக்கலம் பன்னிரண்டும்.............
ச்சாத்தனேரிக் கலம் இரண்டும் அ
.............................இச்சா
லாபோகத்தில் (ஐம்ப)து பிராம்மண
ர் அமிர்துவரியில் இட்டுக்குடுத்தோம்"[1] எனவும்

வருபவை அதை விளக்கும். பிற்கூறிய கல்லெழுத்துக் குமரிகோவில் மணிமண்டபத்தில் வடக்கிலுள்ள தூணில் பொறிக்கப்பட்டிருக்கிறது. முதற் குலோத்துங்க சோழனுடைய 14-வது ஆண்டில் எழுந்த தமிழ்க் கல்வெட்டு இது. அவன் ஐம்பது அந்தணர்களுக்கென உண்கலம் வரையறை செய்ததை இது சொல்கின்றது. இதில் வரும் 'அமுது செய்யக் கற்பித்த கலம்' என்னும் தொடர் தே-வி அவர்களின் கொள்கையையன்றி வேறெதனையும் உணர்த்தாமை உய்த்துணரப்படும். அன்றியும் ஜெய்மினீய ஸாம வேத அத்யயனம் சம்பந்தமாக வரும் ஒரு கல்வெட்டில் பின் வரும் செய்தி காணப்படுகின்றது.

"மெய்க்காட்டுத் தீட்டினரெல்லாரும் தம்மில்அஞ்சு புரியிலும் சொல்லிக் **கலமறுத்து** நல்லாரானர் ஒருவற்கு விருத்தியான இக்காசு மூன்றும் இத்தேவரே கொடுப்பாராக[2]" என்பது அது.

---

1. **Epigraphia Indica Vol. XXVI No. 37. PP. 274, 275.**
2. **'266 of 1923' 'The Cholas' by Neelakanta Sastri; Vol. II, Part II, P. 767.**

இதில் வரும் 'கலம்' 'அறுத்து' என்னும் சொற்களுக்கு அவர்கள் கூறியாங்கு 'மரக்கலம்' என்றும், 'அழித்து' என்றும் உள்ள பொருள்கள் பொருந்துமா என்பது சிந்திக்கத்தக்கது. ஆகவே, சாலையில் கலமறுத்தல் என்றால் ஊட்டுப்புரையில் இத்தனை பேருக்கென உண்கலம் வரையறை செய்தலேயாம் எனவும், இத்தகைய சாலைகள் ஆங்காங்கே அரசர்களால் நிறுவிப் போற்றப்பட்டு வந்தன என்பதும், கன்னியாகுமரியிலும் சாலை ஒன்று இருந்தது என்பதும், 'ஸ்ரீவல்லவப் பெருஞ் சாலையான ராஜராஜப் பெருஞ்சாலை' எனக் கூறப்பட்டிருப்பதால் ஸ்ரீவல்லவன் காலத்திலேயே அது இருந்ததென்பதும், முதல் இராஜராஜன் அதனைச் சீர்திருத்தியமைத்தானென்பதும் நன்கு விளக்கமாகின்றன.

இனி, குமரிகோவில் இரண்டாவது பிரகாரத்தின் வடமேற்கு மூலையிலிருக்கும் ஒரு சிறு கோவிலைப் பற்றிச் சில தெரிந்துகொள்ள வேண்டும். தெரியப் புகும்போது விளங்கி நிற்பது அம்மன் வரலாறு? அதிகாரிகளின் கவனக் குறைவா? என்பதை வாசகர்களே தீர்மானித்துக் கொள்வார்களாக. இத் தேவியின் பெயர் கோட்டையம்மன் என்றும், விக்கிரகம் மங்கம்மாளால் தாபிக்கப்பட்டதென்றும் சொல்கின்றார்கள். தேவிக்கு இப்பெயர் எவ்வாறு ஏற்பட்டது என்று விசாரிக்கத் தொடங்கினால் போதும்; எத்தனையோ விதமான கதைகளைக்கேட்கலாம். எல்லாம் 'கோட்டை' என்னும் அடைமொழியை வைத்துக் கொண்டு புனைவதாகத்தான் இருக்கும். ஒருவர் சொல்கின்றார்- "மங்கம்மாள் தன் அரண்மனையில் வைத்துப் பூசை செய்யப்பட்டு வந்த விக்கிரகம் இது; அதைக் குமரி கோவிலில் கொண்டு தாபிக்கத் தீர்மானித்தபோது 60 கோட்டை அளவுள்ள நிலத்தைத் தேவி பேருக்கு முற்

றூட்டாக எழுதிக்கொடுத்து இங்கே கொண்டுவைத்தாள்; அதனல் இப்பெயர் ஏற்பட்டது" என்று.

இன்னெருவர்- "முகிலன் இங்குப் படையெடுத்து வந்த காலத்தில் கோவிலுக்குள் புகுந்து தேவியைக்காண வேண்டுமென்று சொன்னன்; அர்ச்சகர் இந்தத் தேவி விக்கிரகத்தை எடுத்து நடையில் வைத்துக் காட்டினர்; அதனைத் தனக்கு வேண்டுமென்று வாங்கிக்கொண்டு போய் அண்மையிலிருக்கும் வட்டக்கோட்டையில் சில நாள் வைத்திருந்து விட்டுப் பின் கொடுத்தனுப்பினன்; அப்படிக் கோட்டையில் கொண்டு வைக்கப்பட்டிருந்தமையால் கோட்டையம்மன் என்னும் பெயர் பெற்ருள்" என்கின்ருர்.

இவர்கள் கூற்று ஒருபுறமிருக்க, இன்னெரு செய்தியும் சிந்திக்கத் தக்கது. இச் சிறு கோவில் மங்கம்மாள் காலத்தில் கட்டப்பட்டதென்றும், விக்கிரகம் அவ்வரசியால் கொண்டு வரப்பட்டுத் தாபிக்கப்பட்டதென்றும், பரம்பரை வரலாறு ஒன்றினல் அறிகின்ரேம். அறிஞர் 'ஹீராஸ்' என்பார் விஜயநகர ஆட்சி பற்றி எழுதியுள்ள நூலில் 'கோட்டியம் நாகம நாயுடுவின் மகனை விசுவநாத நாயுடு என்பான் இந்துமதப் பற்று மிகுதியும் உடையவனயிருந்தானென்றும், அவன் விஜயநகரத்திலிருந்து மதுரைக்கு ஒரு துர்க்கா தேவியின் விக்கிரகம் கொண்டு வந்தானென்றும், மதுரையை யடைந்ததும் தேவி கோயிலைத் திருத்திப் பெரிதாக்கி அமைத்தானென்றும் கூறுகின்ருர். [1] இவன் வழி வந்தவளே மங்கம்மாள். கோட்

**1. Hinduism was also fostered by "the pious son of Kotyum Nagama Naidu" as he is called in a grant of 1560. Visvanatha was a very stanch Hindu who carried from Vijayanagara to Madura the statue of the goddess Durga, and as soon as he reached the capital, restored and enlarged its temple. ('The Aravidu Dynasty of Vijayanagara' by Father H. Heras, Vol. I. P. 167.**

டியம் விசுவநாத நாயுடு துர்க்கை விக்கிரகம் மதுரைக்குக் கொண்டு வந்ததாக அறியப்படுவதாலும், அவன் வழி வந்த மங்கம்மாள் குமரி கோவிலில் ஒரு தேவி விக்கிரகம் தாபித்ததாகப் பரம்பரை வழக்குக் கொண்டு அறியப்படுவதாலும், இப்போது தேவிக்கு வழங்கி வரும் 'கோட்டை' என்னும் அடைமொழி 'கோட்டியம்' என்பதன் திரிபாக இருத்தலும் கூடுமாதலாலும், இங்குள்ள தேவி கோட்டியம் விசுவநாதனால் மதுரைக்குக் கொண்டு வரப்பட்டவள்தானோ என்று ஊகிக்க இடமிருக்கிறது.

இக்கோவில் பிற்காலத்தில் கட்டப்பட்டது என்பதற்கு ஏற்புடைய வேறு ஆதாரமும் இல்லாமலில்லை. கோவில், இரண்டாவது சுற்றுப்பிராகாரத்தின் வடமேற்கு மூலையிலிருக்கிறதென்று முன்னமே சொன்னோம். மூலையாயிருந்தால் ஒரு சுவர் மட்டும் கட்டினாற்போதும்; முன்புறம் அழி செய்து கொள்ளலாம் என்று அறிவிற் சிறந்த அக்கால அதிகாரிகள் கருதியிருக்கவேண்டும். தேவியின் வலப்புறமாக ஒரு சுவர் மட்டும் கிழக்கு மேற்காகக் கட்டினார்கள். அச்சுவர், பின்புறச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள ஒரு சிறந்த கல்லெழுத்தைச் சிதைத்துக் கொண்டு நிற்பதைப் பற்றி அவர்கள் கவலைப்படவே யில்லை. அதில் சிறிதேனும் கருத்திருக்குமானால் - அம்மனுக்கு மூலைதான் வேண்டுமென் றிருந்தாலுங்கூட, மேற்குச் சுவரோடு ஒட்டாமல் சிறிது இடம்விட்டு மூன்று சுவர்கள் எழுப்பி ஒரு சிறு கோவில் கட்டியிருக்கலாமல்லவா? விடுபட்ட இடம் அக்கோவிலுக்குச் சுற்றுப்பிராகாரமாகவும் அமைந்திருக்குமே! ஒட்டுக் குடியிருப்பு அம்மனுக்குச் சுற்றுப்பிராகாரம் கொடுத்துக் கவுரவப் படுத்துவது சிற்பசாத்திர விதிகளுக்கு முரண்பாடாக

இருக்குமோ என்னவோ? அது பற்றி நமக்குத் தெரியாது. என்னவாயினும் அந்த அரிய கல்லெழுத்து கதவிடுக்கில் வைத்து நசுக்கப்பட்ட நாய்போல, நாக்குத் தள்ளிய தலை வெளிப்புறமும், உடல் முழுதும் உட்புறமுமாகக் கிடக்கிறது.

இதைப் பார்த்த அறிஞர்கள் மிகவும் நொந்தனர். அதன் முழு வடிவமும் பார்ப்பதற்கு ஏங்கிக் கிடந்தனர். பலநாள் காத்திருந்தனர். கடைசியில் ஓர் அரிய தருணம் வந்து வாய்த்தது. அக்கோவிலைப் பழுதுபார்ப்பதற்குத் தேவி விக்கிரகத்தை அப்புறப்படுத்தினார்கள். இதுதான் சமயமென்று ஆராய்ச்சியில் பேரார்வம் படைத்த நமது தே-வி யவர்கள் ஓடோடியும் வந்தார்கள். அரிதின் முயன்று அத்தனையும் பெயர்த்தெழுதினார்கள். பிழையற ஆய்ந்து 'கேரளா ஸோஸைட்டி பேப்பேள்ஸில்' பதிப்பிக்கவும் செய்தார்கள். அது ஜடிலவர்மன் குலசேகர பாண்டியன் சாசனம். அவன் காலம் கி. பி. 1190-1216 வரை. மடமொன்று கட்டித் தேவியின் தைப்பூசத் திருநாளுக்கு வரும் பரதேசிகளை ஊட்டுவிப்பதற்காக நிபந்தம் விட்டதைக் குறிப்பிடும் சாசனம் இது. இதில் வரும் அவன் மெய்க்கீர்த்தி இனிய பாநடையில் அமைந்திருப்பதால் அதனை மட்டும் தருகின்றோம்.

"1. ஸ்வஸ்தி ஸ்ரீ பூதல மடந்தை புகழுடன் போலிய வேதமும் தமிழும் மேன்மையில் விளங்க, கற்புடேத் திருமகள் பொற்புயத்திருப்பத், திக்கிரு நான்குஞ், சக்கரவாளமுஞ், சூழும் புவனமேழுங் கவிப்ப, வெண்குடை நிழற்கிட செங்கோ னடப்ப, நாடோறு மதிய

2. முந் நாயிறும் வலங்கொள, ஆடகப் பொருப்பின் அரைசுமீனிருப்ப, சுந்தரமார்பின் இந்திரன் பூட்டிய, ஆரமு மலங்கலு மழகுடன் திகழ, வினையும் புலியும் வில்லும் சுரம்புக, ஆணை மன்னவ

ரடிமலர் சூட, மரபில் வந்த மணிமுடி சூடி, விளங்கிய கதிர்மணி வீரஸிம் ஹாஸநத்து, உலகமுழுவதுமை

3. டயாரோடும் வீற்றிருந்தருளிய மாமுதல் மதிக்குலம் விளக்கிய கோமுதற் கோச்சடய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவர் மாடக்குளக்கீழ் மதுரைக் கோவிலில் உள்ளாலே புகழாபரணன் மண்டபத்துப் பள்ளிப்பீட முனையதரேயனில் எழுந்தருளியிருந்து[1] .............."

இப்படிக் கோவிலில் கட்டி மறைக்கப்பட்டவையும், சுண்ணும்பு பூசி மறைக்கப்பட்டவையும், சுவர் எழுப்பி மறைக்கப்பட்டவையும் ஆன கல்வெட்டுக்கள் இன்னும் பல இருக்கலாம். அவற்றையெல்லாம் அதிகாரிகள் கவனித்து வெளிக்கொண்டு வருவதற்கு முயல வேண்டும். திறந்த இடத்தில் இருப்பவற்றைச் சிதைந்து போகாமல் பாதுகாக்கவேண்டும். மணிமண்டபத் தூண்களில் பொறிக்கப்பட்டுள்ளவையும், சோழ வமிச வரலாறு புகல்பவையுமான வீர ராஜேந்திர தேவனுடைய சாசனங்கள் மாய்ந்து போகாவாறு செம்புத் தகடுகள் கொண்டு போதிந்திருப்பது நல்ல முறையாகும். ஏனைய இடங்களிலுள்ளவற்றை வாசிப்பதற்கேற்றவாறு துலக்கிச் செம்மைப்படுத்துவது நலம். இது நிற்க. கன்னித் தமிழ்க்குக் காவலாயிருக்கும் குமரித் தெய்வத்தை வணங்கிவிட்டு அண்மையிலிருக்கும் குகநாதேசுவரம் வரைச் சென்று வருவோம்.

இது குமரிக்கோவிலினின்று கால் மைலுக்கு வடக்கே இருக்கிறது. முதல் இராஜராஜ சோழனுல் கட்டப்பட்டு ஒரு காலத்தில் சீரும் சிறப்பும் பெற்றிருந்த இத் தேவாலயம் இன்று எட்டு மணிக்கே அர்ச்சகர் நடையடைப்பதற்கு எட்டிப் பார்க்கின்ற நிலையில் வறுவிதாயிருக்கிறது.

---

1. 'Kerala Society Papers' Series 5, PP. 271-72.

இடிந்து பாழ்பட்டுக் கிடந்த முன் மண்டபம் சுற்றுமதில் என்பவற்றை மிக அண்மையிலேதான் திருத்தியமைத்தி ருக்கிருர்கள். முதல் பிராகாரத்தின் நடுவே தொடர்பற்றுத் தனித்திருக்கின்ற கோவில் இரண்டே அறைகளையுடைய தாய் அழகிய வேலைப்பாடுடையதாய்க் காண்கின்றது. கோவிலின் புறச்சுவர் அடிவரிசை யெங்கும் கல்லெழுத் துக்கள் உள்ளன.

சிவலிங்கம் வீற்றிருக்கின்ற கர்ப்பக் கிரகத்தின் வெளியே ஒரு ஆள் மட்டும் சுற்றி வருமளவில் ஒரு சிறு பிராகாரம் அமைந்திருப்பது சாதாரணமாய் வேறெங்கும் காணமுடியாத புதுமையாகும். அது முன்னுலெல்லாம் ஒரு குகை போலவே இருந்தது. பாம்புகளுக்கும் வௌ வால்களுக்கும் நல்ல பாதுகாப்பான இடமாக இருந்தது அக்குகை. கோவிலைப் புதுப்பித்த காலத்தில் குகையின் முப்புறச் சுவர்களிலும் இவ்விரண்டு பலகணிகள் வீதம் அமைத்து வெளிச்சம் வரச் செய்துள்ளனர். அக் காலத் தில் எழுத்துக் கற்கள் பல சேதப்படுத்தப்பட்டிருக்க வேண்டுமென்பது, இச் சுற்றுப்பிராகாரத்தின் தளவரிசை யில் வட்டெழுத்தில் பொறிக்கப்பட்ட ஒரு துண்டுக்கல் பாவப்பட்டிருப்பதிலிருந்தே அறியலாம். இவ்வளவு கவலைக் குறைவு நம்மவர்களுக்கு எப்படி ஏற்பட்ட தென்று தெரியவில்லை.

சுவாமியின் பெயர் 'குகைநாதேசுவரர்' என்றும், 'குகநாதேசுவரர்' என்றும், 'குகனுண்டேசு்வரர்' என்றும் சொல்கின்ருர்கள். 'கோனுண்டேசுவரர்' என்று சொல் கின்றவர்களும் இல்லாமலில்லை. இவற்றுள் முற்கூறிய பெயருக்குத் திரு. கோபிநாதராயரவர்கள் கூறுகின்ற காரணம் வருமாறு:- 'மூலஸ்தானத்தைச் சுற்றிக் குகை

போல் இடுங்கிய பிரகாரம் ஒன்று காணப்படுகிறது; அதனால் குகையினுள்ளே இருக்கும் ஈசுவரர் குகை நாதேசுவரர் எனப்பட்டார்[1]' என்பது.

ஆனால் கன்னியாகுமரித் தலபுராணம், சுவாமியின் பெயர் 'குகனாண்டேசுவரர்' எனக் கொண்டு அதற்குக் காரணமும் கூறுகின்றது. தம் தந்தையைப் பூசித்து வழிபடக் கருதிய முருகப்பிரான் இவ்வுலகிற் சிறந்த தலம் யாதென்று ஆராய்ந்து, குமரியைத் தேர்ந்து அங்கே சிவபிரானைத் தாபித்துப் பூசனை புரிந்தாரென்றும், அப்பிரான் தம்மை யாண்ட காரணம் பற்றிக் 'குகனாண்ட ஈசன்' எனப் பெயர் அமைத்தாரென்றும் கூறும்.

**"அண்ணலங் கயிலை ஈசன் அருளிய குகன்தா னிந்த**
**மண்ணினிற் பெருமை சாலும் மகிமைசேர் தலத்தை யெல்லாம்**
**எண்ணியே குறித்துப் பார்த்திங் கெழில்திகழ் குமரி யென்னும்**
**புண்ணியத் தலம்போல் இல்லை புனிதநற் றலம்தா னென்றே.**

**'ஆங்கதில் அரனைப் பூசித் தருச்சனை புரிந்து ளோருக்**
**கோங்கதி பலம்தா னுண்டாம் என்றவன் உளத்தி லெண்ணித்**
**தேங்கமழ் சோலை சூழும் திருநகர்க் குமரி யென்னும்**
**பாங்குறு பெருமை மிக்க பதியதன் இடத்தி னெய்தி.**

**'மகனெனும் குகன்தான் அந்த மகிமைசேர் குமரி யங்கண்**
**அகமகிழ் தாதை யான அரன்தனைத் தாபித் தன்பால்**
**தகைமைசேர் உபசா ரங்கள் தம்மொடும் பூசை செய்து**
**குகன்தனை யாண்ட ஈசன் எனும்பெயர் கூறிப் பின்னர்"**

என்பன அதனை விளக்கும் பாடல்கள்.

குகனே, தன்னை ஆண்ட தன் தந்தைக்குத் தன் பெயரோடு சார்த்திப் பெயரிட்டார் என்பது பொருந்துமா

1. T. A. S. Vol. I. P. 161.

என்னும் கேள்வி வரவேற்கத் தக்கது. அங்ஙனமாயினும் குகநாதனாகிய தன்னை ஆண்ட ஈசுவரன் 'குகநாதேசுவரன்' என்ற பெயரால் அழைக்கப்பட்டிருந்தாற் போதாதா? என்பதும் ஒரு கேள்வி. இவை ஒருபுறமிருக்க, இத் தேவர்க்குப் பெயர் அமைந்த வகைபற்றி இன்னொன்றும் கருதவேண்டும். இங்குப் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டு ஒன்றில்-

1. "ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாறபன்மரான உடையார் ஸ்ரீ விக்கிரம சோழபாண்டியதேவற்கு யாண்டு உ௰கூ இராஜராஜப் பாண்டிநாட்டு உத்தம சோழவளநாட்டுப் புறத்தாய நாட்டுக் கழிக்குடி **ராஜராஜேசுவரத்துப்** பெரும...............

2. தியெதியும் செவ்வாய்க் கிழமையும் பெற்ற பூசத்தினாள் இத்தேவர் கோயில் முகமண்டபத்துக் கூட்டங் குறைவறக் கூடியிருந்து செய்த **சபா** காரியமாவது இன்னாட்டுக் குமரியான கங்கை கொண்ட சோழபுரத்து வியாபாரி ஆச்சன் மாற்றிலியைத் **திருப்பெந்தீசுவரம் உடையார்**.................[1]"

என்னும் பகுதி வருகின்றது. இதனால் கோவிலின் பெயர் 'இராஜராஜேசுவரம்' என்பதும், சுவாமியின் பெயர் 'திருப்பெந்தீசுவரமுடையார்' என்பதும் தெரிய வருகின்றன. இக்கோவில் இராஜராஜசோழனால் கட்டப்பட்டதால் இப்பெயர் பெற்றது. இவனே தஞ்சைப் பெரிய கோவிலையும் கட்டியவன். அதுவும் 'இராஜராஜேசுவரம்' என்றே அழைக்கப்பெறும். அங்குள்ள சுவாமியின் பெயர் 'பிரகதீசுவரர்' என்பது. காரணம் பெரிய உருவத்தோடு இருப்பதாகும். 'பிரகத்' என்பதற்குப் 'பெரிய' என்பது பொருள். பிரகத் கதை - பெருங்கதை என வழங்கப்படுவதைப் பார்க்க.

---

1. T. A. S. Vol. I. P. 249.

இங்குள்ள இராஜராஜேசுவரத்து லிங்கமும் கோவில் அளவுக்குத் தகுந்தபடி யன்றிச் சற்றுப் பெரிதாகவே யிருப்பதை நேரில் பார்த்தவர்க்கெல்லாம் உணரமுடியும். ஆகவே, இராஜராஜனுல் கட்டப்பட்ட தஞ்சைக்கோவில் இராஜராஜேசுவரம் என்றும், அங்குள்ள தேவர் - பிரகதீசுவரர் என்றும் பெயர் பெற்றுற்போல, அம்மன்னனுல் குமரியில் கட்டப்பட்ட இக்கோவிலும் இராஜராஜேசுவரம் என்றும், தேவர் பிரகதீசுவரர் என்றும் பெயர் பெற்றிருத்தல் கூடியதேயல்லவா? அப்படியானுல் திருப்பெங்தீசுவரம் உடையார் என்னும் பெயர் எவ்வாறு ஏற்பட்டது? என்று கேட்கலாம். இதற்கு விடையிறுத்தல் எளிது. 'திருப்பிரகதீசுவரமுடையார்' என்னும் பெயரே 'திருப்பெங்தீசுவரமுடையார்' எனச் சிதைந்திருக்க வேண்டும் என்று கருதுதல் தவருகாது. இது ஆராய்ச்சியாளர் முடிவுக்கு விடப்படுகிறது.

இங்கே பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன என்று சொன்னோம். அவற்றுள், அறங்கருதிவிட்ட நிபந்தத்தைக் குறிப்பனவும் சில. சோழவேந்தன் மந்திரியான 'மங்கலக்கால்மன்' என்பான் தண்ணீர்ப் பந்தல் அமைத்து அதற்கு மணற்குடியிலே நிபந்தம்விட்ட செய்தியை இங்கே பொறித்திருக்கின்ருன். இரண்டு வெண்பாக்களிலே அது சொல்லப்படுகிறது.

*** 'தெண்டிரைநீர்த் தென்குமரி மாநகர்த்தண் ணீர்ப்பந்தல்**
**எண்டிசையும் ஏத்த இனிதமைத்தான் - [1] விண்டிவரும்**

---

* T. A. S. Vol; I P. 169.

1. வண்டு என்றிருக்க வேண்டும்; வண்டு இவரும் எனப்பிரிக்க.

**[1] ஐந்தெரிய லான்அய்யன் நம்பி அடல்வளவன்**
**மந்திரி[2] தென் மங்கலக்கால் மன்**
**[3]மானமிக்க வேல்ஐயன் மஙகலக்கால் [4]மந்குமரித்**
**தானமைத்த பந்தலிற்றண் ணீரட்ட - [5]தேநரைத்த**
**[6]மய்த்தங்கு சோலை மணற்குடியி லேவைத்தான்**
**நித்தம் பதினுழி நெல்'** என்பன அவை.

இக்கோவிலில் காணப்படும் இன்னொரு கல்வெட்டு வருமாறு:-

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்வஸ்திஸ்ரீ | 4. | யாண்டு ௩௰௪ மு |
| 2. | கோப்பகேச | 5. | ப்பத்தோன் |
| 3. | ரிபற்மற்(க்)கு | 6. | றாவது(அ)த்த............[7] |

இது முதற்பராந்தக சோழன் காலத்தில் உண்டானது என்று திரு கோபிநாதராயரவர்கள் கூறுகின்ருர்கள். இது ஏற்றுக்கொள்ளக் கூடியதாயில்லை. ஏனென்ருல் இராஜராஜனுல் கட்டப்பட்ட இக்கோவிலில் அவன் தந்தையான முதற்பராந்தக சோழன் காலத்துக் கொடுத்த சாசனம் எவ்வாறு இருக்க முடியும்? ஆகவே ஒன்றில் அக்கல் வேறு எங்கிருந்தேனும் கோவில் கட்டிய காலத்தில் கொண்டுவரப்பட்டிருக்கவேண்டும்; அல்லது அதில் குறிப்பிடப்படுகிறவன் முதற்பராந்தகனன்றி வேருேர் மன்னனுயிருக்கவேண்டும்? இதுபோன்ற இன்னொரு கல்வெட்டுச் சம்பந்தமாகத் திரு. **A. S.** இராமநாதய்யர் அவர்கள் கூறியிருப்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது[8].

---

1. அம்தெரியல் - அழகிய மாலை.
2. தென்மங்கலக்கால் என்பது ஓர் ஊர்ப் பெயர் எனத் தோன்றுகிறது. 3. T. A. S. Vol I. P. 170.
4. மன்-என்றிருக்கவேண்டும். 5. தேனிரைத்த-தேன் நிரைத்த
6. மை தங்கு-மேகங்கள் தங்கப்பெற்ற.
7. T. A. S. Vol. I. P. 237. 8. T. A. S. Vol. I. P. 149.

குமரி கோவிலிலும் இங்குமாக நூற்றுக் கணக்கான கல்லெழுத்துக்கள் இருக்கின்றன. அவற்றுள் பகவதி நாய்ச்சியார் கோவிலில் வடமொழியிலும் தெலுங்கிலும் பொறிக்கப்பட்ட ஒன்றிரண்டு சாசனங்களைத் தவிர மீதி அனைத்தும் தமிழே. அவை சரித்திர காலம் முதல் மிகச் சமீப காலம் வரையுள்ள சோழ பாண்டிய வேந்தர்கள் கொடுத்தவையும் அவர் காலத்துப் பிறர்கொடுத்தவையும் பற்றிக் குறிப்பிடுபவை ஆகும். குமரியானது மதுரை யரசர்களுக்கே உரிமையுடையதாக இருந்ததேனும் சோழ வேந்தரின் கைஓங்கிய காலத்தெல்லாம் அவர்கைக்கொள் ளக்கருதிய நாடுகளுடன் குமரிப் பகுதியையும் கொள்வது அவர்களின் குறிக்கோளாக இருந்ததெனத் தெரிகிறது. அதனுலே தான் இப்புண்ணியதலத்தில் அவர்கள் காலத் துச் சாசனங்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன.

பாண்டியராட்சி மங்கத் தலைப்பட்டதும் நாயக்க மன்னர்கள் தலையெடுத்தனர். அவர்காலச் சாசனங்களை யும் இங்கே காணலாம். பின் கர்ணுடிக் நவாபின் வசமா யிற்று பாண்டிப்பகுதி. 1766-ல் கர்ணுடிக் நவாபுக்கும் திருவிதாங்கோட்டரசருக்கும் ஒரு உடன்படிக்கை நடந் தது. அதன்படி திருவிதாங்கோட்டைச் சார்ந்திருந்த களக்காட்டைத் தான் பெற்றுக்கொண்டு கன்னியாகுமரி யையும் செங்கோட்டையையும் விட்டுக்கொடுத்தான் அம்மன்னன். அதுமுதல்தான் புறத்தாய நாட்டைச் சேர்ந்தவையான கன்னியாகுமரியும், அதன் பக்கங்களும் நாஞ்சில்நாட்டைச் சேர்ந்தவையாயின. அதுகாறும் மணற்குடியே நாஞ்சில் நாட்டின் தென் எல்லையாக இருந்தது.

கன்னியாகுமரியினின்று ஏறக்குறைய நான்குமைல் களுக்கு மேற்கே இருக்கும் மணற்குடி என்னும்இவ்வூரும்

மிக்க பழைமை வாய்ந்ததே. அழகிய ஒரு காயலின் கரையில் இருக்கும் இது அக்காலத்தில் ஒரு துறைமுகமாக இருந்திருக்கிறது. வரிக்கற்களினல் கட்டப்பட்டிருந்த பெரிய களஞ்சிய மொன்றை மிக அண்மையிலேதான் பிரித்தெடுத்தார்கள். ஊரையடுத்திருக்கும் உப்பளம் மிகத் தொன்மை வாய்ந்த தென்பது சாசனங்கள் கொண்டு அறியக்கிடக்கின்றது. அக்காலத்தில் அதற்கு வழங்கி வந்த பெயர் 'மகிபாலகுலகாலப் பேரளம்' என்பதாகும்.

"வீரபாண்டியன் தலையும் சேரலன் சாலையும் இலங்கையும் தண்டாற் கொண்ட (கே)காவிரா(ஜ)ஜகேசரி

பற்மரான உடையார் ஸ்ரீ ராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு முப்பதாவது ராஜராஜப் பாண்டிநாட்டு உத்தம சோழவளநாட்டு புறத்

தாய நாட்டுக் கழிக்குடி ஸ்ரீவல்லவப் பெருஞ்சாலைய(ா)ன ராஜராஜ பெருஞ்சாலைக்கு நாஞ்சினுட்டு மணற்குடியான மஹி

**பாலகுலப் பேரழுத்து** கே(ய்) உறை கொள்ளுமுப்பு[1]"

என வருவதால் அறியலாம். இது இராஜாதிராஜன் காலத்துக் கல்வெட்டு. 'மகிபால குலகாலன்' என்னும் பெயர் இவன் தந்தையான பரகேசரி இராஜேந்திர சோழ தேவனுடைய பெயர்களுள் ஒன்று. அவன், முதல் இராஜராஜனுடைய மகன். 1012-ல் முடிதரித்தவன். ஆகவே, ஏறக்குறைய 950 ஆண்டுகளுக்கு முன்னரேயே இவ்வளம் சாசனங்களில் குறிப்பிடப்பட்ட பெருமையும் பழைமையும்உடையதென்பது இதனுல் அறியப்படும்.

இராஜாதிராஜன் காலத்தது என்று சந்தேகிக்கப் படுமாறுள்ள சாசனக் கல் ஒன்று மணற்குடி தருவைக்

---

1. T. A. S. Vol. I; P. 163.

கரைவிளையிலிருந்து, சாசன உதவிப் பரிசோதகராயிருந்த திருவாளர் T. S. கணேசபிள்ளை யவர்களால் கண்டெடுக்கப்பட்டது. அவர் கையெழுத்துப் பிரதியில் கண்டபடி அதில் பொறிக்கப்பட்டிருக்கும் செய்தி வருமாறு:-

| கிழக்கு முகம் | மேற்கு முகம் |
|---|---|
| டொதுக்கி [1]கூப | [2]வாய் நாழி |
| கத்தரைசை சேவ | கய்யுறைகொ |
| கந்துலைத்து கெ | ண்டு இச்சா |
| வலை கெழு காந்தளூர் | லைக்கு முன் |
| சாலை கலமறுத்த | பு நிவந்தம் செ |
| **வடக்கு முகம்** | **தெற்கு முகம்** |
| (ான) பவி | प्रसं தஞ் செ |
| த்திர மா | சயத(ருளி)வ |
| ணிக்க | ந்த திருமுக |
| த் தொ | ப்படி स्व |
| ங்கப் பெ | स्तिश्री |
| பறையந | |

இவற்றுள் 'கூபகத்தரைசை' எனத் தொடங்கும் தொடரும் 'வாய்நாழி' எனத் தொடங்கும் தொடரும் இராஜாதிராஜன் கன்னியாகுமரியில் கொடுத்த கல்வெட்டுக்களிலும் வந்துள்ளன. ஆகவே இதுவும் அவன் கொடுத்த சாசனமாக இருக்கலாமோ என்று சந்தேகிக்க இடம் தருகிறது. சாசனம் முழுமையும் கிடைக்காமற் போனது வருந்தத்தக்கது. இது நிற்க.

இதுகாறும் நாஞ்சில்நாடு உட்பட்ட இன்றைய திருவிதாங்கோடு முழுமையும் தொன்றுதொட்டே தூய தமிழ் நாடாகத் தானிருந்தது என்பதற்கான ஆதாரங்கள் தரப்

1. T. A. S. Vol. I. P. 242. 2. T. A. S. Vol. I. P. 163

பட்டன. அவற்ருல்-சேர வேந்தர்கள் செந்தமிழ் வேந்தர் களாயிருந்தார்கள் என்பதும், அவர் பிற பெரு வேந்தர் களோடு மணவினைத் தொடர்பு வைத்திருந்தார்களென்ப தும், பிற்காலத்தில் பலபகுதிகளாக இந்நாடு பிரிந்தபோது தென்பகுதி வேணுடு எனப்பட்டது என்பதும், வேணுடும் ஆய்நாடும் ஒன்றுதான் என்பதும், அதனையாண்ட மன் னர்கள் கி. பி, 14, 15 ஆம் நூற்ருண்டு வரைத் தமிழர்களா கவே இருந்தார்களென்பதும், சோழ பாண்டியர்களின் தொடர்பு இந்நாட்டுக்கு மிகுதியும் இருந்ததென்பதும், அதனுல் இத் தென்பகுதி தமிழ் மரபினின்று சிறிதும் மாருமலேயே யிருந்ததென்பதும், இன்றும், தென் திருவி தாங்கூர் பெரும் பான்மையும் தமிழ் வழங்கும் பகுதியா கவே இருந்து வருகிறதென்பதும் பிறவும் நன்கு விளங் கின. அதோடு நாஞ்சில்நாடு அன்றும் இன்றும் என்றுமே தமிழ்மணங் குன்ருத நறுந்தமிழ் நாடாகத்தான் இருந்து வருகிறதென்பதை அதன் போது வியல்பு, அதன் கண் உள்ள ஓர் ஆறு இடங்களின் வரலாறு என்பவை கொண்டு விளக்கினேம். இனி இங்கு வாழும் மக்களின் பண்பாடு பற்றிச் சில கூறுவாம்.

## மக்களின் பண்பாடு

இந் நாஞ்சில் நாட்டு மக்கள் அனைவரும் தூய தமி ழர்கள் என்பதை எத்தனை முறை வற்புறுத்திக் கூறினு லும் மிகையாகாது. தாய்த் தமிழகத்தினின்றும் அகன்று வாழ்கின்ருர்களாஞனும் இவர்கள் தமிழர்க்குரிய பண் பாட்டில் ஒரு சிறிதும் குறைந்தவர்களல்லர். ஏனைய தமிழ் நாட்டுப் பகுதி மக்களைப்போல—ஏன்? அவர்களை விடக் கூடுதலாக என்று சொன்னலும் பொருந்தும்— தமிழபிமானம் உடையவர்கள். 'தாய் மொழிக்கும் தாய்

நாட்டுக்கும் பெருமை தேடித் தருபவர்கள். தம்மை நாஞ்சில் நாட்டார் என்று சொல்லிக் கொள்வதிலே அவர்கள் பெருமைப்படுகின்ருர்கள். மனனர் மதிக்க வாழும் மக்களாயிருந்தனர் அவர்களின் முன்ஞேர்கள். வஞ்சி மன்னர்களிடம் அவர்கள் பெற்றிருந்த உரிமைகள் சொஞ்சமல்ல. அரசாங்கத்தில் வலிய மேலெழுத்து **(Accountant General)** உத்தியோகம் அவர்கள் கையில் இருந்தது. படைத் தலைமை அவர்கள் கையில். இவ்வகை அலுவல்களிஞல் அவர்கள் அரசாங்கத்துக்கு இன்றியமையாதவராயிருந்தனர் என்னலாம்.

திருவிதாங்கோட்டில் வரிவசூல் செய்யும் சாவடிகளுக்கு மூன்று விதமான பெயர்கள் உண்டு. அதிகாரம், பிரவர்த்தி, கேள்வி என்பன அப்பெயர்கள். முன்னிரண்டும் அரசர்கள் தங்களுடைய அதிகாரத்தையும் ஆணையையும் செலுத்துமிடங்கள் எனப் பொருள்படும். அவை திருவிதாங்கோட்டில் வடபால் இருப்பவை. நாஞ்சில் நாட்டுப் பகுதியிலுள்ள சாவடிகளுக்குக் 'கேள்வி' என்று பெயர். இதன் உத்தியோகஸ்தர் பார்வத்தியகாரர்* எனப்படுவார். இங்குள்ளவர்களின் குறைபாடுகளை அரசரே நேரில் கேட்டு நிவர்த்தி செய்தும், வரி வசூல் செய்தும் வந்தமையால் இவ்விடங்கள் 'கேள்வி' எனப் பெயர் பெற்றன. ஏனைய இடங்களில் போல 'அதிகாரி' என்ற பெயர் இங்குள்ள அலுவலாளர்களுக்கு இல்லை. நாஞ்சில் நாட்டாரிடம் மன்னன் நேர்முகமாக உரிமை பூண்டிருந்தமையை இவை விளக்கும். அரண்மனையில் உண்டாகும் பிள்

---

*** இப்பெயர் 'பாருபத்தை காண்டு' என்னும் தெலுங்கு மொழியின் திரிபாகும். அதற்குக் கிராமத்து வரி பிரிப்பவர் என்பது பொருள். 'A village Revenue officer. பாருபத்தைமு-The duty of a village Revenue officer. (தெலுங்கு அகராதி)'**

பிள்ளைப்பேறு, திருமணம், மரணம் வேறு விசேடங்கள் என்பவற்றுக்கெல்லாம் நாஞ்சில் நாட்டாருக்கு மன்னவன் நீட்டு அனுப்பாமலிருப்பதில்லை. மேற்கூறிய நீட்டுக்களிற் பல, முதலியார் வீட்டுச் சுவடிக் கூட்டங்களுள் காணப் படுகின்றன. அவற்றுள் மாதிரிக்கு இரண்டு தருகின்றோம்.

தொள்ளாயிரத்து அன்ம்பத்தேழாமாண்டு இடவமாதம் ௩௰௨ ஞாயிறுழ்ச்சயும் ரோகணியும் அபரபக்ஷத்து பதிந்நாங்கும் அந்நு விளக்குவச்சு பதிறுறேகால் நாழிகைக்கு மீனம் ராசிநேரத்து அம்மயிடே **ஆலஸியம்வர்த்திக்க**யும் செயிது இக்காரியம்ஞ் சொல்லி நாஞ்சினாட்டு வடவக தென்விதி நாட்டார்க்கு நீட்டு எழுதிவிடு எந்நு திருவுள்ளமாய நீட்டு

இது மரண ஓலை. 'ஆலஸியம் வர்த்திக்கயும்' என்பது இறப்பைக் குறித்தது. இனி வருவது பிள்ளைப் பேற்றின்போது எழுதிவிட்ட ஓலை.

எண்ணூற்று தொண்ணூற்று ஒன்பதாமாண்டு கற்கடக மாதம் அஞ்சாந் தெயிதி நாயருட்சையும் கார்த்திகையும் அபரபக்கிழத்து ஏகாதேசியும் அந்நு சிங்ங மிராசி கொண்டு குஞ்சு உண்ணி **பிரசுமிக்கெயும்** செயிது எந்நும் இச்செயிதி சொல்லி தென்வீதிநாடமைந்த பேர்களுக்கு நீட்டு எழுதிவிடுக எந்நு திருவுள்ளமாயது நீட்டு.

ஒரு சமயம்[S] கல்குளம் கோட்டையில் அடைக்கப் பட்டிருந்த அரசியல் கைதிகள் இருவர் தப்பி ஓடிவிட்ட

---

**S இங்கே கல்குளம் என்றது, இன்று பத்மநாபபுரம் என அழைக்கப் படும் கோட்டையுட்பட்ட பகுதியாகும். கொல்லம் 919-ல்தான் கல்குளம் என்னும் பழைமைப் பெயர் நீக்கிப் பத்மநாபபுரம் என்னும் புதுப்பெயர் கொடுக்கப்பட்டது.**
**"കൽക്കുളത്തു കോട്ടയും കെട്ടി മുകപ്പിച്ചു ടി കോട്ടക്കകത്തു വടമേൽ മൂലയിൽ രാമസ്വാമി കോവിലും കെട്ടിച്ചു 919-ാം മാണ്ടു തൈ മാസം 10-ാം ൹ തിങ്കളാഴ്ചയും ഉത്തിരവും**

னர். சிறிது நாளில் அவர்கள் பிடிபட்டார்கள். அவர்களுக்கு அனுகூலமாயிருந்த சில பட்டாளக்காரர் அரசரின் அனுமதியின்றியே அவ்விருவரையும் அழைத்துக் கொண்டு திருவனந்தபுரத்துக்குப் போவதை அரசர் அறிந்தார். இந்நிலையில் வேண்டிய காரியங்கள் செய்வதற்காக 'உடனே புறப்பட்டு வரும்படித் தென்மீதி வடமீதி நாடமைந்த பேர்க்கு' நீட்டு அனுப்புகின்றார் மன்னர்[1]. இந்நிகழ்ச்சி இவர்கள் அரசர்க்கு எவ்வளவு உற்ற துணைவராயிருந்தனர் எனபதை விளக்குவதல்லவா?

நாஞ்சில் நாட்டார், தமிழ் நாட்டு ஏனைப் பகுதியாரைப் போலவே சமுதாயமாக - கிராமம் கிராமமாகக் கட்டுப்பாட்டோடு வாழ்ந்து வந்தார்கள்; வருகின்றார்கள். அன்று நாஞ்சில் நாடு தென்மீதி வடமீதி உள்ளிட்டுப் பன்னிரண்டு படாகையாகப் பகுக்கப்பட்டிருந்தது. இவர்கள் அரசர் ஆணைக்குட்பட்டுத் தங்களைத் தாங்களே கட்டுப்பாட்டோடு ஆண்டு வந்தார்கள். இவர்களின் கூட்டம் **நாட்டுக் கூட்டம்** எனப்படும். **நாட்டு ஸ்தானம்** என்ற ஒரு சிறப்புரிமை இவர்களுக்கிருந்தது. இவை அரசரால் ஒப்புக்கொள்ளப்பட்டவையாகும். மட்டுமல்ல, நாட்டாரைக் கௌரவிக்கும் பொருட்டு அவரால் 'வெண்கல முரசு', 'கொம்பு' 'வெள்ளி கட்டின பொந்தி' என்பவை

---

**പൂർവ്വപക്ഷത്തു ഷഷ്ഠിയും അന്നു മീനം രാശിനേരത്തു കൽക്കുളം കോട്ടയെ പൽപ്പനാഭപുരത്തു കോട്ടയെന്നു പേരും കൽപ്പിച്ചു ശ്രീരാമനെയും പിറതിഴട്ടിച്ചു കൽക്കുളത്തു മകാരതേവർ കോവിലിൽ അഴട്ടവെന്തനം ചാർത്തിക്കെയും കുമാരകോവിലിൽ കൊടിമരപ്പിറതിഴട്ട നിറുപവാക്കയും......................"**

**(Travancore State Manual; by T. K. Velu Pillay Vol. II P. 126.)**

1. **Kerala Society Papers 7. P. 34.**

விருதுகளாகக் கொடுக்கப்பட்டிருந்தன. இவ் விருதுகளுடன் அவர்கள் கூடும் நாட்டுக் கூட்டம் மிக்க ஆடம்பரமாக இருக்கும். இப்பெருமைகளுக்கு எவ்வித இழுக்கும் வராமல் நடந்துகொள்வதோடு, அதற்குக் கேடு சூழ்கின்றவர்களைத் தண்டனையினால் ஒறுத்து அடக்கியும் வந்தார்கள்.

தம் ஒற்றுமையினாலும் கட்டுப்பாட்டினாலும் இவர்கள் அரசரையே எதிர்த்து நடவடிக்கை எடுத்த காலமும் உண்டு. வரி தண்டுவது பற்றி அரசாங்கத்தாரின் தொந்தரவு மிகுந்த காலத்திலும், வெளியாரின் தொல்லையைத் தடுக்க அரசர் தவறிய காலத்திலும் தென்மீதி வடமீதிப் பேர் அடங்கிய நாட்டுக்கூட்டம் கூடி 'இனி வரி செலுத்துவதில்லை' யென்றும், 'அரசாங்கத்தோடு ஒத்துழைப்பதில்லை' யென்றும் நிபந்தனைப் பத்திரம் செய்திருக்கின்றனர். இது **ஒப்புரவு மொழிமாறு** ஓலை எனப்படும். இத்தகைய கூட்டங்கள் வடசேரி, ஆசிராமம், ஈசாந்திமங்கலம், கடுக்கரை முதலிய இடங்களில் நடந்திருக்கின்றன. வடசேரியில் கூடி எழுதிய ஒப்புரவு மொழிமாறு ஓலையின் ஒரு பகுதி கீழே தருகின்றோம்.

8. "………மற்றும் பல கூட்டம் உபத்திரவங்கள் ஒண்டானபடியினாலேயும், நாம் **கூடியும் குடிவாங்கியும்** பிலத்து நின்று நிருபவிச்சுக் கொள்ளுவோமாகவும் நம்முடைய நாட்டுக்குள்ள ஒருவனுக்காகிலும் ஒரு ஊருக்காகிலும் ஒரு பிடாகைக்காகிலும்

9. நாட்டுக்காகிலும் ஒரு காரிய கருமங்கள் வன்பாய் உண்டானாலும், **பத்துபதினாறு பணம் சிலவளிந்த தோண்டானாலும்**. நாட்டுப் பொதுவிலே குடுத்து நின்று நிக்கு நிலைக்கு நின்றுகொள்ளுவோமாகவும், ஒரு ஊரிலே நாட்டிலே ஒரு காரிய கருமம் உண்டானால் உபத்திரமுள்ள பேர்கள்

10. பொதுத் தலதநதிலே வந்துகூடி அந்தந்தப் பிடாகையில் வந்து உடனே நாம் எல்லோரும் வந்து கூடி நிக்கு நிலே நின்று நிருபவிச்சுக் கொள்ளுவோமாகவும். இந்த வகைப்படியே இந்த மொழி ஓலைப்படிக்கு வந்து கூடிப் பிலவாமல் இயாதா மொருவர் கூட்டத்துக்கு வாராதிருந்தால்

11. **வாராத பேர்கழை நாட்டு சொத்தியம் சொதிச்சுப் பொடு வெமாகவும்** இந்த மொழி ஓலைப்படி..............[1]"

இதில் **'கூடியும் குடிவாங்கியும்'** என வருவதற்குப் பொருள் -'நாம் அனைவரும் காரிய சித்திபெறக் கூடி நின்று முயலவேண்டும்; இல்லாவிட்டால் இந்நாட்டை விட்டுக் குடியிளகிப் போய்விட வேண்டும்' என்பதாகும்.

**'பத்துப் பதினறு பணம் செலவழிந்த துண்டானலும்'** எனக் கூறுவதால் அவர்களிடம் பொதுப்பணம் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த தென்பதும், ஏற்படும் செலவுகளுக்கு அதைப் பயன்படுத்தி வந்தார்களென்பதும் அறியப்படுகின்றன. **'வாராத பேர்களை நாட்டுச் சோத்தியம் சோதிச்சுப் போடுவோம்'** என்பதால் இந் நிபந்தனைக்கு மாருக நடப்பவர்கள் இவர்களால் விசாரிக்கப்பட்டு ஒறுக்கப்படுவார்கள் என்பது தெரிகிறது.

இவற்ருல், நாஞ்சில் நாட்டார் செங்கோல் வேந்தருக்கு உற்ற துணைவர்களாகவும், அறங்கோடிய மன்னரைப் புறந்தள்ளும் தீரர்களாகவும் திகழ்ந்தார்கள் என்றறிகின்ருேம். இவர்களின் தொல்குடிச் சிறப்பும், செல்வச் செழிப்பும், ஒற்றுமையுமே இவ்வாற்றலுக்கும் பெருமைக்கும் காரணங்களாகும். திருவிதாங்கோட்டரசாங்கத்தில் இவர்கள் பற்பல உரிமைகளும் பெற்றுச் சுதந்திர

1. No. 73. Olai document of Kollam 878. T. A. S. Vol. V; P. 215

புருடர்களாய்ச் சிறந்து விளங்கினுர்கள் என்பதைத் திரு. நாகமய்யா அவர்கள், தாமெழுதிய ஸ்டேட் மானுவலில் அழகுபடக் கூறுகின்ருர்கள்.

நாஞ்சில் நாட்டின் கிராம அமைப்பும் வாழ்க்கை முறையும் சற்று அறியத் தகுந்தவையாம். இங்குள்ள முக்கிய சமுதாயத்தார் வேளாளர்கள். இவர் தம்மை 'நாஞ்சில்நாட்டு வேளாளர்' என்றேகூறிக்கொள்வர். ஒவ்வொரு ஊரிலும் இவர்கள் நடுநாயகமாகச் சிறந்து விளங்கினர். ஊர்தோறும் பொதுச் சொத்துக்களும் கோவில்களுமிருந்தன. பூசை புரிதல், மாலை கட்டல், சங்கு ஊதல், கொல்லு வேலை, தச்சு வேலை, கம்மத் தொழில், காவற்ருெழில், துணி வெளுப்பு, மயிர் களைதல், மண் பாண்டம் வனைதல், முரசறைதல் என்றின்னேரன்ன தொழில்களைச் செய்து வந்த பல இன மக்களும் ஊரைச் சூழ்ந்திருந்தனர். இவரெல்லாம் தத்தம் தொழிலுக்கேற்ற ஊதியமும், ஆதரவும் பெற்று அமைதியாக வாழ்ந்து வந்தார்கள். ஆனுல் ஊரில் நிகழும் சில விசேடங்களின் போது இவர்கள் யாவரும் சிலச்சில ஊழியங்கள் செய்யக் கட்டப்பாடு உடையவராயிருந்தனர். அதற்கென அறுவடைதோறும் அவர்களுக்கு நெல் முதலியவை கொடுக்கப்பட்டு வந்தன. இதனைத் தமக்கு வாய்த்த ஓர் சுதந்திரமாகக் கருதினமையால் இவ்வுரிமையை இழக்க அவர்கள் மனம் என்றும் இசைவதில்லை. இப்படி இவர்கள், தம் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் பெற்று ஒற்றுமையாய் இன்பமாய் வாழ்ந்து வந்தார்கள்.

ஊர்ப் பரிபாலனத்துக்கு முதல் பிடிகள், கணக்கர்கள், முறையான் பிள்ளை என்போர் உண்டு. இவர்களின் ஆணையை நிறைவேற்றத் திசை காவலர்களாகிய மறிவர்

கள் நியமிக்கப்பட்டிருந்தனர். ஊர்த் தலைவர் 'மூத்த பிள்ளை' எனப்படுவர். அவருக்குஅடுத்த வாரிசுக்கு 'இளைய பிள்ளை' என்று பெயர். செல்வமும் செல்வாக்கும் அறிவும் கொடையும் ஆண்மையும் படைத்த சீரிய குடியே இத் தலைமையைத் தாங்கி வந்தது. ஊர்ப் பொது மன்றமாகிய அம்பலங்களில் மூத்த பிள்ளையின் தலைமையில் ஊர்க் கூட்டங்கள் கூடுவதும், தீர்மானங்களும் ஆணைகளும் நிறைவேற்றப்படுவதும் ஒரு சிறந்த காட்சியாகவேயிருந் தன அக்காலத்தில்.

ஊரின் நன்மைக்குப் பொதுச் சொத்தும் ஆட்சியும் தேவையாயிருந்தாற்போல இன்னொரமைப்பும் ஆட்சியும் தேவையாயிருந்தன. அவைதாம் புரவு ஆட்சிபற்றியவை. புரவு என்பது ஆறு குளம் என்பவற்றின் பாய்ச்சலைக் கொண்ட நன்செய் நிலப்பரப்பாம். இவை ஊர்களைச் சூழ்ந்து எங்கும் காணப்படும். இவற்றுக்குச் செவ்வை யான கண்காணிப்பு எப்போதும் வேண்டும். இதற்கு அடிப்படை பொதுமுதல்; அதை நிர்வகிக்க ஓர் அமைப்பு இவை இன்றியமையாதவை. இவ்வமைப்பும் ஊர்தோறும் இருந்து வந்தது. ஊர்க் கட்டுப்பாடு, புரவு கட்டுப்பாடு என்பவற்றுக்கு மாறுபாடாக நடக்கின்றவர்கள் மேற் கூறிய மன்றங்களில் நிறுத்தி விசாரிக்கப்படுவார்கள்.

இப் பொது மன்றங்கள், நீதிமன்றங்களாக மட்டு மன்றித் தமிழ் வளர்க்கும் அவைக்களங்களாகவும் இருந் தன. அறுவடைக்குப் பின்னல் தொழிலின்றி ஓய்ந்திருக் கும் காலம் இரண்டுமுறை நாஞ்சில் நாட்டார்க்கு வரும். அவற்றுள் பங்குனி, சித்திரை மாதங்கள் தாம் நீண்ட ஓய்வுகாலம். வெப்பம் மிக்க இக் கோடைக் காலத்தில் இரவிலுங்கூட வீடுகளில் தங்குவது அரிதாயிருக்கும்.

ஆகவே, அக்காலத்து இராப்போழுதின் ஒரு பகுதியைத் திறந்த வெளிகளிலிருந்து பயன்பாட்டோடு கழிப்பதற்காக ஊர் மன்றங்களில் தமிழ் அறிஞர்களைக் கொண்டு வரிவுரை நிகழ்த்த ஏற்பாடு செய்வார்கள். பெரும்பாலும் கம்ப ராமாயணம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், திருவாதவூரர் புராணம் என்பவை விரிவுரைக்கு எடுத்துக் கொள்ளப்படும். இதற்கென்று ஊர்வகையிலிருந்து ஆண்டுக்கு இவ்வளவென்று நெல்லும் பணமும் செலவெழுதிக் கொடுப்பதுமுண்டு. சில ஊர்களில் அம்பலங்களிலன்றிக் கோவில்களில் வைத்தும் புராணப்பிரசங்கம் நடைபெறும். நாஞ்சில் நாட்டார் அன்று முதலே தமிழில் சுவையுடையவர்களாயிருப்பதற்கு இப்பழக்கமும் ஒரு காரணமாகும். இன்றும் அதிகப்படியான ஊர்களிலும் தமிழில், சிறப்பாகக் கம்பராமாயணத்தில் தேர்ச்சியுடையவர்களை ஆங்காங்கே காணலாம்.

இவர்கள் தமிழை விரும்பிக் கற்றதுமன்றித் தமிழச் சுவடிகளைப்போற்றிப் பர்துகாத்தும் வந்தார்கள். கிடைத்த சுவடிகளை யெல்லாம் சேர்த்து வைப்பர். அவற்றை நவராத்திரிப் பூசைக்கு அடுக்குவர். இப்பூசை வீடுகள் தோறும் சிறப்பாகக் கொண்டாடப்படும். அச்சியந்திரம் வந்தபிறகுதான் ஏடுகளைப் பாதுகாக்கும் பழக்கமும், அவற்றை அடுக்கிப் பூசிக்கும் வழக்கமும் கைநழுவ விடப்பட்டன. அதற்கு முன்னரெல்லாம் சிறப்பான பலப்பல ஏடுகளும் அங்கங்கே சேமித்து வைக்கப்பட்டிருந்ததாய்த் தெரிகிறது. அழகியபாண்டிபுரம் பெரிய முதலியார் வீட்டில் நன்னூல் மயிலைநாதர் உரை ஏட்டுப் பிரதி ஒன்று கூட இருந்ததாம். ஏனைய புராணங்கள் முதலான சுவடிகள் இருந்ததற்கு அளவில்லை.

நாஞ்சில் நாட்டில் இவ்வளவு சீரும் சிறப்பும்பெற்று வாழ்ந்த இவ்வேளாளர்கள் தாய்த் தமிழக வேளாளர் களோடு பிற்காலத்தில் உறவு முறை கொண்டு வாழ்ந்த தாகத் தெரியவில்லை. இதற்குக் காரணம் இரு சாராரின் தாயமுறைகளும் வேறுபட்டிருந்ததாகும். நாஞ்சில் நாட் டாரோ, தாய்த் தமிழகத்தாரினின்று வேறுபட்ட மருமக் கள் தாயிகளாயிருந்தனர். இம்முறை இவர்களிடம் எப் போது வந்து புகுந்ததென்று தெரியவில்லை. அது ஒரு காலத்தில் திடீரென்று ஏற்பட்டதாயிருக்க முடியாது. பின்னையோ என்றால் அரசாங்கத்தில் பெரிய அலுவல்கள் தாங்கியும், அரசரால் மதிக்கப்பட்டும் அவரோடு நெருங்கி வாழ்ந்த பெரிய குடும்பங்களிற்பட்ட வேளாளர்களிடத் தில் இம்முறை முதலில் தாவி, பின் ஏனையோரிடத்தில் நாளடைவில் பரவியிருக்க வேண்டும். 'மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி' யல்லவா?

எங்ஙனமேனும் இத்தாய முறையினாலுள்ள இன்னல் களையும், இழிவுகளையும் நாஞ்சில் நாட்டு வேளாளர்கள் அனுபவித்துத் தீர்த்து விட்டனர். சுமார் 31* ஆண்டு களுக்கு முன்னரே சட்ட மூலம் இம்முறை மாற்றப்பட் டுப் போயிற்று. இன்று நாஞ்சில் நாட்டு வேளாளர் ஆண் களோடு பெண்களும் சரிநிகர் சமான உரிமை பெறுமாறு வழிகோலி, அதன்படிப் பெற்று அனுபவித்து வருகின்றார் கள். இம்முறை நாடெங்கணும் பரவுக.

நாஞ்சில் வேளாளர், தமிழக வேளாளரோடு மண வினைத் தொடர்பு வைத்துக்கொள்ள வில்லையானாலும் பொருள்வினைத் தொடர்பு வைத்திருந்தார்கள் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. பாண்டி மண்டிலத்து வைகுந்த வளநாட்டுப் பெரும்பழஞ்சிக்காரர்ஒருவருக்கும் மலைமண்

---

* கொல்லம் 1102-ல் சட்டமாயிற்று.

டலத்து இரவிநல்லூர் கற்பகச் சேரிக்காரர் ஒருவருக்கும் பொன் கொடுக்கல் வாங்கல் பிரமாணம் நடந்திருக்கிறது. அதுபோல, மேற்கூறிய வைகுந்த வளநாட்டு ஏறுவாடி யான நரலோகநாத நல்லூர்க்காரர் ஒருவருக்கும் மலை மண்டலத்து வயக்கலூரிலுள்ள ஒருவருக்கும் நடந்துள்ள பிரமாணமும் இருக்கின்றது. இவையெல்லாம் கொல்லம் அறுநூறுமாண்டை ஒட்டியவையாகும். ஏனைய சமுதாயத் தார்க்குள் நடந்துள்ள ஈடுபாடுகள் எத்தனையோ பல. மேற் கூறியவற்றால் இருசாராருக்குள்ளும் பொருட்டொடர்பும் போக்கு வரத்தும் இருந்தமை உணரப்படும்.

இனி, இவர்கள் தாய்த் தமிழகத்தாரோடுதான் மண வினை வைத்துக்கொள்ளவில்லை, திருவிதாங்கோட்டு மலை யாளிகளோடு திருமணத்தொடர்புகொண்டிருந்தார்களோ என்றால் அதுவுமில்லை. ஏன்? இரத்தத்தோடு கலந்து உள்ளத்தைப் பிணித்து நின்ற மொழிப்பற்று இருவர்க் கும் வெவ்வேறல்லவா? இருசாராருடையவும் நடை, உடை, பாவனை, கலாச்சாரம் என்பவை மிகுதியும் வேறு பட்டிருந்தன.

முதலாவது, ஒன்றுபட்டிருந்த தாயமுறையிலுங்கூட இரு சாரார்களின் நடைமுறையிலும் வேற்றுமைகள் பல உண்டு. நாஞ்சில் நாட்டு வேளாளர்கள் காரணவருக்குப் பின்வாரிசாக இருந்த காலத்திலும் தம் தந்தையின் **குடும்ப (பூர்வீக)ச்** சொத்திலிருந்து ஒரு பாகம்பெற உரிமை பெற் றிருந்தனர். இது **உகந்துடைமை** எனப்பட்டது. ஒரு பெண், தனக்கு மக்களில்லாத காரணத்தால்சொத்துரிமை இழந்தநிலையில் தன்வாழ்க்கைச்செலவுக்காக கணவனது **குடும்பச் சொத்தி**லிருந்து ஒரு பாகம் பெறும் உரிமை பெற்

றிருந்தாள். இது **நங்குடைமை**[1] எனப்பட்டது. இவ்விரு வழக்கங்களும் நாஞ்சில் நாட்டாரின் தாயமுறை, மலையாளிகளின் மருமக்கள் தாயத்தினின்று மாறுபட்டது என்பதோடு தம் பழைமையான மக்கள்தாய அம்சங்களைக் கொண்டிருந்தது என்பதையும் காட்டுகின்றனவல்லவா?

இனிப் பழக்க வழக்கங்களிலும் வேறுபாடுகள் பல உள்ளன. மலையாள மருமக்கட்டாயிகள் இரட்டைப் பெயர் எழுதும்போது தாயின் பெயரையோ தாய்மாமன் (காரணவன்) பெயரையோ முதலில் வைத்து எழுதும் வழக்கமுடையவரா யிருந்தனர். நாஞ்சில் மருமக்கட்டாயிகள் தம் தந்தையின் பெயரையே முன் நிறுத்தி எழுதினர்.

அவர்கள் கர்மம், திதி முதலியன காரணவருக்கே செய்வர். இவர் தந்தைக்குக் கொடுப்பர்.

அவர்கள், பெண்களைப் பிராமணர், நம்பூதிரிமார், போற்றிமார் என்போருக்குச் 'சம்பந்தம்' செய்து கொடுத்ததோடு அதை ஒரு பெருமையாகவும் கருதினர். இவ்வழக்கம் தமிழர்களிடை என்றும் இருந்ததில்லை.

அவர்களிடையில் ஒரு பெண்ணை முதலில் ஒருவருக்குக் கட்டிக்கொடுக்கிற 'கட்டுக் கலியாண'மும், உண்மை விவாகமாகிய 'புடைவை கொடை'யும் இருந்தன. இங்குள்ளாரிடம் இப்பழக்கங்கள் மருந்துக்கும் இருந்ததில்லை. இன்னும் திருமணம் சம்பந்தமான வேறு பல வேறுபாடுகளும் உண்டு. அவையனைத்தையும் இங்கே எடுத்துக்கூற விரும்பவில்லை. வேண்டுவோர் **'Castes and Tribes of**

---

1. நங்கை + உடைமை = நங்கைக்கு உரிய சொத்து.

**Southern India' by Edgar Thurston; Vol. V. PP** 283-413-ல் 'நாயர்' என்ற தலைப்பின் கீழ் எழுதப்பட்டிருப்பதைப் பார்த்துக் கொள்க.

பொதுவாக ஆண்கள், தம் நடை உடை ஆசாரம் ஒழுக்கமுறை என்பவற்றில் காலப்போக்குக்கும் சுற்றுச் சார்புகளுக்கும் ஏற்றவாறு விரைவாக மாறிக்கொள்ளும் இயல்புடையவர்கள். பெண்களோ எளிதில் தம் வழக்கத்தை விட்டு விடுவதில்லை. ஆகவே, இவர்களைக் கொண்டு அவர்களின் இன வழக்கத்தையே உணர்ந்து விட முடியும்.

சற்றுப் பழைமையான மலையாளப் பெண்களைப் பார்த்தால் அவர்கள் தமிழ்ப் பெண்களினின்று மிகுதியும் மாறுபட்டிருப்பதை அறியலாம். பழங்கால ஓவியங்கள் சிற்பங்களைப் பார்ப்பவர்களுக்கு இதனை நன்கு அறியமுடியும். அவர்கள் வெள்ளாடையே உடுப்பர். அதுவும் இரண்டு துண்டுகளாக இருக்கும். மஞ்சள் தேய்த்துக் குளிக்கும் வழக்கம் அவர்களிடமில்லை. கூந்தலை உச்சியின் முன் பக்கமாகக் கொண்டு கொண்டை முடிப்பர். ஆபரண வகைகள் அடியோடு மாறுபட்டவை. இவை முதலியவற்ருல் ஒரு மலையாளப் பெண்ணினுடைய நடை உடை தோற்றம் என்பவற்றுக்கும் ஒரு தமிழ்ப் பெண்ணினுடையவற்றுக்கும் எவ்வளவோ மாற்றம் இருக்கக் காணலாம். அன்றியும் மலையாளிகளின் கடவுள் வழிபாட்டுமுறை, திருவோணம் முதலான விசேடக் கொண்டாட்டங்கள் முதலிய யாவும் அவர்களைத் தமிழர்களினின்று பெரிதும் பிரித்துக் காட்டுகின்றன.

இவ்வளவெல்லாம் சொன்னுலும் அவர் வழக்கங்களிற் பல பழந்தமிழ் வழக்கங்கள் என்பதை நாம் அறியவேண்

டும். தம் தொன்மை வாய்ந்த தமிழ் மரபினின்று பிரியத் தொடங்கிய அவர்கள் அகன்று அகன்று ஆரியக் கோட் பாடுகளை நோக்கி விரைந்துசென்று தாவிப் பிடிக்கத் தலைப் பட்டார்கள். அதனால் சிறிது காலத்துக்குள்ளேயே மாறு பாடு பெரிதாயிற்று. ஆயினும் பழைமை சிறிதே பதுங் கிக் கிடக்கத்தான் செய்கிறது. புடைவை கொடை என் பது நம் அகப்பொருளில் வருகின்ற 'தழையேற்பித்தல்' அல்லவா? வேலன் வெறியாட்டு, வள்ளிக்கூத்து என அந்நாளில் வழங்கியவை இன்றும் மலைநாட்டில் 'வேலன் துள்ளல்' என்னும் பெயரோடு வழங்கி வருவதைப் பார்க்க லாம். பாணர்கள் துயிலெடை மங்கலம் பாடும் வழக்கம் இன்றும் இருக்கின்றது என்பவர்[1]. இவைபோல்வன இன்னும் பல.

அவர் மொழியினை ஆய்ந்தாலும் அதனுள்ளும் தூய தமிழ் மரபினைக் காணமுடியும். முதலாவது, மொழியின் அமைப்பை **(Structure of the Language)**ப் பாருங் கள். எழுவாய்,பயனிலை,பெயரெச்சம்,வினையெச்சம்,முற்று என்பவற்றின் அமைப்புகளில் தமிழுக்கும் மலையாளத்துக் கும் யாதேனும் வேறுபாடு காணமுடியுமா? 'அவன் மலை யில் நின்றும் உருண்டு வீழ்ந்தான்'எனபது தமிழ். '**അവൻ മലയിൽ നിന്നും ഉരുണ്ടുവീണു**' (அவன் மலையில் நிந்நும் உருண்டு வீணு) என்பது மலையாளம். என்ன வந்தாலும் பொய் பேசுவதில்லை என்ற மன உறுதி மனிதனுக்கு வேண்டும்' என்பதற்கு '**എന്തു വന്നാലും കള്ളം പറയുകയില്ല എന്നുള്ള മന ഉറപ്പു മനുഷ്യനു വേണം**' (எந்து வந்நாலும் கள்ளம் பறயுகயில்ல எந்நுள்ள மன உறப்பு மனுஷியனு வேணம்) என்பது நேரான மலையாள வாக்கிய அமைப்பு.

---

1. **'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி'**
**ராவ்பகதூர் ஸ்ரீ. இராகவையங்கார் அவர்கள்.**

வடமொழியிலோ இந்தியிலோ அல்லது ஆங்கிலம் முதலான பிறமொழிகளிலோ இதுபோல எழுவாய் எச்சம் முற்று என்பவற்றை ஒரு சிறிதும் மாற்றாமல் அப்படியப் படியே வைத்துச் சொல்ல முடியுமா? காரண மென்ன? அமைப்பினால் அவைகளெல்லாம் தமிழினின்றும் அடியோடு மாறுபட்டவை. ஆனால் மலையாளம் அப்படியல்ல. தமிழ் அடிப்படையின் மீது கட்டப்பட்ட மாளிகையே அது என்று சொன்னால் குற்றமாகாது. இன்று அதற்குச் செழிப்பையும் அழகையும் எடுப்பையும் கொடுத்துக் கொண்டிருப்பது ஆரியம். அதன் அடிப்படையிலே மின்னித் திகழ்ந்து கொண்டிருப்பது தமிழ். ஆரியத்தை அகற்றிப் பார்த்தால் அதனை அறியலாம்.

மலையாளமானது தமிழ்த் தொடர்பை அகற்றிவிட்டு ஆரியத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்ததால் எத்தனையோ பல சொற்கள் பொருளுக்கு ஒவ்வா முறையில் திரியலாயின. 'கோடரி' என்னும் பொருள் போதிந்த சொல் 'கோடாலி' என மலையாளத்தில் வழங்குகின்றது. அதுபோல 'மண்வெட்டி'-'மம்மட்டி' எனவும் 'கடுஞ்சூல்' -'கடுநூல்'[1] எனவும், 'திறந்து'-'துறந்து' எனவும், 'சுட்டு விரல்'-'சூண்டாணி விரல்' எனவும், 'குருத்தோலை'-'குருந்நோல' எனவும், 'சிவப்பு' - 'சுவப்பு' எனவும், 'தளிர்' - 'திளிர்' எனவும், '[2]சிள் வீடு' - 'சிவிடு' எனவும், 'மீண்டு' என்பது 'வீண்டு' எனவும், இன்னும் பலவும் பலவாறாகவும் திரிந்து வழங்குகின்றன.

சில சொற்கள் உருத்திரிந்ததோடு தம் பொருளினின்று நழுவி வேறு பொருளை உணர்த்தவும் தலைப்பட்

1. முதற்சூலை இவ்வாறு சொல்வது மலைநாட்டில் இன்றும் வழக்கம். சிறுபாணாற்றுப்படை வரி 148-ல் இத்தொடர் வந்திருத்தல் காண்க.
2. வீடுசில் என்றும் சொல்லப்படும்; ஒரு வகை வண்டு.

டன. வலிது, எளிது முதலானவற்றை அதற்கு உதாரணங்களாகச் சொல்லலாம். 'ஆற்றல்' என்னும், பொருளைத் தருகிற 'வலி' என்னும் முதனிலையினடியாகப் பிறந்த 'வலிது' என்ற சொல் மலையாளத்தில் **'வலுது'** (வலுது) என வழங்குகின்றது. அங்கே அதற்குப் 'பெரியது' என்று பொருள். 'எளிமை' என்ற பண்பினடியாகப் பிறந்த 'எளிது' என்னும் சொல், மலையாளத்தில் 'எளுப்பம்' என வழங்கும். அது அங்கே 'இலேசானது' என்னும் பொருளோடு 'விரைவு'ப் பொருளையும் தாங்கி நிற்கின்றது, பொட்டை' என்றால் 'கண்ணற்றது' எனப் பொருள்படும் தமிழில். ஆனால் மலையாளத்தில் செவிடனைப் 'பொட்டன்' என வழங்குவர். இப்படிப் பல.

ஆயினும் தமிழில் வழக்கற்றுப்போன எத்தனையோ பல அருஞ் சொற்கள், பெட்டிக்குள் வைக்கப்பட்ட மாணிக்கம்போல் மலையாள மொழியில் இன்றும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன என்பதை நாம் அறியவேண்டும். இது மிக ஆச்சரியமல்லவா? அவற்றுட் சிலவற்றை இங்கே காட்டுவோம்:-

'கெட்டவன்' என்னும் பொருளில் 'சீத்தை'[1] எனக் கலித்தொகையில் வந்த சொல் மலையாளத்தில் இன்றும் வழக்கிலிருக்கிறது; தமிழில் இல்லை. கசங்குதல் என்னும் பொருளைத் தரும் 'முசிதல்' என்னும் சொல் தமிழில் வழக்கற்றுப் போயிற்று[2]. மலையாளத்தில் இன்றும் வழங்கி வருகிறது. ஏசினேன் என்னும் பொருளைத்தரும் 'பறைந்தேன்' என்ற சொல்லும், தந்தை என்னும் பொருளுடைய

---

1. கலித்தொகை:- 'ஈத்தவை கொள்வானு மிலைதோத்தன்' - பாட்டு 84
   ஷை 'போசீத்தை, மக்கள் முரியே!' ,, 94
2. 'முசிந்தபுடைவையுடைய' (கலித்தொகை : 96. உரை)

'அச்சன்' என்ற சொல்லும், உயர்ச்சி என்ற பொருளைத் தரும் 'பொக்கம்' என்னும் சொல்லும் திருவாசக காலத்துக்குப் பின் தமிழில் வழக்கு வீழ்ந்தன.

**'கோனே சிறிதே கொடுமை பறைந்தேன்'[1]**
**'யார் பெறுவார் அச்சோவே'[2]**
**'அச்சன் என்னையும் ஆண்டு கொண்டருளிய அற்புத மறியேனே'[3]**

**'மாலறியா நான்முகனுங் காணு மலையினை நாம் போலறிவோம் என்றுள்ள பொக்கங்க[4] ளேபேசும்'**

இவை இன்றும் மலையாளத்தில் வழங்கி வருகின்றன.

[5]'ஓர்த்துள்ளம் உள்ள துணரின்...........' என வந்த திருக்குறளுக்குப் பிறகு 'ஓர்த்து' என்னும் சொல் தமிழில் அருவழக்கு; ஆனால் மலையாளத்தில் பெருவழக்கு. பனித்து[6], புதைத்து[7], -என்னும் சொற்கள் சிலப்பதிகார காலத்துக்குப் பின் தமிழுக்கு அருஞ் சொற்களாகிவிட்டன. குளிர் காய்ச்சலைப் 'பனி' என்று சொல்வதும், போர்த்தான் என்னும் பொருளில் 'புதச்சு' என்று சொல்வதும் மலையாளத்தில் சாதாரணம். தமிழில் அருகி வழங்குகின்ற வளாகம், அங்காடி, திருமு, என்பன போன்ற சொற்களும் மலையாளத்தில் பெருவழக்காயிருப்பதைப் பார்க்கலாம். பண்டைய இலக்கண நூல்களில் விதிக்கப்பட்டதும் ஆனால் தமிழில் வழக்கிழந்து போனதுமான 'அத்துச்' சாரியை, இன்றும் பயில வழங்குவதை மலையாள மொழியில் காணமுடியும்[8]. 'வெயிலத்து போகருதே'

---

1. திருவாசகம்: திருச்சதகம்: 5.
2. ஷை அச்சப்பத்து.
3. ஷை அற்புதப் பத்து:
4. ஷை திருவெம்பாவை:
5. திருக்குறள்: 357
6. சிலப்பதிகாரம்: அந்தி: 6.
7. ஷை இந்திர: 4.
8. ராவ்சாகிப் S. வையாபுரிப் பிள்ளை அவர்கள் எழுதிய 'தமிழ்ச் சுடர் மணிகள்' என்ற புத்தகம் 5-ஆம் பக்கம் பார்க்க,

'மழையத்து போகருதே' எனச் சாதாரணமாக வழங்கு கின்றுர்கள்.

இவற்றைவிட்டு உலக வழக்காய் - அன்ருட வாழ்க் கையில் பயன்படுகின்ற நடைமுறைச் சொற்களாய் இருக் கின்ற ஆண், பெண், மண், கல், மலே, குன்று, ஆறு, ஓடை, மேடு, பள்ளம், மரம், செடி, கொடி, பூ, இலே, காய், பழம், ஆடு, மாடு, வீடு, கூடு, கதவு, கம்பு, உரல், உலக்கை, அம்மி, அடுப்பு, சோறு, கஞ்சி, வாய், வயிறு, கை, கால், கண், மூக்கு, தலே, செவி, மேல், கீழ், அகம், புறம், வெற்றிலே, பாக்கு, சுண்ணும்பு, பிண்ணுக்கு, பால், தயிர், மோர், நெய், ஒன்று, இரண்டு, மூன்று முதலியன வாக வழங்கும் மலேயாளச் சொற்களில் எதுதான் தமிழ்ப் பெயரல்லாதது? வினேச் சொற்களின் பகுதிகளான நட, எடு, வா, போ, அடி, பிடி, உண் உறங்கு, இரு, எழு, முத லானவைகளும் அவற்றினடியாகப் பிறக்கின்ற பெயரெச்ச வினேயெச்சங்களும் தமிழேயல்லவா? அவர்களின் இலக் கணமும்கூட இப்பாகுபாடுகளே உடையதாயிருக்கின்றதே!

ஆனுல் நாளடைவில் இப்பசுந் தமிழ்ச் சொற்கள் இருந்த இடங்களிலெல்லாம் அவற்றை அகற்றிவிட்டு வடமொழிச் சொற்கள் தம் உச்சரிப்பில்கூடசிறிதும்மாறு படாமல் அப்படியே வந்து உட்காருகின்றன. இது மலே யாள வாணர்கள் வடமொழிமீதுகொண்ட மோகத்திஞல் நிகழும் செயல். ஆயினும் சிந்தித்துப் பார்ப்பார்க்குத் தமிழ் விதைக்கு ஸம்ஸ்கிருத நீர் ஊற்றி வளர்க்கப்பட்ட செழு மரமே மலேயாளமொழி என்பதைத் தெளிய உணர முடியும். இதனே நன்கறிந்துள்ள மலேயாள அறிஞர்கள் பலர் உளர். இவ்வுண்மையை ஒப்புக்கொள்ளுதல் தம் மொழிப் பெருமைக்கு இழுக்கென்று கருதுவோரே இன்

றைய மலையாளத்துக்கும் தமிழுக்கும் பொதுமொழி ஒன் றிருந்ததென்றும், அதினின்றும் பிரிந்த இரு வேறு மொழி களே இவ்விரண்டும் என்றும் கூறி இடர்ப்படுவர். இதற்கு அவர் கூற்றைத் தவிர அறிஞர்கள் ஏற்கத்தக்க ஆதாரம் எதனையும் காணோம். ஒரு கோட்டைபோலஅமைந்துள்ள மலைத்தொடருக்கும் கடலுக்கும் இடைப்பட்ட நிலத்தில் வழங்கி வந்த தமிழ், ஏனைய நிலப்பரப்போடுள்ள பழக்க வழக்கக் குறைவினால் நாளடைவில் மாறுபட்டு, வடக்கு நின்று வந்த ஆரியக் கோட்பாடுகளோடு கலந்து ஒரு தனி மொழியாயிற்று என்னும் உண்மையை அறிவுலகம் ஏற்கத் தயங்காது.

இந் நாட்டின் வடபகுதிதான் இம்மாற்றத்துக்கு முழுமையும் இலக்கானது. தென்பகுதியை அம்மோகினிப் பெண்ணால் எட்டிப்பிடிக்க முடியவில்லை. நாஞ்சில் நாட் டாரும், அவர்களை ஒட்டிய பகுதியாரும் தாய்த் தமிழகத் தோடு ஒட்டியிருந்தமையாலும், அவர்களின் தொடர்பு படையெடுப்பினாலும் ஆட்சியினாலும் இருந்துகொண்டே வந்தமையாலும் பிற்காலத்தில் இப்பகுதியை யாண்ட கேரள வேந்தர்களும் இன்னோரை நன்கு மதித்து, மொழி ஆசாரம் என்பவற்றுக்கு வேண்டிய அனுகூலங்கள் செய்து வந்தமையாலும் இவர், தம் முன்னைய மரபில் குன்றாமல் பழக்க வழக்கம் பேச்சுவழக்கு ஆசாரம் என்ப வற்றால் தாய்த்தமிழகத்தாரோடு ஒத்தவர்களாக வாழ்ந்து வந்தார்கள்; வருகின்றார்கள். இதனை நேரில் பார்த்தே உணர்ந்து கொள்ளலாம.

பொதுவாக மனிதரினின்று மனிதரைப் பிரித்து நிற் பவை மூன்று காரியங்கள் என்று கூறலாம். சமயம் **(Religion)**, மொழி **(Language)**, இனம் **(Race)** என்

பன அவை. இவற்றுள் சமயமானது ஒரு மனிதனுக்குச் சட்டை போன்றதேயாகும். ஒரு சட்டையைக் கழற்றி வேருென்றை அணிந்துகொள்ளுவதுபோல் எப்பொழுது வேண்டுமாகுலும மனிதனுக்குத் தன் சமயக் கொள்கைகளை மாற்றிக்கொள்ள முடியும்.

ஆனல் மொழியோ மனித உடலுக்குத் தோல் அமைந்திருப்பது போன்றது. குழவியாய்ப் பிறந்து தாய்ப் பாலுண்ணக் கற்ற நாள் தொட்டே அவனைப் பற்றி நிற்கின்றது மொழி. அதனுலே தான் அது தாய்மொழி எனவும் படுகின்றது. அவனை விட்டு அதை அகற்றுவதென்பது அவன் தோலை உரிப்பதற்குச் சமமாகும். தாய்மொழி வளர்ச்சியே தாய் நாட்டு வளர்ச்சிக்கு அடிகோலுவது.

நாட்டின் முற்போக்கில் நாட்டமுடைய எவனும் தன் மொழிக்குக் கேடு பயக்கும் நச்சுநீர் சுரக்கின்ற ஊற்றுக் கண்களை உடைத்தெறிந்து, அதன் வளர்ச்சிக்கேற்ற வழியைச் செப்பனிட்டுக் கொடுக்கப் பின்னிடமாட்டான். அத்தோடு அவன் வேலை முடிந்துவிடவில்லை. தன் மொழித் தெய்வத்தை அரியாசனத்திலேற்றி ஆணைச் செங்கோலை அவள் கையில் கொடுத்துத் தன் தனயர்களைப் புரக்கும் தகைமையையும் அவளுக்களிக்க வேண்டும். ஆட்சிப் பீடத்தில் ஏருத மொழி வளம் பெற்று வாழாது. அஃது அரசியல் மொழியாக இருந்தால்தான் எல்லாராலும் பயிலப்படும்; எல்லாக்காரியங்களுக்கும் பயன்படுத்தப்படும்; சொல்வளம் பொருள்வளம் தேடித் தரப்படும்; குறைபாடுகள் நிவர்த்திக்கப்படும். அல்லாத வரையில் அறையை விட்டுப் புறம்போகாத கன்னிப் பெண்ணின் கட்டழகு போலப் பயன்பாடின்றிக் கெடுவதே முடிவாகத் தீரும். இதனுலேதான் மொழிப் பிரச்சினை பெரும் பிரச்சினையாக நாடெங்கும் மலிந்து காணலாயிற்று. ஒவ்வொரு மொழி

யாளர்களும் தத்தம் மொழி பேணிச் சுதந்திர வாழ்வதே உண்மையான வாழ்வாகும்.

இனி மூன்ருவதாகச் சொன்ன இனம், தோலோடு கூடிய உடல் போன்றது. ஓர் உடல் இன்னேர் உடல் ஆமாறு இல்லை. அதுபோல ஓரினம் இன்னேரினத்தோடு தொடர்புறுதலும் இல்லை. அது உடலமைப்பால்-உள்ளப் போங்கால்-நடையுடை—பாவங்களால் - நாட்டியல்பால்-மொழி வழக்கால்-நாகரிகத்தால் தம்முள் வேறுபாடுடையது. நமது இந்திய நாட்டைப் பொறுத்தவரை இரு பேரினங்களைச் சிறப்பாகச் சொல்வார்கள். ஆரிய இனம், திராவிட இனம் என்பவை அவை, இவை தூயனவாக இப்போது இல்லையென்றும், தம்முள் சிறுகச் சிறுகக் கலந்துவிட்டன என்றும் சிலர் கூறுவர். ஆயினும் மலையாள நாட்டிற்போல ஆரியக் கலப்பு தமிழ் நாட்டில் செறிந்து நிற்கவில்லையென்று துணிந்து சொல்லலாம்.

மேலே காட்டிய மூவகை இயல்புகளினுலும் திருவிதாங்கோட்டுத் தமிழர்கள், தாய்த் தமிழகத்தாரினின்று சிறிதும் வேறுபட்டவர்களல்லர். அங்குள்ள கிறிஸ்தவர்களுக்கும் இங்குள்ள கிறிஸ்தவர்களுக்கும் தொடர்பு உண்டு. இங்குள்ள இஸ்லாமியர்களுக்கும் அங்குள்ள இஸ்லாமியர்களுக்கும் கொள்வினை கொடுப்புவினைகள் உண்டு. தாயமுறையால் ஒன்றுபட்ட இங்குள்ள சைவ வைணவர்களுக்கும் அங்குள்ள சைவ வைணவர்களுக்கும் உறவு உரிமைகள் உண்டு.

பண்டைநாளில் திருவாவடுதுறை, திருப்பனந்தாள், தருமபுரம், உமையொருபாகக் குருக்கள்மடம் என்பவற்றைச் சேர்ந்த நிலையங்கள் நாஞ்சில்நாட்டில் பல இடங்களிலும் நிறுவப்பட்டிருந்தன அங்குள்ளார்க்குக் குருக்களா

யிருந்தவர்களே இங்குள்ளார்க்கும் மத குருக்களாயிருந்தனர்; இப்போது மிருக்கின்றனர். அம் மடங்களுக்கு இங்குள்ளார் விட்டுக்கோடுத்துள்ள நிலபுலன்கள் ஏராளம். சமயத்தோண்டும் தமிழ்த் தோண்டும் புரிவதற்கேன்று விடப்பட்டவை அவை. இவற்றுல் நாஞ்சில் நாட்டில் ஒரு காலத்தில் சைவமும் தமிழும் தழைத்தோங்கின. பிற் காலத்தில் இவை தம் கடமைகளில் சுருங்சினவேனும் மலையாள ஆட்சியால் தமிழ் அடியோடு அழிந்தோழிந்து போகாமலிருந்ததற்கு இந்த நிலையங்களும் ஒரு காரணம் என்னலாம்.

## தமிழ் வளர்க்கும் சமூகம்

பிற்காலத்தில் தமிழ் வளர்த்த கழகங்களுள் கிறிஸ்தவ சங்கங்களைக் குறிப்பிடாமலிருப்பதற்கில்லை. அவருள்ளும் புரோட்டஸ்டன்று கிறிஸ்தவர் சிறப்பாகப் போற்றுதற் குரியர். அடிப்படைக் கல்வியைப் பரப்புவதற்கு இவர்கள் நிறுவியுள்ள பாடசாலைகள் எண்ணற்றவை. மலையோரங்களிலும், கடலோரங்களிலும், மற்றிடங்களிலும், மலையாளத்தின் நடுவிலும், எங்கணும் இவர்கள் பாடசாலைகளைக்காணலாம். இவ்வாறுபள்ளிகளை நிறுவினதோடன்றி மதபோதனையைத் தமிழில் புகட்டியும் தமிழ் 'பைபிளை'ப் பரவச் செய்தும் இவர்கள் புரிந்துவரும் தமிழ்த் தோண்டு அளப்பரும் பெருமையுடையது. இதனை இடை நாட்டில்-அஃதாவது கல்குளம், விளவங்கோடு முதலான தாலுகாக்களில் சுற்றிப் பார்த்தவர்கள் நன்கு உணர முடியும். அவ்விடங்களில் இவர்கள் தயவாலேதான் தமிழ் நிலைநிற்கிறதேன்று கூறினல் அது மிகையேயல்ல. முதன் முதல் ஒரு அச்சகத்தைக் கோண்டு நாகர்கோவிலில் நிறுவியவரும் இக் கழகத்தாரே யாவர். மட்டுமா?

திருவிதாங்கூரிலேயே முதலில் தோன்றிய ஒரு பத்திரிகை தமிழ்ப் பத்திரிகை; அதுவும் நாகர்கோவிலினின்று இச்சமூகத்தைச் சேர்ந்த ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டது என்று சொன்னால் எவரும் வியப்படையாமல் இரார். 'திருவிதாங்கூர் அபிமானி' என்ற பெயருடன் எழுந்த அது, இன்று 'தியாகநாடு' என்னும் பெயர் தாங்கி உலவுகிறது. இதனைப்போல 75 ஆண்டுகளாக நடந்து வரும் பத்திரிகைகள் விரல் விட்டெண்ணத் தகுந்த அளவில் வெகு சிலவாகத்தான் இருக்கமுடியும். இதுவோ முக்கால் நூற்றாண்டுக்கு முன்னரே தோன்றித் தமிழ் வளம் கர்த்து வருகின்றது.

இங்ஙனம் கிறிஸ்தவ சமுதாயம் பல்லாற்றானும் செய்து வரும் தமிழ்த் தொண்டினை யாவரும் போற்றக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஆனால் இங்கே சிலர் "ஆமாம்; இவை எல்லாம் எதற்கு? தம் மதத்தைப் பரப்பத்தானே!" என்று கேட்கலாம். இருக்கட்டுமே; நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லையும் வளர்த்துகிறதா? இல்லையா? இதை மறைக்கமுடியுமா? மறக்க முடியுமா? ஒருவன் சொன்னான் 'என்னை ஏசுவதானாலும் பொறுத்துக் கொள்வேன்; தமிழில் ஏசு; கன்னா பின்னா என்று பிறமொழியில் ஏசாதே' என்று. தன் இயல்பால் ஏச்சின் கொடுமையையும் மறப்பிக்கும் தமிழ், இந்தச் சமயக் கொள்கையின் வேறுபாட்டையா பெரிதாக எடுத்துக்காட்டி வெறுப்பையூட்டும்? ஒருநாளுமில்லை. தமிழ் என்னும் பொதுமையில் அவையெல்லாம்மறையும்; மாயும் என்பது திண்ணம். இன்னும் அவர்கள் நறுந்தமிழை நன்முறையில் வளர்க்கப் பாடுபடுவார்கள் என நம்புவோம்.

# தமிழ்ச் சான்றோர்.

அதங்கோட்டாசான் முதலான தமிழ்ப் புலமையாளரை ஈன்றளித்த இத்தமிழகம் இன்று அளவிற் சுருங்கிய போதிலும் புலவர் பரம்பரையை முட்டுறச் செய்யவில்லை. நேர்மாருய் ஏனைய தமிழ்ப் பகுதியை விடவும் தமிழறிஞர்களை மிகுதியாகத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது என்றே சொல்லலாம்.

**'தேடி வைத்த செல்வமெலாம் நிரைகொண் டோட வருந்திமுகம்
வாடி மெலிந்த தமிழணங்கு மகிழ்ந்து மகிழ்ந்து கூத்தாட
நாடும் அரிய மனோன்மணிய நாட கத்தைச் செய்தளித்த
நீடு புகழோன்............................................'**

என்று கவிமணியவர்களால் புகழப்பட்ட பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள், இசைப் புலமையும் இலக்கியப் புலமையும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற இசைக்கவியரசு இலட்சுமணபிள்ளை அவர்கள், அரிய கீர்த்தனைகள் பல பாடிய நீலகண்டசிவம் அவர்கள், சட்டஞானமும் தமிழாராய்ச்சித் திறனும் வாய்க்கப்பெற்ற கே. ஜி. சேஷையர் அவர்கள் போன்ற பெரியார்களைத் தமிழுலகுக்கு ஈன்றளித்தபேறு திருவனந்தபுரத்துக்கு உரியதாகும்.

இவரன்றி நாஞ்சில் நாட்டில் தோன்றிய தமிழறிஞர்கள் இன்று தாய்த் தமிழகத்துக்கே புத்தொளி கொடுத்துக் கொண்டிருக்கிருர்கள். அத்தனை கண்களும் புத்தேரியை நோக்குமாறு புலமை சான்றிருக்கின்ற கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களையும் தமிழ்நாட்டின் தலைநகராய சென்னையில் நூறு அவதானங்கள் செய்து 'சதாவதானி' என்றும், 'மகாமதி' என்றும், 'தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்' என்றும் புகழ்ப்பெற்ற கா. ப. செய்குதம்பிப்

பாவலர் அவர்களையும் தோற்றுவித்த பேறு நாஞ்சில் நாட்டுக்குரியதல்லவா? [1]கந்தபுராணக் கீர்த்தனை பாடிய நீலகண்ட ஆச்சாரி அவர்கள், [2]சாணக்கிய சூத்திரம்செய்த அவர் மகனார் கணபதி ஆச்சாரி அவர்கள், [3]லலிதா புராணம் பாடிய தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள், செண்பகராமன் பள்ளு ஆசிரியர், ஆராய்ச்சிப் புலமை சான்ற **K. N.** சிவராஜ பிள்ளையவர்கள் என்போரைப் பிறப்பித்த பெருமை ஏற்கெனவே இந்நாட்டுக்கு உண்டு.

ஜயங்கோண்டானுக்கு ஒப்பான வெற்றிகோண்டான் புலவரைப் படைத்ததும் இந்நாடு. குலோத்துங்க சோழனுடைய படைத்தலைவனாய கருணாகரத் தோண்டைமான் கலிங்கத்தின்மீது கோண்ட வெற்றியைச் சிறப்பித்துக் 'கலிங்கத்துப் பரணி' என்னும் பிரபந்தம் பாடினார் ஜயங்கோண்டான் புலவர். அதுபோலத் திருவிதாங்கோட்டு அரசருக்கும் திப்பு சுல்தானுக்கும் நடந்த போரில் திவான் கேசவதாஸ் பெற்ற வெற்றியைப் பற்றி 'திவான் வெற்றி' என்னும் பெயருள்ள விற்கவிதையாகப் பாடினார் இப்புலவர். திருவானந்தம் பிள்ளை என்பது இவர் இயற்பெயரானாலும் இக் காரணத்தால் இவருக்கு 'வெற்றிகோண்டான் புலவர்' என்னும் சிறப்புப் பெயர் ஏற்படுவதாயிற்று. தோவாளைத் தாலுகாவைச் சேர்ந்த சேண்பகராமன்புதூர் என்னும் ஊரிலே பிறந்தவர் இவர். வாழ்ந்த காலமும் போர் நிகழ்ந்த காலமும் ஒன்று. நூல் பாடப்பட்டது 1795-ல். இஃது ஓர் அழகிய சிறு பிரபந்தம்.*

நாஞ்சில்நாட்டுத் தமிழர்கள் சிறந்த கலாரசிகர்கள். கவிதை, வசனம், ஆராய்ச்சி முதலான இலக்கியத் துறை

**1, 2, 3. இவை இன்னும் அச்சில் வெளிவரவில்லை.**
*** 'Science College Magazine' ல் வெளிவந்தது.**

களிலாகட்டும், தமிழிலக்கணத் துறையிலாகட்டும், இசை நாடகம் ஓடும் படம் விற்கவிதை முதலான நுண்கலைத் துறைகளிலாகட்டும் நாஞ்சில்நாடு தமிழ்நாட்டின் எந்தப் பகுதிக்கும் இளைத்ததல்ல. ஏனைய நில அளவோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இங்கே கலையறிவு மிகுதி என்பதை ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். தகுந்த ஆதரவு கொடுக்கப்படுவதாயிருந்தால் இன்னும் இது எத்துணையோ மடங்கு ஓங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. தமிழர் ஒவ்வொருவரும் தம் நிலை உணர்ந்து உயர்ச்சியெய்த உழைப்பார்களாக. 'உள்ளத்தனையது உயர்வு'.

**'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா**
**ஊக்கம் உடையா னுழை.'** -(பொதுமறை)

வாழ்க நற்றமிழ்; வாழ்கநற் றமிழர்;
வாழ்கநற் றமிழகம்.

---

# பிற்சேர்க்கை.

## I. பக்கம் 28-ல் வரும் மேல் வேம்பநாடு, கீழ் வேம்பநாடு இவை என்பதற்கு ஆதாரம்.

ஒரு காலத்தில் இன்றைய திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த பகுதிகள் மேல் வேம்பநாடு, கீழ்வேம்பநாடு என இரு பகுதிப்பட்டிருந்தன. இவற்றுள் மேல் வேம்பநாடு என்பது கோடகநல்லூரும் அதைச் சூழ்ந்த பக்கமும் ஆகும். கீழ் வேம்பநாடு என்பது திருநெல்வேலியைச் சூழ்ந்த இடங்களாம். இவற்றை,

"திருநெல்வேலி உடையார் தேவதானமும் திருக்காம கோட்டப்புறமும் நமக்கு இறுத்து வரு மந்தராயத்திலே செலவு பெற இத்தேவதானம் **மேல் வேம்பநாட்டுக் கோடனூரான குலசேகர சதுர்வேதி மங்கலத்து** இறுத்து வரும் காசிலே அம்பது காசுக்கு அன்றுடு[1]" -எனவும்,

"கீழ் வேம்பநாட்டுத் திருநெல்வேலி[2]" -எனவும் வருவன கொண்டு அறியலாம். மேலேயுள்ள கல்லெழுத்துப் பகுதி, கோடக நல்லூர் பெரியபிரான் கோவிலில் உள்ளதாகும். இவ்வூர் கோடலூர், கோடனூர், கோடகநல்லூர் எனப் பலவாறு வழங்கப்பட்டு வந்திருக்கிறது. வேப்ப மாலையை யுடையவன் பாண்டியனாதலால் அவன் நாடு வேம்பன் நாடு (வேம்பநாடு) எனப் பெயர் பெற்றதாகல் வேண்டும். இதனை யுணராது திருவிதாங்கூர் ஸ்டேட் மானுவல் எழுதிய திரு. நாகமய்யா அவர்கள் மேல் வேம்ப

1. **Kerala Society Papers Vol. I. P. 272.**
2. **S. I. I. Vol. V. P. 157**

நாட்டை வடதிருவிதாங்கூர் எனக் கூறுகின்றார். அது வருமாறு:-

**"Sri Vallabha Pandya ruled over Eastern and Western Vembanad (i.e. Tinnevelly and North Travancore) until the year 364 - 365 M. E., (1190 A. D.) with Valliyur (ancient name Alliyur) for his capital[1]"**

இத்தவறுதலுக்குக் காரணம், வடதிருவிதாங்கூரில் கிடக்கும் ஒரு பெரிய காயலுக்கு வேம்ப நாட்டுக் காயல் எனப் பெயர் வழங்குவதால் அதை யொட்டிய இடங்கள் வேம்பநாடாயிருக்க வேண்டும் என அவர் கருதியதே யாகும். இப்பகுதிக்குப் பெயர் வேம்பநாடு என்பதல்ல; வெண்பொழி நாடு என்பதாம். இதற்குச் சான்றுகள் இவை:—

க. "வெண்பொலி நாடு -**Venpolinatu**; തെക്കൻകൂർ രാജ്യത്തിന്റെ ഒരു പുരാതന നാമധേയം[2]."

உ. **"The name Vempoli - nadu was, in later times, rendered into sanskrit as Bimbali - desa and its king was consequently styled the Bimbalisa. The later Bimbalisas were known in the Vernacular as the Tekkinkuru - rajas. The large backwater known as the Vembanadu Kayal, lying between Aleppy and Cochin, also derives its name from Vemboli - nadu. It has nothing to**

---

1. Vol. I. P. 253.
2. Lexicon of Travancore Inscriptions.

**do with Vembanadu, a sub-division of the Pandya kingdom, as I once mistook it"** [1]

## II. பக்கம் 28. திரிபுவனதேவி சாசனம்.

ஸ்ரீவீர உதயமார்த்தாண்ட மன்னன் மகளும், மாற வர்மன் ஸ்ரீ வல்லபன் மனைவியுமான திரிபுவனதேவியின் சாசனமொன்று சில காலங்களுக்கு முன் கண்டெடுக்கப் பட்டது. இவ்வெழுத்துக்கல் கன்னியாகுமரியினின்று எழு கல்லுக்கு வடக்கே யிருக்கும் **இரவிபுதூர்** என்னும் பழை மையும் வளமையும் சான்ற ஊரையடுத்துள்ள காடவன் குளத்துப்புரவு நாவலடிப் பற்றில் கிடந்தது. இதனை முத லில் கண்டவர் திருவிதாங்கூர் சாசன இலாகாவில் உதவி யாளராயிருந்த திருவாளர் T. S. கணேசபிள்ளை யவர் களாவார். இதுபற்றி 1938 ஆகஸ்டு மாதம் 2 ஆம் நாள் வெளியான 'மலையாள மனோரமை' என்னும் நாளிதழில் **'A Twelth Century Queen'** என்னும் தலைப்பில் ஓர் ஆங்கிலக் கட்டுரை வெளிப்படுத்தினார்கள். திரு. கவி மணியவர்கள். திரு. நாகமய்யா அவர்கள் எழுதிய ஸ்டேட் மானுவல் முதல் தொகுதி 254 ஆம் பக்கத்தில் இந்தக் கல்லெழுத்தைப் பற்றிய செய்தி வருகிறது. ஆனால் அது எங்கிருக்கிறதென்று கூடக் குறிப்பிடவில்லை. வேறு யாரும் இதுகாறும் வெளிப்படுத்தினதுவுமில்லை. இக்கல் இப்போது பத்மநாபபுரம் அரண்மனையைச் சார்ந்த பழை மைப் பொருட்காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கிறது.

திரு. கணேசபிள்ளை யுவர்களின் கையெழுத்துப் பிரதியில் கண்டபடி சாசனப்பகுதி கீழே தரப்படுகிறது

---

1. T. A. S. Vol II. P. 141.



திரிபுவன தேவி சாசனம்

| கல்லில் கண்டது. | இதனை இவ்வாறு படிக்கலாம். |
|---|---|
| "ஸ்வஸ்தி ஸ்ரீ சேர திருவ | "ஸ்வஸ்தி ஸ்ரீ சேர திருவ |
| ஞும் விளங்க திருவவதார | (ம்ச)ம் விளங்க திருவவதார |
| ஞ் செதருளிய உதைய மா | ம் செ(ய்) தருளிய உதையமா(ர்) |
| தா மண்ட | த்தா(ண்)ட மண்ட |
| பமும் ஸ்ரீ வல்லவ ளு டை | பமும் ஸ்ரீ வல்லவ (பெருமாளு) டை |
| டய நம்பிரானுர் திருவஞ | டய நம்பிரானுர் திருவ(ம்) |
| சம் விளங்க எழுந்த | சம் விளங்க எழுந்த |
| ருளு மினைய ளு ளு ம பிர | ருளு மினைய (பெருமாளு)ம் பிர |
| தாந.....................சரமு | (சாதம்)..................சரமு |
| டைய நயினுர் திருக் | டைய நயினுர் திருக் |
| கோயில் ஆவணமும் | கோயில் ஆவணமும் |
| உதைய மாத்தாண் | உதய மா(ர்)த்தாண் |
| ட திரு புவன தெவி | ட திரிபுவனதேவி |
| யு மாசந்திரா......வா" | யு மாசந்திரா...............வா" |

சாசனம் பழங்காலத் தமிழெழுத்தில் பொறிக்கப் பட்டிருக்கிறது. கல்லின் நடுவில் ஓர் அழகிய பெண் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. ஒரு காலை மடக்கி ஒரு காலைத் தொங்கவிட்டுக்கொண்டும், இரு கைகளிலும் இரு தாமரைப் பூக்களை ஏந்திக்கொண்டும், ஓர் தாமரை மலர் மீது வீற்றிருப்பதாகவுள்ள அத்தோற்றம் கண்ணுக்கினிய காட்சியாகும். அவ்வுருவத்தின்மீதே மூன்று வரி எழுத்துக்களும், கீழே 11 வரிகளும் காணப்படுகின்றன. இப் பகுதிகளால் திரிபுவனதேவி பேரால் மண்டபமொன்று கட்டியது பற்றி எழுந்த சாசனமாக இருக்கலாமோ இது என்று ஒருவாறு ஊகிக்கலாம். இதுவன்றி எதுவும் தெரிவதற்கில்லை. சாசனம் முழுமையும் கிடைக்காமற்போனது வருந்தத்தக்கது.

## III. பக்கம் 39.

### வானவன் நாடு இதுவெனக் கூறும் கல்வெட்டு.

1. "ஸ்வஸ்தி ஸ்ரீ அருளிச் செயல் **வானவனுட்டு** ப்ச் சாற்றுப் போக்கு களக்காடான சோழகுலவல்லிபுரத்து நயினுரீ புர வேரி சுவாமி உடையநயினுர்க்கு உச்சசந்திபூசை உடன்கூட்டி அமுதுபடி குறுணி

2. ஆக நடக்கக் கற்பித்து தேவதானம் ஆக விட்டுக் கொடுத்த நிலம் களக்காடு தானப்பற்றில் ஆண்டான்குளம் ஆருங் கண்ணுறு..................................................................

......................................................................................

......................................................................................

11. காமன் அய்யப்பன் எழுத்து[1]"

இது களக்காடு பெருமாள் கோவில் வடக்குச் சுவ ரில் பொறிக்கப் பெற்றுள்ளது. வானவன் நாடானது களக்காட்டுப் பகுதியேயாம் என்பது இதனுல் விளக்க முறும்.

---

1. தே-வி உதவியது.